# மங்கையர் மலர்

மார்ச் '87 விலை ரூ 3/-



## நாங்கள் என்ன எதிர்பார்க்கிறோம்?

-கலந்துரையாடல்

## கண்ணைப் பறிக்கும் வெண்மை அளிக்கிறது – புதிய, உபயோகிக்க எளிதான ரானிபால்!

பருத்தி ஆடைகள் தனியே, ஸிந்தெடிக்ஸ் தனியே என யார் துவைப்பது? எனக்கு ரானிபால் உபயோகிக்க நேரமே கிடையாது.

என்ன அப்படிச் சொல்கிறாய்? இப்போது, புதிய ரானிபால் பருத்தி, ஸிந்தெடிக் ஆடைகள் இரண்டிற்குமே உபயோகிக்கலாம் தெரியுமா?

ஆம், பலவருட ஆராய்ச்சியின் விளைவே புதிய ரானிபால். அது உங்களுக்கு அளிக்கும் நன்மைகளைப் பாருங்கள்:

உபயோகிக்க எளிது: சோப் அல்லது டிடர்ஜெண்டுடன் நீரில் அப்படியே சேர்க்கலாம்.

சிக்கனமானது: ஆடை ஒன்றுக்கு 3 பைசாவுக்கும் குறைவாகவே செலவு.

சௌகரியமானது: இப்போது பருத்தி மற்றும் ஸிந்தெடிக் ஆடைகள் இரண்டிற்கும் ஒரே ரானிபால் உபயோகிக்கலாம்.

புதிய ரானிபால் உபயோகித்துப் பாரீர். அதன் கண்ணைப் பறிக்கும் வெண்மையை உண்மையில் கண்டு கொள்வீர்.



இனி சோப் டிடர்ஜெண்ட் இவற்றுடன் கூடவே நீரில் ரானிபால் சேர்க்கலாம்.



சோப் கட்டி/பார் சோப் உபயோகிக்கையில் அலசியபின் நீரில் ரானிபால் சேர்த்து, 5 நிமிடங்களுக்கு அமிழ்த்தி வைக்கவும்.



பருத்தி, ஸிந்தெடிக் ஆடைகள் இரண்டிற்கும் வெண்மை அளிக்கிறது.




125 கிராம், 75 கிராம், 25 கிராம் மற்றும் 1.5 கிராம் பைகளில்.

**ரானிபால் வெண்மை–இப்போது சௌகரியமாகப் பெறலாம்!**

Mudra : B : IDI : 4176 : TM

# காது கேளாத குழந்தையென கண்டுபிடிப்பது எப்படி?

இதோ சில கேள்விகள்:

ஒவ்வொரு வயது கட்டத்திற்கும் எனச் சில பிரத்தியேக செவியுணர்வு சோதனைகள் உள்ளன. இவற்றை வைத்து உங்கள் குழந்தையைச் சோதித்துப் பாருங்கள். எந்த கட்டத்திலேனும் "இல்லை" என்ற பதில் கிடைக்கப் பெற்றால், உங்கள் குழந்தையின் கேட்கும் திறனில் சந்தேகத்திற்குரிய இடம் உள்ளது. உடனடியாக அருகில் உள்ள காது இயல் நிபுணரின் ஆலோசனையைப் பெறுங்கள்:

**0 — 4 வாரம் வரை:**

* எங்கிருந்தோ திடும்மென்று வரும் பெரும் சப்தம் உங்கள் குழந்தையை அதிர்ச்சிக்குள்ளாக்குகிறதா?
* உங்கள் குழந்தை உங்களை நேரில் பார்க்காமல் இருந்து, மறைவிலிருந்து வரும் உங்கள் பேச்சு, குழந்தையைப் பாதிக்கிறதா?
* ரேடியோவில் வரும் பாடல்கள் நிகழ்ச்சிக்கு உங்கள் குழந்தை திரும்பிப் பார்க்கின்றதா?

**4 வாரம் முதல் 6 மாதங்கள் வரை:**

* பேசுவது யார் என்று உங்கள் குழந்தை திரும்பிப் பார்க்கிறதா?
* தலைப்பக்கம் நின்று யாராவது குரல் கொடுத்தால், உடலை அசைத்துப் பார்க்க முயற்சி செய்கிறதா...?
* குரல் வரும் திசையை அறிந்து ஏதாவது சப்தம் செய்கிறதா?

**6 மாதங்கள் முதல் 12 மாதங்கள் வரை:**

* நுண்ணிய சப்தங்களை உங்கள் குழந்தை அடையாளம் கண்டு கொள்கிறதா?
* தலையின் மறைவிலிருந்து கொண்டு நீங்கள் பேசும்பொழுது உங்கள் குழந்தை சமாதானமோ/எதிர்ப்போ தெரிவிக்கிறதா?
* ஓரிரு வார்த்தைகளாவது உங்கள் குழந்தை தெளிவாகப் பேசுகிறதா...? தனிமையில் தானாகப் பேசிக் கொள்கிறதா?

**12 மாதங்கள் முதல் 18 மாதங்கள் வரை:**

* அசைவுகள் எதுவுமின்றி முகபாவத்துடன் மூன்றடித் தொலைவுக்குள்ளாக நீங்கள் கொஞ்சும் போதோ, தட்டும் பொழுதோ அதை உங்கள் குழந்தை ஓரளவுக்காகிலும் புரிந்து கொள்கிறதா...?
* சில வார்த்தைகளை எளிதில் தெளிவாக உச்சரிக்கிறதா?
* சில சுற்றுப்புற சப்தங்களைப் போல தானும் சப்தம் செய்கிறதா...?
* சப்தம் வெளிவரும் திசையைச் சரியாக அடையாளம் கண்டு கொள்கிறதா?

**18 மாதங்களுக்கு மேல் உள்ள குழந்தைக்கு:**

* குழந்தை இருக்குமிடத்திலிருந்து 15 அடி தொலைவில் எங்கிருந்து கூப்பிட்டாலும் பதிலளிக்கிறதா?
* உங்கள் உதட்டசைவைக் கவனிக்காமல், நீங்கள் சொல்லும் ஒற்றைச் சொற்களை குழந்தை திரும்பச் சொல்கிறதா?
* எந்த சப்தம் எதற்குச் சொந்தம் என்று உங்கள் குழந்தை சரியாக இணைக்க முடிகிறதா?
* அம்மா, அப்பா, அக்கா, அண்ணா, அத்தை போன்ற சொற்களை சரளமாக உங்கள் குழந்தை சொல்கிறதா?

இவைகளுக்கு ஏதேனும் ஒரு கட்டத்தில் இல்லை என்னும் பதில் வருமானால் உடனடியாக நீங்கள் மருத்துவரை அணுக வேண்டும்.

நன்றி: இனார்க் பள்ளி
தொகுப்பு: ராஜம் ராமசாமி



# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது, காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலாதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




## 23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | ரிபோ |
| கொழுப்பு | ஃப்ளேவின் |
| கார்போ | நிகோடி |
| ஹைட்ரேட் | னமைட் |
| கால்ஷியம் | கால்ஷியம் |
| பாஸ்பரஸ் | பென்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | பைரிடாக்ஸின் (பி6) |
| (உப்பு வடிவில்) | வைட்டமின் (பி12) |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் ஸி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி1' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



## காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு

B84, GLC. 120 Tm

# ஒரு காலத்திலே சாதுதான்!

சுரேஷ் கதவைத் திறந்த உடனேயே பாட்டியின் வாயிலிருந்து வார்த்தைப் பொறிகள் பொறிந்துத் தாக்கின. கோபமும் சிரிப்புமாக வந்தது சுரேஷுக்கு.

"கல்யாணத்தப்போ, வாயிலே விரலை விட்டா கடிக்கத் தெரியாம இருந்தவளாடா? இருபத்தஞ்சு வருஷத்திலேஒருநாள் அனுசரிச்சுண்டு போயிருக்காளா இவ?"

அப்பா எப்பவும் உப்புக்குச் சப்பாணி. ஈஸிசேரில் உட்கார்ந்து கொண்டு ரீகனின் ஸ்டார்வார்ஸைப் பற்றிப் படித்துக் கொண்டிருப்பார். இந்தச் சண்டையின் முன் ஸ்டார்வார்ஸ் எம்மாத்திரம்...? சுரேஷுக்குச் சில சமயம் சந்தேகம்தான் — அவர் 'ஹியர்ப்ளக்' உபயோகிக்கிறாரோ என்று.

அவன் உடை மாற்றிக் கொண்டு வயிற்றைக் கவனிக்க உட்கார்ந்தான். சண்டை இறுதி ரவுண்டில் இருந்தது. அம்மா தோசையையும், வார்த்தைகளையும்சமமாகச்சூடாகப் பரிமாறிக் கொண்டிருந்தாள். இன்னும் பாட்டி படுக்கும் வரை 'மொணை மொணை' யென்று ஆத்மநாதையர் (கோபத்தில் ஆத்மநாதையன் ஆகிவிடுவார்) பேச்சைக் கேட்டு, சாதுப் பெண் என்று நம்பி, கால் நூற்றுண்டுக்கு முன் தான் செய்த தவறை நொந்து கொண்டிருப்பாள்.

சுரேஷ் வாய் விட்டுச் சிரித்தான்.

"என்னடா, என்ன சிரிப்பு?" அம்மாவின் போட்ட எல்லைக் கோடுகளுக்குள் ஆடும் வரை, அம்மா ரொம்ப நல்லவள். அம்மா சொன்ன நாளில் எண்ணெய் தேய்த்துக் கொண்டு அவள் சொன்ன நண்பர்களோடு பழகி, அவள் சொன்ன படிப்பைப் படித்து...

"ஏண்டா மாமா கொடுத்த பெண் ஜாதகம் நல்லா பொருந்தியிருக்காம். ஞாயிற்றுக்கிழமை பெண் பார்க்க வரதாகச் சொல்லிட்டேன்."

மனத்தில் ஐஸ்கிரீம் இறங்கியது. எப்படி இருப்பாள் அந்தடபின்கிராஜுவேட்...அனுராப் ஜலோடாவின் கஜல் பாடும் பெண்...?

கண்களில் மானின் மருள் தெரிந்தது. அமரிக்கையாக, அடக்கமாக, அழகாக இருந்தாள். எல்லோருக்கும் திருப்திதான்.

கழுத்தில் ரோஜா மணம் வீச, பேரன் பெண்டாட்டியோடு நமஸ்கரித்த போது, பாட்டியின் கண்களில் வானவில் சிரித்தது...

மாலினிமோகன்



போட்டியோ போட்டி:

# புதுமொழிகள்



மனைவி வருவாள் பின்னே; மெட்டி ஓசை வரும் முன்னே!

பெண்ணைப் பெற்றுப் பார்! படிக்க வைத்துப் பார்!

பெண் வளரும் வரை பவுன் விலை ஏறுதிருக்குமா?

— ரம்யா.

அன்னை இல்லா இல்லம்,
அன்பே இல்லா உள்ளம்.

— சு. இளங்கோ.

குடம் துலங்க மண்ணு;
குலம் விளங்க பொண்ணு!

— ஆர். சேகர்.

வீடு அஸ்திவாரத்தின் மீது நிற்க வில்லை; அன்னையின் மீது நிற்கிறது.

— ஆர். எஸ்.

'படி'க்கவும் வேண்டும்;
'வடி'க்கவும் வேண்டும் பெண்கள்.

— முத்துலட்சுமி.

ஆசைக்கு ஒரு மகன்,
அன்புக்கு ஒரு மகள்!

— மீனு ரமணி.

''அலுவலகத்துக்கும் போகணும்;
அடுப்படியிலும் வேகணும்.''

— வி. அலமேலு.

பாங்கு வேலைப் பெண்;
மண மார்க்கெட்டின் கண்.

— லதா மோஹன்.

பெண்ணின் பொறுமை புடைவை கடையில் தெரியும்.

— சாரதா.

கணிதத்தில்கற்றதுகம்ப்யூட்டர் அளவு
கல்லாதது கணிதமேதை சகுந்தலா
அளவு. — சுந்தர் சுந்தரி.

காசுக்கு விலை பேசும் ஆவை,
தூசுக்குச் சமமாக நினை.

— லலிதா மணியன்.

ஞாயிறு, திங்கள், செவ்வாய் என்று வேக வேகமாக ஒரு மாதம் ஓடிவிட்டது.

இரண்டு நாட்களாக ஆபீஸுக்குப் போக ஆரம்பித்தாகி விட்டது. ஒரு மாதமாகச் சமாதான உடன்படிக்கை போலத் தெரிந்தது. பாட்டியின் மொண மொணப்பு காணோம்.

மாலை வந்தபோதே கண் பரபரப்புடன் தேடியது. சுபா கஞ்சி மொடமொடப்பில் கருநீல சுங்கடியில் கண்களிலே வரவேற்பு தெரிய நின்று கொண்டிருந்தாள். வாய் சீட்டி அடிக்க ஆரம்பித்தது.

''ஏண்டா.''

சோப்பு முகத்துடன், கண்ணிருந்தும் குருடனை, ''என்ன?'' என்றான். ''நீ சொல்ல லையாடா அவளுக்கு? காதிலே ரிங்கை மாட் டிண்டு இருக்காளே, சகிக்கலே. பாட்டிக்குப் பிடிக்காதுன்னு சொல்லு.''

என்ன? பாட்டிக்குப் பிடிக்காதா? யார், அம்மாவா சொல்வது? ரிங்கைக் கழற்றச் சொல்லிவிட்டான். வாங்கிக் கொடுத்ததே தான்தான் என்று சொல்ல தைரியமில்லை.

நல்ல வேளை சுபா சாது. அம்மா ஒன்று சொல்ல, இவள் ஒன்று சொல்ல என்று இருந்தால்...

பஸ் ஸ்டாப்பில் நாணு அகப்பட்டான். ''உங்க வீட்டுக்குத்தான் கிளம்பினேன் சுரேஷ். பிரீமியர் ஷோ டிக்கெட் கிடைத்தது. ரமா ஊரில் இல்லை. நீ போகிறாயா?''

சந்தோஷம் சீட்டியாக ஒலிக்க வீட்டை அடைந்தால் இன்று கஞ்சி மொடமொடப்பு இல்லை. காஞ்சீபுரம்...

''நீ வரணும் என்றுதான் காத்துக் கொண் டிருந்தேன். பவானி வீட்டுக்கு நானும் சுபாவும் போயிட்டு வர்றோம். அதனாலே வர முடியலே.''

மென்று மென்று விழுங்கியும் சுரேஷ். வயிற்றிலிருந்து தைரியம் வாய்க்கு வருவதற் குள், அம்மா கிளம்பியாகி விட்டது.

ராத்திரி சுபாவிடம் சொன்ன போது, சிற்றமாகக் கேட்டாள். ''தைரியமா கேட்டா என்ன?''

'.தைரியமாகக் கேட்கலாம்தான். தைரியத் தின் பின்விளைவுகளைத் தாங்க முடியுமா?

சின்னச் சின்ன விஷயம்தான். விட்டுக்

கொடுத்தே பழகிவிட்டது. ஆனால் சுபா முன் மாதிரி இல்லே. இரவில் குற்றச்சாட்டுக்களும், மொண மொணப்பும் இருட்டில் தூரத்தின. அப்பாவின் 'ஹியர் ப்ளக்'கைக் கேட்க லாமா என்று சுரேஷ் யோசித்தான்.

அன்று ஆபீஸிலிருந்து வந்தபோது, சுபா வின் முகம் நூறு வாட் பல்பு போல் ஒளிர்ந் தது. சரி, ஏதானும் நல்ல சமாசாரம்தான். சினிமாவில் வருவது போல் இரவில் வெட்கப்பட்டுக் கொண்டு சொல்வாளா? அதென்ன அந்த பழகிப் போன டயலாக்?

அம்மா கோவிலுக்குக் கிளம்பின உடனே சுபா அறைக்கு வந்தாள். சுரேஷ் தன் டயலாக்கை ரெடி செய்து கொண்டான். ''அப்பா போன் செய்தார். ஜீஜியைப் பெண் பார்க்க வராங்களாம். முத நாளே வரச் சொல்லியிருக்கா.'' பிறந்தகத்தில் சீராடும் ஆர்வம் வெளிப்படையாகத் தெரிந் தது.

''ப்ளீஸ், நீங்களே அம்மாவிடம் கேட்டு அனுப்புங்க. நான் போகாட்டா நல்லாயிருக் காது.''

அம்மா இதற்குஎதற்குமறுப்புச் சொல்லப் போகிறுள்? சுபா ஆனலும் பயந்தாங் கொள்ளி.''

ராத்திரி ஊறுகாயின் உறைப்புடன் மோர் சாதம் இறங்கும் போது அம்மாவைக் கேட் டான்.

''ஏம்மா, சுபா அப்பா போன் செய் தாரா?''

''ஆமாமாம். அவ தங்கையைப் பெண் பார்க்க வராங்களாம்.''

''சுபாவை அனுப்பச் சொல்லியிருக் காளா?''

''ஒவ்வொரு தடவை பெண் பார்க்கறச்சே யும் இவள் போக முடியுமாடா? நான் வேறே அன்னிக்கு பவானி வீட்டுக்குப் போக ணும். சாயங்காலம் வேணு போகட்டும்.''

''போகட்டுமேம்மா'' சுபாவமாகபயத்தில் குரல் தேய்ந்தது.

''எப்படிடா சும்மா போறது? ஆடிக்குப் போயாச்சு. குடும்ப நிலவரத்தையே பார்க் காம இருந்தால் எப்படி? வேலே செய்ய ஆள் வேணும். வருந்தி வருந்திக் கூப்பிடறு!''

சம்பந்தி அவள் வாயில் அகப்பட்டுப் பல விதமான பட்டப் பெயர்களோடு வெளிவந் தார்.

டெபாஸிட் இழந்து, ஈஸிசேரில் மறைந் தான் சுரேஷ்.

ஐயோ, இது யார், கண் சிவக்கக் கத்து வது? சுபாவா? அந்தச் சாதுப் பெண்ணு?

''என்னே என்ன வேணுச் சொல் லுங்க. கேட்டுக்கறேன். என் அப்பாவை இழிவாப் பேச வேண்டாம். திஸ் இஸ் தி லிமிட்.''

'குருக்ஷேத்திரம்' தான்...

பாட்டி சொல்வதுதான் நிஜம். அம்மா வும் ஒரு காலத்தில் சாதுவாகத்தான் இருந் திருப்பாள். ஆண்களின் கோழைத்தனம் தான் இவர்களே இப்படிச் செய்வது.

ஏகாக்கிர சிந்தையுடன் 'ஸ்டார் வார் ஸை'ப் படிக்கத் தொடங்கினுன் சுரேஷ்.

# மங்கையர் மலர் நாவல் போட்டி

நவம்பரிலும் மீண்டும் ஜனவரியிலும் அறிவித்திருந்த நாவல் போட்டிக்கு ஏராளமான நாவல்கள் வந்துள்ளன. நடுவர்கள் குழு நாவல்களேப் பரிசிலித்துக் கொண்டிருக்கிறது.

நடுவர்கள்

மாண்பமை முன்னுள் நீதிபதி மு.மு. இஸ்மாயில்,

திரு கஸ்தூரி ரங்கன்,
(பொறுப்பாசிரியர், தினமணிக்கதிர்)

திருமதி கலாதாக்கர்
(பேராசிரியர், பெண்கள் வைணவக் கல்லூரி)

திரு கி. இராஜேந்திரன்
(ஆசிரியர், கல்கி)

திருமதி மஞ்சுளா ரமேஷ்

## போட்டியோ போட்டி:

ஒவ்வொரு தை வெள்ளிக்கிழமையும் உண்ணா நோன்பு இருந்து மஞ்சள் இடித்து, கடைசி தை வெள்ளியன்று மஞ்சள் பூசிய தேங்காய்க் கலசத்திற்குப் பூஜை செய்து விரதத்தை முடிப்பேன். மாவிளக்கு ஏற்றி அம்பிகையை வழிபடுவேன். இது எங்கள் குடும்ப வழக்கம். அதேபோல் இந்தத் தை மாத வெள்ளியன்று மாவிளக்கு ஏற்றினேன். விரதம் முடிக்க ஐந்து சுமங்கலிகளை அழைத்து பூ, வெற்றிலைப் பாக்கு, பழங்கள், ரவிக்கைத் துணி மற்றும் சிறிது மாவிளக்கு மாவு எல்லாமும் வைத்துக் கொடுத்தேன்.

அப்போது தற்செயலாகக் கலசத்தைப் பார்த்த எனக்குப் பகீரென்றது. கலசத்திற்குப் போட்டிருந்த மூன்று பவுன் சங்கிலியைக் காணோம். அரக்க பரக்க எங்கு தேடியும் கிடைக்கவில்லை. எனக்குச் சமைக்க உதவியாய் வந்த பெண்ணின் மீதுதான் சந்தேகம் எழுந்தது. பேச்சும் செயலும் இயல்பாக இல்லை.

பையைப் பிரித்துக் காட்டச் சொன்ன போது, அதில் நான் கொடுத்திருந்த மாவிளக்கு உருண்டை வெற்றிலைப் பாக்கு தான் இருந்தது. நான் பிடித்த உருண்டை போலில்லாமல் வேறு மாதிரி இருந்தது. எனக்குச் சட்டென்று பொறி தட்டியது. அந்த மாவு உருண்டையைப் பிட்டுப் பார்த்ததில் அதனுள் செயின் பளபளத்தது. கண்களில் கண்ணீருடன் அந்தப் பெண்மணி என்னிடம் மன்னிப்புக் கோரினார். நல்ல நாளும் அதுவுமாக நானும் மன்னித்து விட்டேன். அவர் மனத்தை புண்படுத்த விரும்பாமல்.

பிரேமா எஸ். ராவ்.

திருநெல்வேலி மாவட்டத்தில் கிராமங்களில் பெண்கள் மட்டுமே மேற்கொள்ளும் ஔவையார் விரதம் என்ற ஒரு விரதம் உண்டு. ஆடி, தை, மாசி ஆகிய மாதங்களில் செவ்வாய்க் கிழமை மட்டுமே பெண்கள் இதனை ஏற்பது வழக்கம். இரவில் ஊரடங்கியபின் (11 மணிக்கு மேல்) பெண்கள் அனைவரும் ஒரு தனியான வீட்டில், அநேகமாக ஆண்களில்லாத வயதான பெண்மணியின் வீட்டில் கூடுவார்கள்.

இவ்விரதத்தை மேற்கொள்ளும் ஒவ்வொரு பெண்ணும் அரிசி மாவும், தேங்காயும் எடுத்து வருவார்கள். இரவில் உப்பில்லாமல் கொழுக்கட்டையை மொத்தமாகச் செய்து நீரில் வேக வைத்து, கும்பம் வைத்து விளக்கேற்றி சுவாமிக்குப் படைத்து, தேங்காய் உடைத்து ஔவையாரை நினைத்து வழிபடுவர். இரவு முழுவதும் விழித்திருந்து விரதத்தின் மகிமையை வயதான மூதாட்டி கூறி விடிவதற்குமுன் வீட்டிற்குத் திரும்புவர். விரதக் கொழுக்கட்டையை பெண்கள் மட்டுமே உண்பது வழக்கம். ஆண்கள் அதைப் பார்க்கவும் கூடாது என்பது ஐதீகம். •

## விரதத்தில் சங்கடம்





நாங்கள் ஒருமுறை விரதத்தை ஊருக்கு ஒதுக்குப்புறமுள்ள மிகப் பெரிய வீட்டில் (பார்ப்பதற்கு நமது பழைய திரைப்படத்தில் வரும் பாழடைந்த பங்களாத் தோற்றம்) மேற்கொண்டோம். வீட்டில் வயதான மூதாட்டியைத் தவிர ஒருவரும் கிடையாது. விரதத்தைக் காரணம் காட்டி இரவில் வந்து படுக்கும் தோட்டக்காரனையும் வரவேண்டாம் என்று சொல்லி விட்டோம்.

இரவு 11 மணிக்கு நாங்கள் (மொத்தம் 5 பேர்) அனைவரும் வீட்டின் நடுவில் உள்ள பெரிய கூடத்தில் பேசிக்கொண்டே பூஜைக்கு ஆயத்தம் செய்தோம். அந்த வீட்டில் மற்ற எல்லா அறைகளும் பூட்டியிருந்தன., நாங்கள் சரியாக ஒரு மணியளவில் கொழுக்கட்டை செய்து சுவாமிக்குப் படைத்தோம். திடீரென 'தடால்' என்று மிகப் பெரிய சப்தம்.

அதைத் தொடர்ந்து பெரிய வெண்கலப் பாத்திரங்கள் உருளும் பயங்கரமான ஓசை.

நாங்கள் அனைவரும் அலறி அடித்துக் கொண்டு ஓடி ஓர் அறையில் சென்று கதவைப் பூட்டிக் கொண்டோம். அனைவருக்கும் வியர்த்துக் கொட்டியது. யாரும் பேசவே யில்லை., இந்த நிலையில் திடீரென விளக்கு கள் அணைந்துவிட்டன. ஒரே திகில். வேண்டாத தெய்வமில்லை. வெளியில் ஆள் நடமாடும் சப்தம் கேட்க நடு நடுங்கியபடி அந்த அறையிலேயே ஒரு வர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு அமர்ந்திருந்தோம்.

மறுநாள் காலையில் எங்களைத் தேடி வீட்டி லுள்ளவர்கள் விடிந்து வெகுநேரம் கழித்து வந்தனர். பின்னர் அறையைத் திறந்து கொண்டு வெளியில் வந்த நாங்கள் நடந்ததை அவர்களிடம் கூற அனைவரும் சென்று



பாத்திரம் இருந்த அறையைத் திறக்க அங்கு ஒரு குரங்கு (ஊரில் குரங்குகள் நடமாட்டம் அதிகம்) எங்களைப் பார்த்து முறைத்தது. பகலில் எப்படியோ அந்த அறையில் புகுந்த குரங்கை கவனிக்காமல் அந்த வீட்டிலிருந் தவர் அறையைப் பூட்டிவிட்டார் என்பது பின்னர் தெரிந்தது. அதன் பிறகு ஒளவை யாரா? விரதமா? பேச்சு எடுத்தாலே வீட்டில் அனைவரும் முறைக்கின்றனர்.

— மா. அனுசூயா

**கா**லை ஆறு மணிக்கு பெங்களூரை விட்டுப் புறப்பட்ட உத்யான் ரயிலில் பம்பாய் நோக்கிப் போய்க் கொண்டிருக் கிறேன். அன்று ஸ்ரவண தினம். ஆகவே உப்பில்லாமல் சிறிது கஞ்சி மட்டும் ஒரு ஃபிளாஸ்கில் போட்டுக் கொண்டு மீதிப் பொழுதை ரயிலில் படுத்தே கழித்துவிட்டு மறுநாள் விடியும்போது பம்பாய் போய்விட லாம் எனத் திட்டமிட்டிருந்தேன். நான் ஏறிய பெட்டியில் மூன்று வடக்கத்திக் குடும்ப மும் ஒரு தமிழ்க் குடும்பமும் இருந்தன. காலை மணி பத்து இருக்கும். ஒரு வடக்கத்திய குடும்பம், பிளாஸ்டிக் கூடையிலிருந்து பூரி, செனா, தக்காளி, சப்ஜி என அவைகள் இருந்த பாத்திரங்களைத் திறந்து வைத்தது. மசாலா வாசனை மூக்கைத் துளைத்தது. பெட்டி யில் இருந்த மற்றவர்களுக்கு இரண்டு பூரி சப்ஜி போட்டுக் கொடுத்தபடி அந்த ஹிந்தி பேகம் அம்மாள் என்னையும் விசாரித்தாள். நான் எனது உண்ணாவிரத நிலையை விவரித் தேன்.

பதினொரு மணிக்குத் தமிழ்க் குடும்பம் தனது இட்லி, சட்னி கடையைப் பரப்பியது. செந்தமிழ் நாட்டு இட்லி என்றதும் சனியன் பிடித்த நாக்கு நீரைச் சுரந்தது. "இட்லி சாப் பிடேம்மா..." என்றதும், "வேணாங்க... உப்பு போட்ட எதுவும் இன்னிக்கு சாப் பிடக் கூடாது..."

பகல் ஒரு மணிக்குச் சாப்பாடு அமர்க் களமாய் நடந்தது. அவரவர்கள் டிபன் காரி யரைத் தூக்க முடியாமல் தூக்கித் திறந்தனர். ஆலு பரோட்டா, கோபி சப்ஜி, பச்சைப் பயிறு கூட்டு, கொத்துமல்லி சட்னி என வடக்கு மணத்தது. புளியோதரை, சுட்ட அப்பளாம், தயிர் சாதம், ஊறுகாய் எனத் தெற்கு மணத்தது. இரு தரப்பினரும் என்னை மறுபடி உபசரித்தனர். வயிறு 'வா, வா' என்றாலும் வாய் துரோகம் செய்யவில்லை. ஒருவழியாக மாலை டீ, பிரெட் மற்றும் காலை மீதமிருந்த சாப்பாட்டு வகைகளை முடித்துக் கொண்டு காலி டிபன் காரியர்களைப் பையில் போட்டுவிட்டு எல்லோரும் தத்தம் பெர்த்தில் சாய்ந்தனர்.

நான் ஃபிளாஸ்கிலிருந்து மீதமிருந்த கஞ் சியை வாயில் ஊற்றிக் கொண்டு, உபவாச தினத்து உண்ணாவிரதத்தைச் சபலம் ஏற் பட்டும் வெற்றிகரமாய் முடித்துக் கொண்ட பெருமையுடன் தூங்க ஆரம்பித்தேன்.

— எஸ். கீதா

**என்** தோழி ஒரு பிடிவாதக்காரி. வியாழக்கிழமை அன்று மௌன விரதமும், வெள்ளிக்கிழமை விரதமும் இருப்பது பழக் கம். எவ்வளவுதான் நெருக்கடி வந்தாலும் அந்த இரண்டு விரதத்தையும் கைவிட்ட தில்லை அவள்.

பிள்ளை வீட்டார் அவளுடைய போட்டோ வைப் பார்த்து விட்டுப் பிடித்திருப்பதாகச் சொல்லி நிச்சயம் செய்ய நாள் குறித்தார் கள். பெண் வீட்டாருக்கு வேண்டாதவர் கள் யாரோ ஒருவர் "நீங்கள் பார்த்திருக்கும் பெண் ஊமை" என்று மொட்டைக் கடிதம் எழுதி விட்டார்கள் பிள்ளை வீட்டாருக்கு.

அது உண்மையா என்று தெரிந்துகொள்ள விழைந்த பிள்ளை வீட்டார் வியாழக்கிழமை பார்த்து வீட்டிற்கு வர, பிடிவாதமுள்ள தோழி மௌன விரதத்தைக் கடைப்பிடிக்க பிள்ளை வீட்டார் பெண்ணை வேண்டா மென்று கூறிவிட்டுச் சென்று விட்டார்கள்.

சுற்றியுள்ள உறவினர்களும், தோழிகளும் அவளை "என்ன இருந்தாலும் ஒரு பெண் ணுக்கு இத்தனை பிடிவாதம் கூடாது. நீ இருந்த

## ரஸ்க் அல்வா

தேவையான பொருட்கள்:

ரஸ்க் — 100 கிராம் (பேக்கரிகளில் கிடைக்கும்)
நெய் — 50 கிராம்,
சர்க்கரை — 100 கிராம்,
முந்திரி — 10 கிராம்,
ரோஸ் எசென்ஸ் — ஒரு சில துளிகள்,
பால் — ½ லிட்டர்,
தேவையானல் ஏலக்காய் — 2.

செய்முறை:

ரொட்டிக் கல்லில் முதலில் சிறிது நெய் விட்டு ரஸ்க்குகளை சிவக்க டோஸ்ட் செய்து, அதை அம்மியில் வைத்து மாவாகப் பொடி செய்து கொள்ளவும். ஒருபாத்திரத்தில் பாலை ஊற்றிக் காய்ச்சி, அதில் பொடி செய்த ரஸ்க்கை விட்டு, கட்டி வராமல் கிண்டவும். மாவு வெந்து வரும் சமயம் சர்க்கரை, மீதியுள்ள நெய் ஊற்றிக் கிண்டவும். கேசரி பதத்திற்கு வந்ததும் இறக்கி ரோஸ் எசென்ஸ் விடவும். எசென்ஸ் வாசனை பிடிக்காதவர்கள் ஏலக்காயை பொடித்துப் போடவும். பரிமாறும் முன் முந்திரியை நெய்யில் வறுத்து அதனுடன் சேர்த்து பரிமாறவும்.

— அ. க. மும்தாஜ்.

## பாசிப் பருப்பு மோர்க் குழம்பு

பாசிப் பருப்பு — 2 டீஸ்பூன்,
பச்சரிசி — 2 டீஸ்பூன்,
இஞ்சி — 1 துண்டு,
தாளித்த கடுகு — ½ டீஸ்பூன்,
கெட்டியான கடைந்த புளித்த மோர்— 1 டம்ளர்,
உப்பு — தேவையான அளவு.

செய்முறை:

பாசிப் பருப்பை லேசாக வறுத்து பச்சரிசியுடன் தண்ணீரில் சிறிது நேரம் ஊற வைக்கவும். அதனுடன் இஞ்சியையும் சேர்த்து அரைத்தெடுத்து மோருடன் உப்பையும் சேர்த்துக் கலந்து அடுப்பில் வைக்கவும். ஐந்து நிமிஷம் கொதியபின் இறக்கித் தாளித்த கடுகை அதில் போடவும். கறிவேப்பிலையும் போடலாம். சிறிதளவு மிளகை வெறும் வாணலியில் வறுத்துப் பொடி செய்து இறக்கும் போது போடலாம். மோர்க் குழம்புக்கு போடக் கூடிய காய்களை உப்புப் போட்டு வேக வைத்து மோர்க் குழம்பில் போடலாம்.

— விசாலாட்சி.

---

விரதத்தால் உனக்கு என்ன நன்மை?" என்று திட்டிவிட்டுச் சென்றுர்கள்.

தோழி அதுபற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை.

ஒன்றுமே வேண்டாம், பெண் கொடுத்தால் போதுமென்று வந்த அந்தப் பையன் ஒரு மோசடிக்காரன் என்றும், பெண்களை ஏமாற்றித் திருமணம் செய்து கொண்டு போய் பம்பாயில் விற்று விடுபவன் என்றும் பேப்பரில் பார்த்த பிறகுதான் அனைவருக்குமே தெரிந்தது. தோழியின் விரதத்தின் மகிமை.

அதற்குப் பிறகு தோழிக்கு நல்ல வரன் கிடைத்து தற்பொழுது குடியும், குடித்தனமுமாகச் சிறப்போடு வாழ்வது மட்டுமல்ல; இன்னமும் மௌன விரதத்தை விடாமல் காப்பாற்றி வருகிறுள்.

அவளைப் பார்த்து நாங்களும் விரதத்திற்கு அடிமையானது நிஜம்.

— சரஸ்வதி.

**நா**ன் பதினைந்து வயதில் வெங்காயம் சாப்பிடுவதில்லை என விரதம் வைத்துவிட்டேன். எங்கள் வீட்டில் ஏகப்பட்ட எதிர்ப்புக்கள். இருந்தாலும் விடாமல் கடைப்பிடித்தேன்.

ஒருமுறை என் சகோதரியோடு சென்னை சென்றிருந்தேன். சினிமா செல்வதில்லை, பவுடர் பூசிக் கொள்வதில்லை (திருமணம் ஆகும் வரை) என்றெல்லாம் வேறு கொள்கைகள் வைத்துக்கொண்டிருந்தேன். சினிமா கிளம்பிய என் அத்திம்பேர், நான் வரவில்லை என்றதும் கோபித்துக் கொண்டு, கடைசியில், அவருடைய தங்கையின் உறவினர் ஒருவர் வீட்டில் விட்டுவிட்டு சினிமா சென்றனர்.

எல்லோருமே புதிய முகங்கள். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் நான் சாப்பிடத் தட்டு நிறைய பக்கோடா கொண்டு வைத்தார்கள். எனக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. வெங்காயம் சாப்பிட மாட்டேன் என்றுல் ஏன், என்ன என்று கேள்விகள் கேட்டுத் துளைப்பார்கள். மேலும் அத்திம்பேர் வந்ததும் சொல்லி மறுபடியும் பிரச்னைகள். சண்டைகள், வரும். யோசித்தேன். ஒரு யுக்தி தோன்றியது.

"சாப்பிடேன், என்ன யோசிக்கிறுய்?" என்ற கேள்வி பிறந்தது. "இதில் வெங்காயம் இருக்கிறதா?" என்றேன்.

"ஆமாம்" என்றுர்கள்.

"ஐயோ! வெங்காயமா, எனக்கு அலர்ஜி. தொட்டாலே அலர்ஜி வந்துவிடும். சாப்பிட்டால் உடம்பு முழுவதும் பூச்சிக்கடி போல் தடித்துவிடும்" என்றதுதான் தாமதம், தட்டை எடுத்துக் கொண்டு ஓடிவிட்டார்கள். எனக்கோ விரதம் வீணுகவில்லை என்ற குஷி. நிம்மதிப் பெருமூச்சுவிட்டேன்.

— கமலா.

# மஹாப்ரதோஷத்தின் பெருமை

ப்ரதோஷ சமயத்தில் பரமசிவனுடைய தாமரை போன்ற சரணங்களில் பூஜையை வேறு இடத்தில் மனத்தைச் செலுத்தாமல் ஏகாக்ர பக்தியுடன் எவர்கள் செய்கிறார்களோ, அவர்கள் இந்த ஜன்மாவிலேயே தனம், தான்யம், மனைவி, ஸந்நிதி, ஸௌபாக்யம், பொருள் இவைகளின் மிகுதியை நிச்சயமடைகிறார்கள்.

ப்ரதோஷ காலத்தில் மஹா கைலாச மலையிலுள்ள திருக்கோயிலில் ஸ்வர்ணமயமான ரத்ன மஞ்சத்தில் உலக மாதாவான பராசக்தியை அமரச் செய்து பரமசிவன் நர்த்தனம் செய்ய விரும்பும்பொழுது எல்லாத் தேவர்களும் பின்பற்றி பஜனம் செய்கின்றனர்.

ஸரஸ்வதி வீணை வாசிக்கின்றாள். தேவேந்திரன் புல்லாங்குழல் வாசிக்கின்றார். பிரும்ம தேவன் தாளம் போடுகின்றார். லக்ஷ்மி பின்பாட்டு பாடுகிறாள். மஹா விஷ்ணு மிருதங்கம் வாசிக்கின்றார். இவ்விதம் ப்ரதோஷ ஸமயத்தில் பரமசிவனுடைய தாண்டவத்தை தேவர்கள் சுற்றிலுமிருந்து கொண்டு சேவிக்கின்றனர்.

மஹா ப்ரதோஷ சமயத்தில் கந்தர்வர்கள், யக்ஷர்கள், பதகர்கள் (பட்சிகள்) உரகர்கள், (ஸர்ப்பங்கள்) சித்தர்கள் ஸாத்யர்கள், வித்யாதாரர்கள் மற்றுமுள்ள சிறந்த தேவர்கள் அபஸரஸ்திரிகணங்கள் மற்றும் மூவுலகத்திலுள்ளவர்களும் பூதவர்க்கத்துடன் பரமசிவனின் பக்கத்திலிருந்து கொண்டு சேவிக்கின்றனர்.

— ப்ரதோஷாஷ்டகம்





உஷா



அன்னபூரணி



# இம்மாத இல்லத்தரசி

## முதல் பரிசு — ரைஸ் குக்கர் ஸ்டஃப்ட் ரைஸ் பரோட்டா

தேவையான பொருட்கள்:

புழுங்கலரிசி — ½ கிலோ,
வேக வைத்த உருளைக் கிழங்கு — ¼ கிலோ,
முளை கட்டிய பயிறு — 100 கிராம்,
பொட்டுக்கடலை மாவு — 50 கிராம்,
காரப் பொடி — 3 டீஸ்பூன்,
கொத்துமல்லித்தழை — 1 கட்டு,
உப்பு — தேவையான அளவு,
டால்டா அல்லது நெய் — சப்பாத்தி சுட்டு எடுக்கத் தேவையான அளவு.

செய்முறை:

புழுங்கலரிசியை அலம்பி வடிக்கட்டி உலர்த்தி மாவாக்கிக் கொள்ளவும். பிறகு தேவையான அளவு உப்பு, தண்ணீர் சேர்த்துப் பிசைந்து இரண்டு மணி நேரம் (குறைந்தது) ஊற வைக்கவும்.

வேக வைத்த உருளைக்கிழங்குடன் முளை கட்டிய பயிறு, நன்றாக அரிந்த கொத்து மல்லித் தழை, காரப் பொடி, தேவையான அளவு உப்பு சேர்த்துக் கலக்கவும். பிறகு இக்கலவையுடன் பொட்டுக் கடலை மாவைக் கலக்கவும். இந்தக் கலவையைச் சிறிது சிறிதாக உருட்டிக் கொள்ளவும்.

பிறகு பிசைந்த புழுங்கலரிசி மாவைச் சிறிய சிறிய (அப்பளமாக) இட்டுக் கொள்ளவும். இந்த அப்பளத்தின் நடுவில் மசாலாவை வைத்து மூடி கையில் சிறிது எண்ணெய் அல்லது டால்டாவைத் தொட்டுக் கொண்டு வட்ட அல்லது முக்கோண வடிவில் தட்டி தோசைக் கல்லில் போட்டுச் சிறிது டால்டா அல்லது நெய் போட்டு சுட்டு எடுக்கவும்.

புதினா சட்னி இதற்கு ஏற்றதாகும்.

— உஷா சந்திரசேகர், கல்கத்தா — 31.

## இரண்டாம் பரிசு — மூடி அடுக்கு பேஸின் ரோல்

தேவையான பொருட்கள்:

கடலை மாவு — 1 கிண்ணம்,
தயிர் (அ) கெட்டி — 2 கிண்ணம்,
மோர் (புளிக்காதது) — தேவைக்கேற்ப,
கோதுமை மாவு — 1 டீஸ்பூன்,
ஓமம் — 1 டீஸ்பூன்,
காரப் பொடி — ½ (அ) 1 டீஸ்பூன் (போடாமலும் பண்ணலாம்)
உப்புப் பொடி — தேவையான அளவு,
கொத்துமல்லி — ½ கட்டு (சிறியது) (அ) 2 ரூபாய்க்கு.
தேங்காய் — 1 மூடி,
எண்ணெய் — 2 டேபிள் ஸ்பூன்,
கடுகு — 1 டேபிள் ஸ்பூன்,

ட்னி செய்ய:

பச்சை மிளகாய் — 12 (அ) 15,
கொத்துமல்லி — 1 கட்டு.

உப்பு — தேவையான அளவு.
பூண்டு — 4 (அ) 5 துண்டு.
புளி — சிறிது.

செய்முறை:

முதலில் கடலை மாவு, மோர், கோதுமை மாவு, ஓமம், உப்பு, காரப் பொடி எல்லாவற்றையும் ஒரு பாத்திரத்தில் போட்டுக் கட்டி இல்லாமல் நன்கு கரைக்கவும். அது தோசை மாவை விடக் கொஞ்சம் கெட்டியாக இருக்கும். பிறகு ஒரு வாயகன்ற அடிகனமான வாணலி (அ) இலுப்பச் சட்டியில் இக்கலவையைக் கொட்டி அடுப்பில் வைக்கவும். அடுப்பை நிதானமாக எரிய விட வேண்டும். பிறகு கை விடாமல் கிளற வேண்டும்.

கலவை நன்கு வெந்து வாணலியில் ஒட்டாமல் அதாவது கண்ணாடி மாதிரி சுருண்டு வரும். சமயத்தில் அடுப்பை மிகவும் சின்னதாக்கிவிட்டு நாலைந்து சாப்பிடும் தட்டுக்களில் (ரவுண்டு தட்டுகளில் சிறிது பெரியது) மேல் பாகமும், உள் பாகமும் நல்லெண்ணெய் சிறிது தடவவும். பிறகு எல்லாத் தட்டுகளின் மேல் பாகங்களில் ஒரு கரண்டி இக்கலவையை ஊற்றிச் சூடு ஆறும் முன்பே தட்டின் எல்லா இடங்களிலும் மெல்லியதாகப் பரவலாகத் தடவவும். அதுபோல் உட்புறமும் செய்யவும்.

ஒரு நிமிடம் கழித்துக் கத்தியினால் மெல்லியதாக ஒரு கோடு கிழித்துக் கொள்ளவும். பிறகு ரோல் பண்ண வேண்டும். நன்கு சுருட்ட (ரோல்) வரும். எல்லாம் பண்ணிய பிறகு அந்த ரோல்களை இரண்டு (அ) மூன்றாக வெட்ட வேண்டும். அவை பார்க்கச் சின்னச் சின்ன ரோல்களாக இருக்கும். எல்லாவற்றையும் தட்டு (அ) பேஸினில் அழகாக அடுக்கி வைக்கவும். (தேங்காயைத் துருவி அதன் மீது தூவவும். கொத்துமல்லியைப் பொடியாக நறுக்கி அதையும் தூவவும். ஒரு வாணலியில் 2 டீஸ்பூன் எண்ணெய் விட்டுக் கடுகைப் போட்டு வெடிக்க விட்டுப் பரவலாக ஊற்றவும். இதுவே பேஸின் ரோல்.

பிறகு சட்னிக்கு சொன்ன பொருட்களைப் போட்டுச் சட்னி அரைத்து அதனுடன் சாப்பிடச் சுவையாக இருக்கும்.

ரேணுகா, பம்பாய் — 22.

## மூன்றும் பரிசு — தூக்கு

## போளி அப்பம்

தேவையான பொருட்கள்:

2 கப் பச்சரிசி மாவு நன்றாக வறுத்துப் பொடி செய்தது.
ஆப்ப சோடா — சிறிதளவு.
முட்டை — 1.
தேங்காய் — 1.
தேவையான அளவு — உப்பு.

செய்முறை:

தேங்காயை உடைத்துத் துருவி பால் எடுத்துக் கொள்ளவும். (கட்டியாக) அதில் பாதி பாலை லேசாகச் சூடு பண்ணி அத்துடன் கொதிக்கும் தண்ணீர் ஒரு கிளாஸ் ஊற்றி, அந்தக் கைபொறுக்கும் சூடுள்ள தண்ணீரை மாவில் ஊற்றி முட்டை, சோடா உப்பு, சமையல் உப்பு சேர்த்து இட்லி மாவு பதத்திற்குப் பிசைந்து, தோசைக்கல்லில் சூடானதும் இட்லி அளவிற்கு ஊற்றி மூடி வேக வைத்து எடுக்கவும்.

இதை மீதமுள்ள தேங்காய்ப் பாலில் ஊற்றிச் சர்க்கரை போட்டுச் சாப்பிடலாம். எண்ணெய்ச் செலவு சிறிதும் இல்லாதது.

பி.கு.: வேண்டாதவர் முட்டை சேர்க்காமலும் செய்யலாம்).

— கீதாபுகழேதரன், பொன்புதுப்பட்டி.

## ஆறுதல் பரிசு — கேஸ்லைட்டர்

## டூட்டி ஃப்ரூட்டி ஸாலட்

தேவையான பொர்ருட்கள்:

வாழைப்பழம் — 4.

பரிசுப் பொருட்கள்:



(எந்தப் பழமானாலும் பரவாயில்லை)
ஆப்பிள் — 4.
தக்காளி — 4.
காரட் — 4.
வெள்ளரிக்காய் — 2.
வெல்லப்பொடி — 6 டேபிள் ஸ்பூன்.
தேன் — 4 டேபிள் ஸ்பூன்.
ஏலக்காய் — 5 அல்லது 6
தயிர் — 4 கோப்பை.

செய்முறை: தயிரில் வெல்லப்பொடி, ஏலக்காய்ப் பொடி, தேன் எல்லாம் கலந்து 'மிக்ஸியில்' கலந்து கடைந்து வைக்கவும்.

காரட், வெள்ளரிக்காயை துருவிக் கொள்ளவும். பழம், ஆப்பிள் இரண்டையும் பொடியாக நறுக்கவும். இவைகளைத் தயிருடன் சேர்த்துக் கொள்ளவும்.

தக்காளியை அதிகம் பொடியாக நறுக்க வேண்டாம். அதையும் சேர்த்துத் தயிருடன் கலந்து விருந்தினருக்குப் பரிமாறவும்.

— லக்ஷ்மிகணேஷ், கோவை — 2.

## ஆறுதல் பரிசு — கேஸ்லைட்டர்.
## வெஜிடேரியன் கபாப்ஸ்

தேவையான பொருட்கள்:

அவல் — 1 கப்.
சோயா பீன்ஸ் ஊற வைத்தது — ½ கப்.
(அ) ந்யூட்ரெல்லா — ரெடி சோயா பீன்ஸ்.
உருளைக்கிழங்கு — இரண்டு.
ப்ரெட் க்ரம்ப்ஸ் — 1 கப்.
கொத்துமல்லி — தேவைக்கேற்ப.
எண்ணெய் — ½ கிலோ.
பச்சை மிளகாய் — தேவைக்கேற்ப.
சிறிய தேங்காய் பத்தை.

செய்முறை:

உருளைக்கிழங்கை வேக வைத்து நன்றாகப் பொடியாக்கிக் கொள்ளவும். அவல், சோயா பீன்ஸ், ப்ரெட் துண்டுகள் எல்லாவற்றையும் ஊற வைத்துத் தண்ணீர் வடித்துப் பிசிறி விடவும். கொத்துமல்லி, மிளகாய், தேங்காய் இவற்றை மிக்ஸியில் போட்டு அரைத்து விடவும். தேவையான அளவு உப்புப் போட்டு எல்லாவற்றையும் கலந்து சிறுசிறு குலோப் ஜாமுன் அளவில் கபாப்ஸ் தயார் செய்து கொள்ளவும்.

வெஜிடேரியன் என்கிற பட்சத்தில் ஐந்து ஸ்பூன் மைதா மாவில் தண்ணீர் விட்டு பஜ்ஜி மாவு போல் கரைத்து கபாப்ஸை இதில் முக்கி எடுத்து எண்ணெயில் குறைந்த தீயில் வைத்துப் பொரித்து எடுக்கவும்.

நான்—வெஜிடேரியன் என்கிறபட்சத்தில் முட்டையின் மஞ்சளை கலவை போல் ஆக்கி கபாப்ஸை முக்கி எடுக்கவும். கொத்துமல்லி சட்னியுடன் சாப்பிட மிகவும் சுவையாக இருக்கவும். பொரித்தெடுத்தவுடன் ஹாட் ப்ளேட்டில் சூடு படுத்தினாலும் மிக அதிக கரகரப்பாக இருக்கும். இது கட்லெட் மாதிரி ஸ்பெஷல் அயிட்டமாக இருக்கும்.

— டி. அன்னபூரணி, பம்பாய் — 36.

---

# இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: 'டிபன்' உணவு | கடைசி தேதி: 15.3.87

**சமையல் கூப்பன்**

.................. என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

நண்பனொருவனின் ஒன்றரை வயதுப் பையன் தூளியில் தூங்கிக் கொண்டிருந்தவன் திடீரென்று நடுஜாமத்தில் பெருங்குரலெடுத்து அழ ஆரம்பித்து விட்டான். தூளியிலிருந்து எடுத்துப் பார்த்தால் உடம்பு பூராவும் எறும்பு மொய்த்துக் கொண்டு கடித்துக் கொண்டிருக்கிறது. போட்டிருந்த சட்டையையும் ஜட்டியையும் கழற்றி எறிந்துவிட்டு உடலில் ஒட்டியிருந்த எறும்பையெல்லாம் தட்டிவிட்டுப் பார்த்தால், கழுத்து மார்புப் பகுதியில் சாக்லேட் கலந்த எச்சில் பிசுபிசுப்பு, சட்டைப்பாக்கெட்டில்எச்சிலில் ஊறிய அரை சாக்லேட்! தூளியில் போடும் போது, நண்பனின் மனைவி அதைக் கவனிக்கவில்லை. தாய்மார்கள் குழந்தைகளை தூளியில் போடும் போது குழந்தைகளின் உடம்பைத் துடைத்துவிட்டு, முடிந்தால் வேறு உடை மாற்றிப் படுக்க வைக்க வேண்டும்.

— துடுப்பதி வெங்கண்ணா.

• ஹெலன் கெல்லர்



பிரபஞ்சத்தின் முடிவற்ற அற்புதங்களை கிரகிக்கும் சக்தி எந்த அளவிற்கு நம்மிடமிருக்கிறதோ அந்த அளவிற்கே அவை நமக்குக் காட்டப் பெறுகின்றன. நம்மால் எந்த அளவுக்குப் பார்க்க முடியும் என்பதையல்ல, நம்மால் எந்த அளவுக்கு உணர முடியும் என்பதைப் பொறுத்தேயிருக்கிறது நமது திருஷ்டியின் கூர்மை.

வெறும் அறிவு மட்டும் அழகைச் சிருஷ்டித்து விடாது. தன்னிடம் அன்பு காட்டுபவர்க்கே இயற்கை தன்னுடைய நேர்த்தியான கீதங்களை இசைக்கிறாள். ஆராய்ச்சியில் தமக்குள்ள ஆவலைப் பூர்த்தி செய்வதற்காக, உண்மை விவரங்களைத் திரட்டுவதற்காக மட்டும் செல்பவர்களிடம் அவள் தனது இரகசியங்களை வெளியிடுவதில்லை.

— 'ஹெலன் கெல்லரின் சிந்தனைகள்'

— அன்பழகன்.

# குறையுள்ள பெண்ணுக்கும் குழந்தை உண்டு!

சமீபத்தில் அமெரிக்காவிலிருந்து சென்னை வந்திருந்த டாக்டர் ஜான் ஈபஸ்டர் குறையுள்ள பெண்மணிக்கும் குழந்தை பிறக்கும் என்றார். கருப்பையிலோ, ஃபெலோபியன் குழாயிலோ குறை இருந்து ஒரு பெண்மணிக்குக் குழந்தை பிறக்க வாய்ப்பில்லை என மருத்துவர்கள் கூறியிருக்கலாம். கணவர் குறையெதுவும் இல்லாதவராக இருக்கலாம். இப்படிப்பட்ட தம்பதிகளுக்கும் குழந்தை பிறக்கச் செய்து சாதனை புரிந்திருக்கிறார்கள் அமெரிக்காவில்.

கணவரின் ஆரோக்கியமான விந்துவை எடுத்து, தாயாகும் தகுதி பெற்ற ஒரு பெண்ணின் கருப்பையிலுள்ள முட்டையில் சேர்க்கிறார்கள். இரண்டும் இணைந்து கருவாக மாறியவுடன் ஐந்து அல்லது ஆறு நாட்களுக்குள் அந்தக் கருவை அந்தப் பெண்ணின் கருப்பையிலிருந்து எடுத்து, முதலில் கூறிய கணவனுடைய மனைவியின் கருப்பையில் சேர்த்து விடுகிறார்கள். இதனால் கருத்தரிக்க இயலாதபெண்ணின் வயிற்றில் கரு வளர்ந்து குழந்தையாகிறது.

இப்படிப்பட்ட 'கரு மாற்று சிகிச்சை' யினால் என்ன தனிப்பட்ட பலன்?

ஆராய்ச்சி சாலையில் டெஸ்ட் டியூபில் குழந்தை உருவாகாமல் பெண்ணின் கருப்பையிலேயே உருவாகிறது. கரு நிலையிலேயே குறையுள்ள பெண்ணின் கருப்பைக்குச் சென்று விடுவதால் அந்தத் தாய்க்கும் மனோநிலை பாதிக்கப்படுவதில்லை. தாய்க்கும் சேய்க்கும் இடையிலான உறவு பாதிக்கப்படுவதில்லை' என்றார் டாக்டர்.

சென்னை கே. ஜே. மருத்துவமனை இவரை வரவேற்று, இவருடைய ஆராய்ச்சியை பொது மக்களுக்கு எடுத்துக் கூறியது. அமெரிக்காவில் இந்த முறையில் இதுவரை பதின்மூன்று பெண்கள் குழந்தை பெற்றிருக்கிறார்களாம்.

— புவனேஸ்வரி





அந்த அதிகாலை வேளையில் கொட்டும் பனியில் என் மனைவி உமா ரயில்வே ஸ்டேஷனில் மாருதியில் காத்திருந்தாள்.

விடியற்காலை ஐந்துக்கெல்லாம் வர வேண்டிய ரயில் இன்றைக்கு முப்பது நிமிஷம் லேட்.

அந்த அதிகாலை வேளையில் அவள் வருகை எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது.

"என்ன உமா, இந்தக் கொட்டற பனியில நீயே வரணுமா?"

"ஏன் வந்தா என்னங்க?"

"கொட்டற பனில வந்தா உன் கைகளும் காலும் சொரசொரன்னு பனிக்கு..."

"இதப் பாருங்க, இது ஒண்ணும் வியாதியில்லை. சில பேர்களுக்குக் காலில் ஆணி வரதில்லையா அது போலத்தான் இதுவும். நான் எவ்வளவோ முறை சொல்லியாச்சு உங்ககிட்ட இந்த முப்பது வருஷ தாம்பத்யத்தில. ஆனா...."

"ஐய்யய்யோ என்னைக் கொல்லாதே உமா, உன் பேரில உள்ள அனுதாபத்தால தான் சொன்னேன். பனிக் காலமானா கால்களிலும், கைகளிலும் லேசா பிளந்துக்குது. பார்க்கவே கண்றாவியா இருக்கு நீ படற பாட்டைப் பார்த்தா..."

"இதை இத்தோட விடுங்க. நான் காலைல உங்களைத் தேடி வந்தது...."

"ஆச்சரியமாய்த்தானிருக்கு உமா. மாசத்தில இருபது நாட்கள் வியபார நிமித்தம் ஊர் போறது வரது எனக்கு சகஜம். சொந்த வியாபாரம். நாமே ஒவ்வொண்ணையும் கவனிக்கலைனா எப்படி...."

"பிசினஸ் இருக்கட்டும், பிசினஸ். வேணாது சம்பாதிச்சாச்சுங்க. நமக்கிருக்கிறது ஒரே பெண். அவ நல் வாழ்வு ஒண்ணு தானே நமக்கு இனி எல்லாம்.

"என்ன உமா, நம்ம பெண்ணுக்கு எதில நாம குறை வைச்சோம். பார்த்துப் பார்த்து ஒவ்வொண்ணையும் செஞ்சோம். படிக்க வைச்சோம். ஏகப்பட்ட தடபுடலா கலியாணம் பண்ணி வைக்கலையா?"

"பணம் சீர் செனத்திங்களைக் கொட்டிக் கொடுத்தா மட்டும் ஒரு பெண் சந்தோஷமா வாழ்ந்துடுவா — மனக்குறையே இல்லாம, எதையுமே பணத்தால சாதிச்சுட முடியும்னு நினைக்கிறீங்களா நீங்க?"

"என்ன உமா சொல்றே நீ? எனக்கொண்ணுமே புரியலையே..."

"காலங்கார்த்தால ஏன் வந்தே ஸ்டேஷனுக்குன்னு கேட்டீங்களே..."

"ஆமாம்."

"ஒரு வாரமாச்சுங்க நான் தூங்கி..."

"என்ன உனக்கு உடம்புக்கு. டாக்டருக்குப் போன் பண்ணினா வந்து கவனிச்சிருக்க மாட்டாரா?"

"வியாதி உடம்பில இருந்தாத்தானே?"

"பின்னே என்ன சொல்றே நீ?"

"நம்ம பெண் வீட்டுக்கு வந்திருக்காங்கன்னு சொல்றேன்."

"வரட்டுமே, நம்ம பெண், நம்மை விட்டு வேறே எங்கே போவாள்?"

"நான் சொல்றதே புரியலைங்க உங்

# தனக்கென்று வரும்போது...

களுக்கு.''

''என்னன்னு விவரமாய்த்தான் சொல்லேன்.''

''நம்ம வீட்டுக்கே வந்துட்டா நம்ம பெண். இனி அவபுருசன் வீட்டுக்கே போகமாட்டான்னு சொல்றேன்.''

''ஏன்னு கேட்கிறேன். வரதட்சணை கொஞ்சமா கொடுத்தோமா? சீர் செனத்திகள் அள்ளிவிட்டோம். அதைத் தவிர அவங்க கேட்காமலேயே ஸ்கூட்டர் வீடு இதெல்லாம் வாங்கிக் கொடுக்கலையா... இன்னும் ஏதாவது வேணுமானு பஞ்சப் பசங்களுக்கு வாரி விடத் தயார்....''

''பணம் காசு, சொத்து, சுகம் ஆள் படை அம்பு சேனைன்னு சொல்வாங்களே அது மட்டுமே ஒருத்தருக்கு சந்தோஷத்தைக் கொடுத்திடும்னு நீங்க நினைக்கிறீங்க. நா அப்படியில்லைன்னு சொல்றேன்.''

''என்ன உமா....?''

''மாதா பிதா செஞ்சது பிள்ளைகள் தலையிலம்பாங்க. ஒருகணம், ஒரே ஒரு கணம், நம்ம வாழ்க்கையை நினைச்சுப் பாருங்க. நான் குத்திக் காட்டறதா மட்டும் தயவு பண்ணி நினைக்காதீங்க.''

''என்னைக் கொல்லாதே உமா, நான் செஞ்சது மன்னிக்க முடியாத குத்தம்தான். உங்கப்பா, அம்மா என்ன வேதனை பட்டிருப்பாங்கன்னு இப்ப ஒரு தகப்பன் ஸ்தானத்திலிருந்து எனக்குப் புரியுது''

நினைவு பின்னோக்கி ஓடுகிறது.

**உ**மாவைப் பெண் பார்த்துவிட்டு வந்தவுடனே 'ஓகே'யென்றேன்.

கலியாண பந்தலில் உமா கையைப் பிடிக்கும்போதே சொரசொரவென்றிருக்கிறது. கைகள் மெத்மெத்தென்று பஞ்சு போலில்லை. என் கனவு கலைகிறது.

'ஹோ'வென்று கத்தி ஆர்ப்பாட்டம் பண்ணுகிறேன்.

கைகளில் உட்பாகத்தில் லேசான பித்த வெடிப்பு. எனக்குக் கல்யாணம் நடந்தது தை மாதம். நல்ல பனிக் காலம்.

''என்ன மாப்பிள்ளை'' என்று ஓடி வருகிறார் உமாவின் தகப்பனார்.

பலர் முன்னிலையில் உமாவின் கைகளைக் காட்டச் சொல்கிறேன்.

''பெண் கைமாதிரியா இருக்கு, சொர சொரன்னு இல்லை?''

''இது ஒன்றுமில்லை மாப்பிள்ளை, பித்த வெடிப்பு சில பேர்களுக்கு இயற்கையிலேயே இப்படி அமையறதுண்டு. அதுவும் பனிக் காலம்னா கொஞ்சம் அதிகம்.''

பலர், பலவிதமாய் சமாதானம் சொல்ல மாங்கல்யதாரணம் முடிகிறது.

அன்றிரவே மறுபடியும் பிரளயம் நடக்கிறது.

''என்ன மாமா இது, கையில மட்டும் லேசா பித்தவெடிப்பு, பனிக்காலம்னு சொன்னீங்க. கால்கள்ல என்ன இது அசிங்கமா, பாளம், பாளமா வெடிச்சிருக்கு. தண்ணியைக் காணாத வயல் மாதிரி!''

''என்னை மன்னிச்சிடுங்க மாப்பிள்ளை. இது ஒண்ணும் வியாதியில்லை. பரம்பரை, பரம்பரையா வர்றது. இத பாருங்க எனக்குக் கால்களில் எப்படியிருக்குன்னு, கைகளும் கொஞ்சம் சொர சொரப்பாய்த்தானிருக்கும். அதுக்காக எனக்குக் கல்யாணமாகாம இல்லை. பிள்ளை குட்டிங்க பிறக்காம இல்லை. இத்தனை வருஷங்களில் ஒரு தலை வலி, ஜுரம்னு நா படுத்ததில்லை. இதுக்காக என் மனைவி என்னோட வாழாம இல்லை.''

''வீண் கதையெல்லாம் எதுக்குங்க. என்னை ஏமாத்திட்டீங்க. இன்னைக்கு பாக்கி சடங்கெல்லாம் கிடையாது. நல்ல டாக்டரா பார்த்து இதை குணமாக்க முடியும்னு எனக்கு நம்பிக்கை ஏற்பட்டாத்தான் மேற்கொண்டு எதுவும்...''

''பாக்கி சடங்கெல்லாம் நடக்குதோ, நடக்கலையோ என் தலைவிதிப்படி நடக்கட்டும். ஆனா எப்ப தாலி கட்டியாச்சோ உங்க வீட்டுக்குக் கூப்பிட்டுட்டுப் போயிடுங்க. ஓர் ஓரமாய் நான் இருந்துக்கிறேன்.''

பிறகு உமாவைச் சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தனர்.

கூடிய வரையில் அவளை நெருங்குவது இல்லை. தண்ணீர் கூட அவள் கையால் வாங்கிக் குடிப்பதில்லை. வீட்டிலும் தனியறை அவளுக்கு. குடிக்க தனி டம்ளர், சாப்பிடத் தனித் தட்டு.

''பெரிய பெரிய வியாதிகளுக்கெல்லாம் மருந்து கண்டுபிடிச்சாச்சு. ஓபன் ஹார்ட் சர்ஜரி பண்றாங்க. மூளையைத் திறந்து ஆபரேஷன், சிறுநீரக மாற்று அறுவை

கௌசல்யா ரங்கநாதன்

சிகிச்சைன்னு எல்லாம் வந்தாச்சு. ஏன்? குஷ்டத்தையே குணப்படுத்த முடியுது. அதை விடவா இது பெரிய வியாதி...? கூடிய வரையில பத்துப் பாத்திரம் தேய்க்காம கால்களிலும் செருப்பு போட்டுக்கிட்டு நடந்தா அதிக பாதிப்பு இருக்காது. கை கால்கள் சொர சொரப்பா இருக்குமேயொழிய இது ஒண்ணும் வியாதியில்லே.''

''போடி போ, என் ஆசைக் கனவெல்லாம் பாழாச்சே. உன்னை ஏமாத்தி என் தலையில கட்டிட்டான் உங்கப்பன். உன் மூச்சுக் காத்துக் கூட என் பேரில் பட அனுமதிக்க மாட்டேன்.''

உமா ரொம்பப் பொறுமை. தினம் ஒரு டாக்டர், கோயில்கள், விரதம், எல்லாம் பார்த்தாகி விட்டது.

''கூடிய வரையில் அவளை ஒண்ணும் செய்யச் சொல்லாதீங்க. அவ கையிலே எதுவும் கொடுத்தனுப்பாதீங்க'' என்பேன்.

என்ன சித்திரவதையை அனுபவித்திருப்பாள் என்று எனக்கு இப்போது காலம் கடந்து புரிகிறது.

காலப்போக்கில் விரும்பத் தகாத மாற்றமாய் எனக்கு ஒரு பெண் பிறந்தவுடன் சுரீர் என்று தைத்தது. நெஞ்சை வலித்தது.

கூடிய வரையில் அந்தக் குழந்தையையும் உமாவிடம் அண்ட விடவில்லை. தற்காப்பு நடவடிக்கையாய் எவ்வளவோ வைத்தியங்கள். தலைமேல்தான் வைத்துத் தாங்கினேன். வசதி வாய்ப்புகளுக்குக் குறைச்சல் இல்லை. ஆனால் கல்யாணமாகிக் கணவன் வீட்டுக்குப் போய்த் தனிக் குடித்தனம் ஆரம்பித்துத் தண்ணீரில் புழங்கி, பத்துப் பாத்திரம் தேய்க்க ஆரம்பித்தவுடன் கால்களில் மட்டும் பித்த வெடிப்பு தோன்றியது.

கைகளில் சொரசொரப்பு மட்டுமே. பனிக் காலங்களில் கால்களில் பிளவு ஏற்பட்டு நடக்க முடியவில்லை.

மாப்பிள்ளையும் அவர்கள் வீட்டாரும் என்னவோ ஏதோ என்று டாக்டரிடம் காட்டி, ஆர்ப்பாட்டம் செய்ய, என் மகளோ, ''இது ஒன்றும் இல்லை, எங்கம்மாவுக்கு உண்டு. அவரைப் பெற்ற தாய்க்கும் உண்டாம்'' என்று வெகுளியாய்ச் சொல்ல சந்தேகம் வலுப்பெற்றது.

தீண்டத் தகாதவளைப் போல அருவருப்பு. வைத்தியம் செய்தும் குணமாகாமல், என்னவோ, ஏதோ என்று பயந்து, கரித்துக் கொட்டி ஆர்ப்பாட்டம் செய்து, விளைவு... பிறந்தகத்துக்கு வந்துவிட்டாள்.

'முட்டாள்களே, இது ஒன்றும் வியாதியில்லை' என்று ஹோவென்று கத்த வேண்டும் போல இருந்தது.

நினைவலைகளிலிருந்து மீள்கிறேன். முப்பது நீண்ட வருடங்கள்... என் உமாவுடன் கழித்தாயிற்று. அவளை ஒரு பொருட்டாகவே நினைத்ததில்லை நான். அலட்சியம், பிச்சைக்காரிக்குச் சோறு போடுவது போலச் சோறும், துணிமணிகளும் கொடுக்கிறேன். என் மனத்தில் அகங்காரமே தலைதூக்கி நிற்கிறது. காரணம், பணம், ஆள், படை, செல்வாக்கு, உயர்மட்டம் வரையில். அடித்தோ, உதைத்தோ, பணம் பொருட்களைக் கொடுத்தோ ஒருவர் மனத்தை மாற்றிவிட முடியுமா? இது வாழ்க்கை இரண்டு உள்ளங்களின் சேர்க்கை. போலித்தனமில்லாத அன்புதான் தேவை. மாப்பிள்ளை தானாக உணர வேண்டும்.

The following particulars regarding the ownership of 'MANGAYAR MALAR' the Tamil Monthly newspaper, are published as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publication: Madras
2. Periodicity of Publication: Monthly
3. Name of Printer: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras-600 040
4. Name of Publisher: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras-600 040
5. Name of Editor: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras-600 040
6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. Bharathan Publications Private Limited, 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032.

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

V. Murali
Publisher

1.3.1987



முத்துமாலையுடன் வித்யா ராமச்சந்திரன்

# முத்து வாங்கப் போகிறீர்களா?

நவரத்தினங்களின் 'ராணி' முத்து தான் என்று கருதப்படுகிறது. பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி போன்ற பெண் தெய்வங்களின் கண்ணீர்த் துளிதான் முத்துக்கள் என்றும், சந்திர ஒளியின் ஒரு சிதறல்தான் முத்து என்றும், சமுத்திரம், மின்னலினால் தாக்கப்படும் பொழுதுதான் முத்துக்கள் பிரசவிக்கப்படுகின்றன என்றும் கவிஞர்களும், கிரேக்கர்களும் நம்மை நம்பச் செய்கின்றனர்.

இப்படிப்பட்ட தெய்விக முத்தை நாம் கடையில் வாங்க முனையும்பொழுது, சுலபத்தில் ஏமாந்துவிடாமல், தரமான முத்துக்களைத் தேர்ந்தெடுக்க, பரேஷ் நாகர்தாஸ் அவர்களின் அறிவுரையைக் கேட்போமே!

1. மிட்டாய் கலர் காகிதத்திலோ (அ) வேறு எந்தவிதமான வண்ணத் தாள்களிலோ, இதைப் பத்திரப்படுத்தக் கூடாது. ஏனெனில் வியர்வை கசிவினாலும், ஈரக் கசிவினாலும், கலர் காகிதத்தின் நிறம் முத்தில் பரவி, முத்தைப் பயங்கரமாக்கிவிடும்.
2. உங்கள் முக அலங்காரம் முடிந்தபின்னரே முத்து நகைகளை அணிய வேண்டும். காரணம் பவுடரும், தூசியும், சென்டில் உள்ள எண்ணெய்ப் பசையும் முத்திற்குப் பரம எதிரிகளாகும்.
3. ஏ.ஸி. இயேட்டராக இருந்தாலும், நமக்குப் புழுக்கம் ஏற்படத்தான் செய்கிறது. இந்தப் புழுக்கம்கூட முத்தை, நிறம் மாற்றிவிடும் எனவே ஒவ்வொரு முறையும், வெள்ளை மஸ்லின் துணியினால், முத்தைச் சுத்தப்படுத்தவும்.
4. ஒவ்வொரு வருடமும், முத்து நகைக்கு ஆதாரமான உலோகம் பட்டுக் கயிறு முதலானவற்றை புதுப்பித்தல் மிகவும் அவசியமாகும்.
5. முத்துக்கள் பட்டுக் கயிறினால் மட்டுமே கட்டப்பட வேண்டும். (அ) கோர்க்கப்பட வேண்டும். நைலான் கூடவே கூடாது.
6. உங்கள் இஷ்டத்திற்கு, முத்தை வீட்டிலேயே சுத்தப்படுத்த வேண்டாம். நகைக் கடையில் கொடுத்து சுத்தம் செய்யவும்.
7. முத்து நகைகளை சாட்டினாலான (உள் உறை) பெட்டியில் பத்திரப்படுத்தவும். அல்லது 'டிஷ்யூ' பேப்பரில் பத்திரப்படுத்துங்கள். வேறு நகைகளுடன் பத்திரப்படுத்தினால், முத்து தன் பளபளப்பை இழந்துவிடும்.
8. கூடுமானவரை முத்தை உலோகங்களில் பதிக்காமல், அணிவது அதன் தரத்தை உயர்த்தும்.
9. முத்தைக் கடையில் வாங்கும்பொழுது, விளக்கின் ஒளி முத்தின்மேல் நேராக படாத வகையில், உங்கள் முகத்தால் மறைத்துக் கொண்டு, சுமார் ஆறு அங்குல இடைவெளியில் பிடித்துக் கொள்ளுங்கள். முத்தின்மேல் உங்கள் பிம்பம், தெளிவாக விழும். இதுதான் தரமான முத்தின் அடையாளம். நல்ல முத்தைப் பல்லில் தேய்த்தால், கல்லைத் தேய்ப்பது போல இருக்கும். போலி முத்தின் உரசல் மிருதுவாக இருக்கும்.
10. முத்துக்கள் ஒரே சீரான அளவில் தேர்ந்தெடுக்கப்பட்டால், அதன் பளபளப்பு அதிகரிக்கும்.
11. பெரிய முத்துக்கள் வாங்குவது நல்லது.
12. முதன் முறையாக முத்தணிபவர்கள், திங்கட்கிழமையன்று அணிவது (கிரக அமைப்புப்படி) முக்கியமாகும்.

— திருமதி தேவனாதன்

# இப்படியும் ஓர் அமாவாசை!

சூடயோகம் ஸ்வேகா

சித்திரம்: விஜயன்

மண்ணாசையால், ரத்த பந்தங்கள் யுத்தத்தில் மடிந்த கதை மகாபாரதம். பஞ்ச பாண்டவர்கள் கௌரவர்களிடம் சூதாட்டத்தில் தோற்று, நாடு நகரங்களைப் பறிகொடுத்து, நிபந்தனைப்படி பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசமும் ஓராண்டு மறைவான வாசமும் செய்து திரும்பினார்கள். அதன் பின்னும் கௌரவர்கள் அவர்களுக்கு ஊசி முனை இடமளிக்கவும் சம்மதிக்கவில்லை. எனவே, போர் நடப்பது தவிர்க்க முடியாததாகி விட்டது.













தீர்மானித்தபடியே சகாதேவனிடம் தன்னுடைய ஜாதகத்தைக் கொடுத்துத் தனக்குச் சாதகமான நாளைக் குறித்துக் கொடுக்கும் படிக் கேட்டான் துரியோதனன்.
வரும் அமாவாசை தினம் உங்கள் ஜாதகப்படி உகந்த நாள். அன்று தொடங்கும் எந்தக் காரியமும் தங்களுக்கு வெற்றியைத் தேடித் தரும் என்பது உறுதி!
ஓரம் சாராமல் உண்மையை உரைத்தான் சகாதேவன்.


தருமனும் பீமனும் அர்ச்சுனனும் ஸ்ரீ கிருஷ்ணனிடம் நடந்ததைக் கூறிக் கலங்கினார்கள்.
தம்பி சகாதேவன் குறித்த நாளிலேயே துரியோதனன் யுத்தத்தைத் தொடங்கி விட்டால்...
நம் கதி என்னாவது?


கவலை வேண்டாம். துரியோதனன் தனக்குச் சாதகமான அமாவாசையன்று போரைத் தொடங்கி விடக் கூடாது. எப்படியாவது அதைத் தடுக்க வேண்டும். அவ்வளவு தானே? பொறுப்பை என்னிடம் விடுங்கள்! நடப்பதைப் பாருங்கள்.


அமாவாசை திதிக்கு முன் தினமே - ஸ்ரீ கிருஷ்ண பகவான் பஞ்ச பாண்டவர்களையும் போதாயனர் முதலான முனிவர்களையும் அழைத்துச் சென்று நதியில் நீராடினார்.
தாமும் சென்று முன்னோர்களின் ஆத்மசாந்திக் காகத் தர்ப்பணம் செய்து, எள்ளும் நீரும் இறைத்து, சிரார்த்த விதிகளைச் செய்து வழிபட்டார்.

அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்த சூரிய சந்திரர்கள் தாம் சஞ்சரித்த ராசி மண்டலங்களிலிருந்து இறங்கி வந்து நதிக்கரையில் ஸ்ரீ கிருஷ்ணனைச் சந்தித்தனர்.













நதிக் கரையில் ஸ்ரீ கிருஷ்ணனும் பாண்டவர்களும் சிரார்த்தம் செய்வதை ஒற்றர்கள் மூலம் அறிந்த துரியோதனன் திடுக்கிட்டான்.
ஆ! நாளை தான் அமாவாசை என்று நம்பி மோசம் போக இருந்தோமே?


இன்றுதான் அமாவாசை தினம். படைகளுக்கு உடனே உத்தரவிடுங்கள். உடனே போரை ஆரம்பித்து விடுங்கள்!


சகாதேவன் குறித்துத் தந்த நாளுக்கு முன் தினமே போரைத் துவக்கினான் துரியோதனன்.


இப்படியாக போதாயன அமாவாசை பாண்டவர்களுக்கு வெற்றியைத் தந்தது!


அதர்மத்திற்குத் தோல்வியையும், தர்மத்திற்கு வெற்றியையும் தந்த போதாயன அமாவாசையை ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு உகந்த நாள்.
போதாயன அமாவாசையில் முன்னோர்களின் ஆத்ம சாந்திக்காக விரதமிருந்தால், குறைகள் அகலும் குடும்பம் சுபிட்சம் அடையும் என்பது ஆன்றோர் அறிவித்தது.

# அழகைப் பாதுகாக்க...







முகஉறை அல்லது முகமூடி என்ற முறையால் அழகை அதிகரித்துக் கொள்வதும், பாதுகாப்பதும், மிக மிகப் பழமையான உத்தரவாதமுள்ள மாறுதல், விளைவுகள் ஏற்படுத்தாத அழகுபடுத்தும் முறையாகும். வீட்டிலேயே தயாரிப்பதால் செலவு மிகக் குறைவு. கலப்படம் பற்றிய பயம் இல்லை. பத்து (அ) இருபது நிமிடம் முகத்தில் வைத்திருந்து, பிறகு நிறைய நீர் விட்டுக் கழுவிவிடலாம்.

இவை உபயோகிப்பதால் ரத்த ஓட்டம் சீர்படுவதோடு, சுருக்கங்கள் நீங்கும். சருமம், புத்துணர்ச்சியுடனும் பிரகாசமாகவும் விளங்குவதுடன், முகத்தில் உள்ள கரும் புள்ளிகள் கறைகள் அறவே மறையும். முகத்திற்கு முகஉறை உபயோகிக்கும்போது அவசரம், டென்ஷன் இல்லாமல் ஆசுவாசமாக உபயோகிக்க வேண்டும்.

பால் உறை:

மிகப் பழமையான எளிமையான முறை கிராமப்புறம் என்றால் பால் கறந்தவுடன் பாலுரையை உபயோகிக்கவும். வாங்கிய பால் என்றால், ஒரு டம்ளர் பாலை வேகமாய் ஆற்றவும். நுரை ததும்பும். இந்த நுரையை, பஞ்சால் எடுத்து, முகம் முழுவதும் அழுந்தத் துடைக்கவும். பாலை மறுபடி மறுபடி ஆற்றினால் நுரை கிளம்பும். இருபது நிமிடங்கள் தேய்த்துத் தடவி பின் அலம்பவும்.

சுத்தப்படுத்தும் முறை:

இது நம் தோலுக்கு அற்புதமான ஒளிர்வைத் தரும். இது எல்லாவகையான சருமத்திற்கும் ஏற்றது. புள்ளிகள் உள்ள, மந்தமான சருமம், மழமழப்பையும் ஒளியையும் பெறும். கீழே குறிப்பிட்டவைகளை நன்கு கலந்து, முகத்தில் தடவி பதினைந்து நிமிடங்கள் ஊறியபின் அலம்ப வேண்டும்.

1 டேபிள்ஸ்பூன் மூல்தானி மட்டி
½ டேபிள்ஸ்பூன் பாலடை
1 டேபிள்ஸ்பூன் கிளிசரின்
1 டேபிள்ஸ்பூன் ரோஸ்வாட்டர்
1 டேபிள்ஸ்பூன் எலுமிச்சைச்சாறு
1 டேபிள்ஸ்பூன் ஆலிவ் ஆயில்

சருமம் வறண்ட சருமமாக இருந்தால், ஆலிவ் ஆயில் அதிகம் சேர்க்க வேண்டும். எண்ணெய் வழியும் முகம் என்றால் ஆலிவ் ஆயில் சிறிது போதும். இதில் உபயோகிக்கும் முல்தாணு மட்டி முகத்தில் உள்ள நுண் ஓட்டைகளைத் திறந்து அதில் அடைத்துள்ள அழுக்கை நீக்குகிறது. சருமத்தைச் சுத்திகரிக்கிறது. கிளிசரின் அற்புதமான ஈரப்பசையையும், ரோஸ் பவுடர் புத்துணர்ச்சியையும், எலுமிச்சைச் சாறு அழகின் உயிர்த் தேவையான 'வைட்டமின் சி'யையும் ஆலிவ் ஆயில் பளபளப்பையும் தருகிறது.

உருளைக்கிழங்கு உறை:

உருளைக்கிழங்கை நன்கு நசுக்கி, முல்தாணு மட்டி சம அளவு கலந்து முகத்தில் இருபது நிமிடங்கள் பூசி, கழுவவும். எண்ணெய் பசை சருமத்துக்குத் தேர்ந்த உறை இது.

மோர் உறை:

ஓட் அரிசிச் சோறை நன்கு குழைத்து, சம அளவு மோரில் பசை போல் கலந்து முகத்தில் தடவவும். முகத்தில் சிறு குழிகள் (பரு, கரும்புள்ளி இவற்றைக் கிள்ளியதன் விளைவு) இருந்தால், பஞ்சை கெட்டியான மோரில் நனைத்துக் குழிகளில் ஒத்தடம் தரவும்.

தேன் உறை:

சருமத்தை மிருதுவாக்க மிகவும் உதவுவது தேன். வறண்ட சருமத்திற்கு தேனும், முட்டையின் வெள்ளைக்கருவும் சம அளவு கலந்து தயாரித்த பசை மிகவும் ஏற்றது. எண்ணெய்ப் பசை சருமத்திற்கு தேன், எலுமிச்சைச் சாறு, முல்தாணு மட்டி சம அளவு கலந்து சில துளி ரோஸ் வாட்டர் கலந்து உபயோகிக்கவும்.

கேரட், தர்பூசணி உறை:

கேரட், தர்பூசணி இரண்டையும் சம அளவு எடுத்து வேக வைத்து ஒரு டேபிள் ஸ்பூன் பால் விட்டு, மசித்துக் குழைத்து, முகத்தில் பூசவும். இருபது நிமிடங்கள் ஊறிய பின் அலம்பவும்.

ஆல்மண்ட் உறை:

இருவகை சருமத்திற்கும் ஏற்றது ஆல்மண்ட். ஆல்மண்ட் பருப்புடன் தண்ணீர் சேர்த்து, பசையாக்கி முகத்தில் அழுந்தத் தேய்த்துத் தடவவும். வெதுவெதுப்பான நீர் விட்டு அலம்பவும்.

ஆல்மண்ட் ஆயில் வறண்ட கேசத்துக்கு மிகச் சிறந்தது. ஆல்மண்ட் ஆயில் தடவி மண்டை வலிக்க மஸாஜ் செய்து, பிறகு தலைக்குக் குளிக்க வேண்டும். ஒரு கப் குளிர்ந்த பாலில், 20 கிராம் அரைத்த ஆல்மண்டு பருப்பைக் கலந்து, உள்ளங்கை, முகம், கை, முழங்கை போன்ற இடங்களில் தடவி இருபது நிமிடங்கள் ஊறிய பின் குளிக்க வெண்மை, மென்மை கிடைக்கும்.

எலுமிச்சை உறை:

புத்துணர்ச்சியும், அழகும் தரக்கூடிய இயற்கை அழகு சாதனம் எலுமிச்சை. வறண்ட, மென்மையான, உலர்ந்த சருமத்திற்கு இது ஏற்றது அல்ல. ஆனால் எண்ணெய்ப் பசை, மாசு மருவுள்ள சருமம் இதனால் பொலிவடையும். பாலும், எலுமிச்சைச் சாறும் சம அளவு கலந்து, பசை போல் குழப்பி, முகத்தில் தடவி, ஊறிய பின் குளிக்கவும். சில தினங்களில் மாசு மருவற்ற பளபளப்பான மிருதுவான முகம் கிடைக்கும்.

— **எஸ். கனகவல்லி**

## வெஜிடபிள் ஊறுகாய்

**தேவையானவை:** கத்தரி, பீன்ஸ், அவரை, பாகல், வாழை, உருளைக் கிழங்கு, கொத்தவரை, மஞ்சள் தூள், மிளகாய்த் தூள், உப்பு, பெருங்காயம், எலுமிச்சம்பழம், கடுகு, நல்லெண்ணெய், 100 gm.

**செய்முறை:** காய்கறிகளை பிஞ்சாகப் பொறுக்கி ஒவ்வொரு வகையும் 1 கப் வரும் அளவில், பொடியாக ¼ இஞ்ச் அளவில் நறுக்கி, ஒரு பாத்திரத்தில் போட வேண்டும். இரண்டு எலுமிச்சம் பழத்தை நறுக்கி, விதையில்லாமல் சாறு பிழிந்து அதில் விட்டு, தேவையான உப்பையும் சேர்த்து குலுக்க வேண்டும். பின்பு அதன் மீது காய்கறிகளின் மேலாக, மஞ்சள் தூளையும் மிளகாய்ப் பொடி (வெறும் மிளகாய் மட்டும் பொடி செய்தது)யையும் மேலாக பரவலாகத் தூவி, நல்லெண்ணெய் பெருங்காயத்தைப் பொரித்துப் பொடி செய்து கடுகும் வெடித்தவுடன் சூடாக எண்ணெயை விடவும். நன்கு கிளறி ஆறியவுடன் பத்திரப்படுத்தவும். கெடவே கெடாது. ஈரம் கூடாது.

— என். ராஜலட்சுமி



# நான்
# புதிய காமதேனு
# கூட்டுறவுச் சிறப்பங்காடியிலேயே
# எல்லாப் பொருட்களையும்
# வாங்குகிறேன். ஏன் தெரியுமா?

## ஒன்றா...இரண்டா!
## பத்துக் காரணங்கள் உண்டு!

1. தரமான பொருட்கள் கிடைக்கும்.
2. பொருட்கள் ஒழுங்காகவும் கவர்ச்சியாகவும் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன. பொருட்களை எளிதில் தேர்ந்தெடுக்கலாம்.
3. பொருட்கள் சரியான எடை, அளவில் உள்ளன. பணத்துக்கேற்ற பொருள் கிடைக்கும்.
4. நியாயமான விலை—பேரத்திற்கு இடமே இல்லை.
5. விரைவில் நவீன முறையில் பட்டியல் தயாரிக்கும் கருவிகள் உண்டு
6. எப்போதும் தேவையான பொருட்கள் தயாராக இருப்பில் உண்டு.
7. புதிய காய் கனிகளும் கிடைக்கும்.
8. வாகனங்களை வசதியாக நிறுத்தலாம்.
9. சுவையான தின்பண்டங்கள் ஏராளம்.
10. காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி—ஆதரிக்க வேண்டியது; இது ஒருவருக்கொருவர் நன்மையடையும் முயற்சியும் கூட!

# புதிய காமதேனு
## கூட்டுறவுச் சிறப்பங்காடி

வானவில்' அருகில்—தேனாம்பேட்டை
சென்னை-18.

*புதிய காமதேனு—ஞாயிறு விடுமுறை*

*பழைய காமதேனு—வெள்ளி விடுமுறை*




# வங்கிக்குப் போனால்...

விளம்பரங்களிலும், வீதிகளிலும் பலவித வங்கிகளின் பெயர்களைப் பார்த்திருக்கிறோம். இன்னும் சொல்லப் போனால் செக், டிராப்ட், சலான், எஸ்.பி. அக்கவுண்ட் போன்ற சொற்கள் நம் அனைவருக்கும் தெரிந்ததுதான். ஆயினும் ஒரு வங்கிக்குள் நுழைந்தால் ஒரு செக் எழுதுவதிலிருந்து புதியதாகக் கணக்குத் துவங்குவதுவரை பலவித சந்தேகங்கள் எழுகின்றன. வங்கி ஊழியர் மிக மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருப்பார். வேறு யாரையாவது விசாரிக்கலாம் என்றால், நம் சுய கௌரவம் இடம் கொடுக்காது. வேறு என்ன செய்வது? நம் தர்மசங்கட நிலையைக் களைய கை கொடுக்கிறார் தாம்பரம் இந்தியன் வங்கியில் பணி புரியும் திருமதி மாலதி சுந்தரம்.

கே: வங்கியில் எத்தனை வகையான சேமிப்புக் கணக்குகள் உள்ளன?

ப: பலவகைகள் உள்ளன. அவற்றில் முக்கியமானவை சேவிங்ஸ் பாங்க், ஃபிக்ஸட் டெபாஸிட், ரீ-இன்வெஸ்ட்மெண்ட் டெபாஸிட், ரொக்க சர்ட்டிபிகேட், ரெகரிங் டெபாஸிட் ஆகும்.

கே: ஸேவிங்ஸ் பாங்க் கணக்கிற்கும், ஃபிக்ஸட் டெபாஸிட்டுக்கும் உள்ள வேறுபாடு என்ன?

ப: ஸேவிங்ஸ் பாங்க் கணக்கை ஐந்து ரூபாய் முதலீட்டுடன் துவங்கலாம். எவ்வளவு தொகையை வேண்டுமானாலும் விரும்பியபோது செலுத்தலாம். தேவைப்பட்ட போது எடுக்கலாம். நம் பெயருக்கு வரும் டிவிடெண்ட் வாரண்டுகள், செக்குகள், பென்ஷன் தொகை போன்றவற்றை நம் கணக்கில் சேர்த்தபின் பணமாகப் பெறலாம். வருடத்திற்கு 5% வட்டி உண்டு. பிக்ஸட் டெபாஸிட்டில் குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்ட காலவரைக்கு முதலீடு செய்ய வேண்டும். காலத்தின் அளவைப் பொறுத்து வட்டி வீதம் மாறுபடும். உதாரணமாக ஓராண்டுக்கு மேல் என்றால் 8.5% வட்டியும், இரண்டு ஆண்டு

கள், மூன்று ஆண்டுகள் என்று உயரும் போது வட்டி விதம் 9% 10% என்ற வகையில் கொடுக்கப்படுகிறது. குறிப்பிட்ட கால வரைக்கு முன் பணத்தை எடுக்க நேர்ந்தால் சேமிப்பு இருந்த காலத்திற்குரிய வட்டி விதத்தில் ஒரு சதவிதம் குறைத்து வட்டி கொடுக்கப்படும்.

கே: நம் முதலீட்டைப் பெருக்கவும், அதிக வட்டி பெறவும் ஏற்ற சேமிப்பு எது?

ப: ரீ—இன்வெஸ்ட்மெண்ட் டெபாஸிட் திட்டத்தில் 12 மாதம் முதல் 120 மாதங்கள் வரை ஒரு குறிப்பிட்ட தொகையை கணக்கில் செலுத்தினால் நம் அசலுக்கு வட்டி கொடுக்கப்படுவதுடன் வட்டிக்கும் வட்டி கொடுக்கப்படுகிறது. உதாரணமாக நூறு ரூபாய் 120 மாதங்களில் கிட்டத்தட்ட முந்நூறு ரூபாய்வரை வளருகிறது. அடுத்தது ரெகரிங் டெபாஸிட். இதில் மாதாமாதம் ஒரே குறிப்பிட்ட தொகையை குறிப்பிட்ட காலம்வரை செலுத்த வேண்டும். நடுத்தரக் குடும்பத்தினர் மாதாமாதம் பணம் சேமிக்க ஏற்ற கணக்கு இது. குழந்தைகளின் எதிர்கால திட்டத்தில் பல கட்டங்களில் இக் கணக்கு கைகொடுக்கும். ஒவ்வொரு மாதமும் ஐந்து ரூபாய் என்ற கணக்கில் செலுத்தினால் 60 மாதங்களில் நானூறு ரூபாய் கிடைக்கும்.

கே: நாம் வங்கியில் சேமித்திருக்கும் பணத்தையே கடனாகப் பெற முடியுமா?

ப: முடியும். பிக்ஸட் டெபாஸிட்டில் உள்ள தொகையில் 75% வரை கடனாகப் பெறலாம். ஆனால் வங்கி நமக்கு 10% வட்டி கொடுத்தால் நாம் வாங்கிய கடனுக்காக 12% வட்டியை நாம் கொடுக்க வேண்டும்.

கே: வங்கியில் கணக்குத் துவங்கும்போது உறவினர் அல்லது நண்பர் கையெழுத்துத் தேவையா?

ப: புதிதாக ஒருவர் கணக்குத் துவங்கும் போது வங்கியின் அதே கிளையில் கணக்கு வைத்திருக்கும் ஒருவர் தன் கணக்கு எண்ணுடன் கையெழுத்துப் போட வேண்டும். உறவினராக இருப்பின் அவருக்கும் அதே வங்கியில் கணக்கு இருக்க வேண்டும்.

கே: ஜாயிண்ட் அக்கவுண்ட்ஸ் என்றால் என்ன?

ப: கணவன், மனைவி இருவர் பெயரிலும் கணக்கைத் துவங்கலாம். அல்லது தொழில் நிறுவனங்களில் மூன்று நான்கு கூட்டாளிகள் கூட ஒரே கணக்கைத் துவக்கலாம். ஆனால் பணம் எடுக்கும்போதும் கணக்கை முடிக்கும்போதும் இணைந்த இருவருமே கையெழுத்துப் போட வேண்டும். எய்தர் ஆர் ஸர்வைவர் (either or survivor) என்ற கணக்கு இருவர் பெயரில் இருப்பினும் கணவனோ, மனைவியோ தனித்தனியாகவே பணத்தைப் பெற இயலும்.

கே: ஒரே நபர் ஒரே வங்கியில் எத்தனை சேமிப்புக் கணக்குகள் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாமா?

ப: வைத்துக் கொள்ளலாம்.

கே: பெண்கள் அக்காலத்தில் கணவருக்குத் தெரியாமல் 'சிறுவாடு' சேர்த்தது போல் தற்காலத்தில்வீட்டிற்குத் தெரியாமல்சேமிக்க முடியுமா?

ப: முடியும். வங்கிக்கு அறிமுகமானவர் சாட்சி கையெழுத்து மட்டும் போதும். கணவரோ, உறவினரோ, கையெழுத்துப் போட வேண்டாம். மேலும் ஒரு பெண் தான் சேமிப்பது யாருக்கும் தெரிய வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டால், அப்பெண்ணின் கணவரே வந்து விசாரித்தால் கூட வங்கி தெரிவிக்காது. எனவே திருமணத்திற்குப்பின் பல தொல்லைகளுக்கு உட்படும் பெண்கள் இவ்வகையில் தங்களுக்கு ஒரு பொருளாதாரப் பாதுகாப்பை ஏற்படுத்திக் கொள்ளலாம்.

கே: செக், டிராஃப்ட் இவற்றை வங்கியில் மாற்றும் வழிமுறை (procedure) என்ன?

ப: நமக்குக் கணக்கு இருப்பின் செக் அல்லது டிராப்டை வங்கியில் கொடுத்து சலான் வாங்கி அதை நிரப்பிக் கொடுத்தால் பணம் கணக்கில் சேர்ந்துவிடும். உடனேயே பணத்தைப் பெற வேண்டுமானால் வித்ட்ராயல் ஃபாம் வாங்கி அதையும் நிரப்பிக் கொடுத்தால் பணம் கிடைக்கும். வேறு வங்கியைச் சேர்ந்த செக்காக இருப்பின் 48 மணி நேரத்தில் பணம் கிடைக்கும். கணக்கு இல்லாதவர் க்ராஸ் செய்யப்படாத அதே வங்கிக் கிளைக்கான செக்கைக் கொண்டு வந்தால் மட்டுமே உடனே பணம் கிடைக்கும். வேறு கிளையானால் அங்குதான் செல்ல வேண்டும்.

கே: புதிதாக எம்.ஐ.ஸி.ஆர். என்ற செக் தயாரித்திருக்கிறார்களே, இதன் பலன் என்ன? எவ்வாறு கையாள வேண்டும்?

ப: எம்.ஐ.ஸி.ஆர். என்பது மேக்னடிக் இங்க் கேரக்டர் ரெகக்னிஷன் எனப்படும் விசேஷக் காகிதத்தில் தயாரிக்கப்படும் இந்தச் செக்கின் கீழே வெண்மையான பகுதியில் காந்த மையினால் எண்கள் அச்சிடப்

இந்தக் காலத்தில், டயாபடீஸ், கொலஸ்ட்ரால் இல்லாதவர்கள் மிகக் குறைவு. இவர்களுக்குத் தேங்காயே கூடாது. தேங்காயில்லாமல் சமையல் எப்படி ருசிக்கும். என்று கவலைப்பட வேண்டாம். ஒரு ஸ்பூன் கசகசாவை அரைத்து விட்டுக் கூட்டு செய்து பாருங்கள். கறிகள், சாம்பார் எல்லாவற்றுக்குமே தேங்காய்க்குப் பதில் கசகசா போடலாம். ருசியும் கூடும். உடம்புக்கும் மிக நல்லது.

— ஜெயலக்ஷ்மி.

பட்டுள்ளன. முதல் ஆறு எண்கள் செக் நம்பரையும், அடுத்த மூன்று நகரத்தையும், அதற்கு அடுத்த மூன்று வங்கியையும், மீதி மூன்று எண்கள் வங்கியின் கிளையையும் குறிக்கும். இந்தச் செக்குகளை சார்ட்டர் என்னும் கருவிக்குள் செலுத்திஞல் அங்குள்ள காந்த உணர்வுக் கருவிகள் எண்களுக்கு ஏற்றபடி செக்குகளை, ஊர், வங்கி, கிளை என்ற வகையில் நிமிடத்திற்கு 300 செக்குகள் என்ற கணக்கில் வகைப்படுத்தி விடுகின்றன. இதஞல் வேலை நேரம் குறைகிறது. தபால் இலாகாவிஞல் ஏற்படும் தாமதம் நீங்கலாக இரண்டே நாட்களில் செக் மாற்றப்பட்டுவிடும்.

செக்கின் வெள்ளைப் பகுதியில் நாம் எழுதவோ, ஊசி குத்தவோ, பசை தடவவோ கூடாது. தபாலில் அனுப்பிஞலும் செக் மடக்கப்படாமல் அனுப்பப்பட வேண்டும். இக்குறை உள்ள செக்குகள் இயந்திரத்தால் ஒதுக்கப்படுவதால் மனிதர்களே இவற்றை வகைப்படுத்த வேண்டியுள்ளது.

கே: பணம் வாங்கும்முன் நமக்குக் கொடுக்கப்படும் டோக்கன் தொலைந்துவிட்டால் என்ன செய்வது?

ப: டோக்கன் என்பது மிக முக்கியமான ஒன்று. ஒருவர் இதைத் தொலைத்துவிட்டால், அது யாரிடம் கிடைக்கிறதோ, அவர் கவுண்டரில் காட்டிப் பணத்தைப் பெற்றுச் சென்றுவிடலாம். எனவே டோக்கன் வாங்கிய பின் வங்கியைவிட்டு வெளியே செல்லக் கூடாது. வேறு ஒருவரிடம் மாற்றிக் கொள்ளக் கூடாது. இது தொலைந்துவிட்டால் பணம் பெறுவதில் தொல்லை ஏற்படும்.

கே: நாம் ஒருவருக்கு செக் அனுப்பிஞல் என்னென்ன விவரங்களைக் குறிக்க வேண்டும்?

ப: செக்கை எந்த இந்திய மொழியிலும் எழுதலாம். அனுப்பும் தொகையை எண், எழுத்து இரண்டிலும் குறிப்பிட வேண்டும். இவை மாறுபட்ட தொகையைக் குறிக்கக் கூடாது. எண்ஞல் குறிப்பிட்ட பிறகு /— என்ற குறியைப் போடுவதன் மூலம் இடையில் எவரும் திருத்தி வேறு எண் எழுத முடியாது. எல்லாவற்றையும்விட முக்கியமானது. கையெழுத்துப் போடுவது. கையெழுத்து இல்லாத செக் செல்லாது.

கே: நமக்கு வந்த செக் தொலைந்துவிட்டால் என்ன செய்வது?

ப: நாமே செக்கை அனுப்பியவர் வங்கிக்கு தொலைந்த விவரத்தைத் தெரிவிக்கலாம். அல்லது செக்கை நமக்கு அனுப்பியவருக்குத் தகவல் தெரிவித்தால் அவர் செக்கை வாங்கிய வங்கியில் பணத்தைக் கொடுக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்வார். ஆயினும் கையெழுத்திட்டவர் எழுத்து மூலம் தெரிவித்தால்தான் செக் செல்லாது என்று அழிக்கப்படும். இத்தகைய சமயத்தில் செக் எண், தேதி, அனுப்பிய தொகை போன்ற விவரங்கள் மிகவும் முக்கியம்.

கே: கவுண்டரில் பணம் வாங்கிய பின் குறைந்தால் என்ன செய்வது?

ப: அடுத்து நிற்பவர் அவசரப்படுத்துகிறாரே என்று கவுண்டரை விட்டு நகர்ந்து நின்று பணத்தை எண்ணுதீர்கள். வங்கி ஊழியரின் பார்வை படும் இடத்திலேயே நின்று எண்ண வேண்டும். சீல் வைக்கப்பட்ட நோட்டுக் கட்டுகளை எண்ணும்போது முதலில் சீலைப் பிரிக்காமலேயே எண்ணிச் சரி பார்க்க வேண்டும். குறைவது போலத் தோன்றிஞல் வங்கி ஊழியரையும் பரிசோதிக்கச் சொல்லிப் பணத்தைப் பெறலாம். வெளியே சென்றபின் பணம் குறைவதைக் கண்டுபிடித்தால் வங்கி வேலை நேரம் முடிந்து கணக்கை அவர்கள் சரிபார்க்கும் வரை காத்திருக்க வேண்டும். அப்போது அவர்கள் கணக்கில் நீங்கள் குறிப்பிட்ட தொகை கூடுதலாக இருந்தால் மட்டுமே திருப்பிக் கொடுப்பார்கள்.

கே: நாம் நகைகள் மீது கடன் வாங்க வேண்டுமாஞல் என்னென்ன விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டும்?

ப: கல் நகையாக இருக்கக் கூடாது. நம் நகை அசல் தங்கம்தாஞ என்பதை வங்கி ஊழியர் சோதித்த பிறகு ஒரு கிராமிற்கு 125 ரூபாய் வீதம் கடன் தொகை கொடுக்கப்படும். விவசாயத்திற்காகக் கடன் வாங்குவோர் 11.5% வட்டியும், இதரத் தொழில் செய்யக் கடன் வாங்குவோர் 18% வட்டியும் வங்கிக்குச் செலுத்த வேண்டும். ஒருவரது நகை, தனியான பையில் போடப்பட்டு, சீல் வைக்கப்படுவதால் மாறிவிட வாய்ப்பு இல்லை. திரும்பப் பெறும்போது நகையைச் சரியாகக் கூற வேண்டும்.

கே: ஸேப்டி லாக்கரின் பயன் என்ன? எவ்வாறு அதைக் கையாள வேண்டும்?

சிலருக்கு மூக்கின் மேல் பொறி பொறியாக இருக்கும். எண்ணெய் வழியும். இவற்றைப் போக்க முடியும். பாலை அடுப்பின் மேல் வைத்துக் கொதிக்க விடவும். அதன்மேல் பக்குவமாக முகத்தைக் காட்ட வேண்டும். அப்போதைக்கப் போதும். பாலுக்குள் கல்லென்று ணதிஞல் ஆவி மேலே கிளம்பும். உயரத்தில் முகத்தை வைத்துக் கொண்டு, மூக்கைக் காட்டவும். துணியால் அழுத்தி எடுத்தால் வெள்ளை அரும்புகள் வந்து விடும். மூக்கு மென்மையாகி விடும்.

— ப்ரியா பாலு

ப: ஒருவர் வங்கியில் தன் பெயரில் ஸேப்டி லாக்கர் வைத்துக் கொள்ளலாம். சிறிய அறையான அது கொள்ளும் எந்தப் பொருளையும் பத்திரமாக வைக்கலாம். வங்கியிடம் ஒரு சாவியும், வாடிக்கையாளரிடம் ஒரு சாவியும் இருக்கும். இரண்டையும் ஒன்றாக நுழைத்துத் திறந்தால் தான் லாக்கரைத் திறக்க முடியும். உரிமையாளர் தன் சாவியைத் தொலைத்துவிட்டால் பழைய லாக்கரை உடைத்து நீக்கிவிட்டுப் புதியதாகப் பொருத்த வேண்டி வரும். இதற்காக அவர் சுமார் 200 ரூபாய்வரை வங்கிக்குச் செலுத்த வேண்டும். மொத்த வங்கியுமே இன்ஷூர் செய்யப்படுவதால் வங்கியிலோ, லாக்கரிலோ உள்ள பொருள் அல்லது பணம் பத்திரமாக இருக்கும் என்பதற்கு வங்கி உத்தரவாதமளிக்கிறது.

கே: வங்கியின் மூலம் தொழில் ஆரம்பிக்க ஒருவர் கடன் வாங்க விரும்பினால் சொத்து விவரங்களைக் காட்ட வேண்டுமா? சொத்து இல்லாதவர் கடன் பெறுவது எப்படி?

ப: சொத்து உள்ளவர்கள் சொத்துக்களின் பேரில் கடன் வாங்கலாம். விவசாயத்திற்காகக் கடன் வாங்குவோர் நிலப் பட்டாவைக் காட்ட வேண்டும். சொத்தே இல்லாதவர்கள் கூட கடன் பெறலாம். ஆனால் கடனுக்கு வாங்கும் பொருளையே அடமானமாக (**Hypothication**) வைக்க வேண்டும்.

கே: என்னென்ன வகையானக் கடனுதவிகளை வங்கி அளிக்கிறது?

ப: விவசாயம் தொடர்பான பல விஷயங்களுக்குக் கடன் வழங்கப்படுகிறது. வேலையில்லாப் பட்டதாரிகள் சிறு தொழில் துவங்கவும் கடனுதவி கிடைக்கும். இன்னும் சுருங்கச் சொன்னால் மருத்துவமனை உபகரணங்கள் வாங்குவது முதல் அப்பளம் தயாரிக்க மூலப் பொருட்கள் வாங்குவதுவரை வங்கிகளின் கடனுதவியால் நடைபெறுகிறது. விபரங்களைப் பெற எந்த வங்கியை வேண்டுமானாலும் அணுகலாம். மகளிர் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் பெண்களுக்கென்றே விசேஷக் கடனுதவிகள் கூட அளிக்கப்படுகின்றன.

கே: கையெழுத்துப் போடும் வயது வராத குழந்தைகள் பேரில் சேமிப்புக் கணக்கைத் துவங்க இயலுமா?

ப: இயலும். ஆனால் பெற்றோர் அல்லது கார்டியன் கையெழுத்துப் போட வேண்டும். ஒவ்வொரு முறை பணம் எடுக்கும்போதும் குழந்தையின் நன்மைக்காக (**only for benefit of the minor**) என்று வங்கிக்கு எழுதிக் கொடுக்க வேண்டும். இந்த விதிமுறைகள் 14 வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கு மட்டுமே செல்லும்.

கே: வெளியூர் மாற்றிச் சென்றவர் நேரில் வராமலேயே பழைய கணக்கை முடிக்க இயலுமா?

ப: கணக்கை முடிக்க முடியாது. ஆனால் அதே வங்கியின் கிளை அவ்வூரில் இருந்தால் அதற்கு மாற்றிக் கொள்ளலாம். வேறு வங்கியானால் அங்கு புதிய கணக்கைத் துவங்கி, அதன் மூலம் பழைய வங்கியிடம் பணத்தைப் பெற்றுக் கொள்ளலாம்.

கே: வங்கியில் கணக்கு வைத்திருக்கும் ஒருவர் திடீரென இறந்துவிட்டால் பணத்தை யாரிடம் கொடுப்பீர்கள்? யாருமே பணத்தைக் கேட்காவிட்டால் என்ன செய்வீர்கள்?

ப: உறவினர்களே வந்து பணத்தைக் கேட்கும்வரை வங்கி எந்த நடவடிக்கையும் எடுக்காது. அப்படி வரும் உறவினர் இறந்தவரின் மரணச் சான்றிதழ், சட்டரீதியான வாரிசுச் சான்றிதழ் போன்றவைகளைக் காட்டினால் அவரிடம் வங்கி பணத்தைக் கொடுக்கும். எவருமே கேட்காத நிலையில் அப்பணம் அன்க்ளெய்ம்ட் டெபாஸிட் (**unclaimed deposit**) என்று வங்கியிலேயே வைக்கப்பட்டு வட்டியும் கொடுக்கப்படும். இத்தகைய நிலையை மாற்றுவதற்கு ஜாயின்ட் அக்கவுண்ட் அல்லது எய்தர் ஆர் ஸர்வைவர் கணக்கு வைத்துக் கொள்வது நல்லது.

**உளுந்து வடைக்கு அரைக்கும் போது அதனுடன் இரண்டு, மூன்று அவித்த உருளைக்கிழங்கையும் சேர்த்து அரைத்துத் தேவையான வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி, பச்சைக் கொத்துமல்லி சேர்த்து வடையாகத் தட்டி எண்ணெயில் போட்டுப் பொரித்து எடுத்தால் 'கட்லட் வடை' ரெடி.**

**— திருமதி அனுசூயா.**

கே: எஸ்.பி. அக்கவுண்ட் வைத்திருப்பவர் முதல் 10 தேதிக்குள் பணத்தைச் செலுத்த வேண்டும் என்பது ஏன்?

ப: ஒருவரது சேமிப்பில் உள்ள தொகைக்கான வட்டி அம்மாதத்தின் 10ம் தேதிக்குள் இருக்கும் தொகைக்குக் கணக்கிடப்படுகிறது. ஒருவர் 10,000 ரூபாயை எட்டு தேதி வரை கணக்கில் வைத்து ஒன்பதாம் தேதி 9,000 ரூபாயை எடுத்துவிட்டு மீண்டும் அந்தத் தொகையை 11ம் தேதி கட்டிவிட்டால் கூட, 10ம் தேதிக்குள் அவரது குறைந்த இருப்பான 1000 ரூபாய்க்கு மட்டுமே வட்டி கணக்கிடப்படும். எனவே பணத்தைச் செலுத்துவதானால் 10 தேதிக்குள்ளும், எடுப்பதானால் 10 தேதிக்குப் பின்னும் எடுக்க வேண்டும். இதனால் வட்டி நஷ்டம் ஏற்படுவதைத் தவிர்க்கலாம்.

— *சுபா பாரதி*

புகைப்படம்: ஏ. எஸ். திவாகர்

• கோமளா வரதன்



• சுகாசினி



• சீதாலட்சுமி



# இந்த வருடம் இவர்கள்!



• வசந்தா



• ராஜலட்சுமி

தமிழ்நாடு இயல் இசை நாடகமன்றம் சிறந்து விளங்கும் கலைஞர்களுக்கு ஆண்டு தோறும் ''கலைமாமணி'' விருதினை வழங்கு கிறது 1986 — 87 ஆம் ஆண்டில் பரிசு பெற்ற பதினான்கு கலைஞர்களில் ஐவர் பெண் கலைஞர்கள்.

## டாக்டர் திருமதி வசந்தா சீனுவாசன்

41 வயதான டாக்டர் வசந்தா, பேராசிரியர் சீனிவாசராகவனின் மருமகள்.

இசைக் கலையிலும் ஆங்கில இலக்கியத்திலும் முதுகலைப் பட்டம் பெற்றவர். இசையின் புதிய நெறிகளையும் நுணுக்கங்களையும் தொடர்ந்து பயின்று வருகிறார். இசைக் கல்வி எனும் சிறப்புத் துறையில் இந்தியாவிலேயே முதலாவதாக பி. எச்.டி. பட்டம் பெற்றவர்.

## திருமதி கோமளா வரதன்

திருமதி கோமளா வரதன் ஒரு புகழ் வாய்ந்த பரத நாட்டியக் கலைஞர். கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியாவிலும் பல வெளிநாடுகளிலும் பல நாட்டிய நிகழ்ச்சிகளை நடத்தியவர். பட்டதாரி; பத்திரிகைத் துறையில் முதுகலைப் பட்டதாரி; எழுத்தாளர்; புகைப்படக்காரர்.

## செல்வி சுகாசினி

திரைப்பட உலகில் அடி எடுத்து வைத்த ஏழே ஆண்டுகளில் அகில இந்திய அளவில் புகழ் பெற்றிருப்பவர். முதல் படத்திலேயே தமிழக அரசின் விருதைப் பெற்றதுடன், சமீபத்தில் 'சிந்து பைரவி' மூலம் தேசிய விருதையும் பெற்றிருக்கிறார். சென்னைத் திரைப்படக் கல்லூரியின் முதல் பெண் ஒளிப்பதிவாளர்.

## செல்வி சீதாலட்சுமி

பொம்மைகளை இயக்குவதிலும் தோற் பாவைகளைச் சாதுரியமாகக் கையாளுவதிலும் மிக்கத் திறன் படைத்தவர். இவர் மத்திய தோல் ஆராய்ச்சி அலுவலகத்தில் ''பப்பட்ரி'' பிரிவில் அலுவலராகப் பணி புரிந்து வருகின்றார். ஆச்சாரியா ரமணமூர்த்தி அவர்களிடம் இக்கலையைப் பயின்றவர்.

தேசிய அளவிலும் உலக அளவிலும் நடந்த பல ''பப்படரி'' ஒர்க் ஷாப்புகளில் இந்தியாவின் பிரதிநிதியாகப் பங்கு பெற்று, பல வெளி நாட்டவர்களுக்கு இக்கலையைப் போதித்துள்ளார். ''இந்தியன் பப்பட்டீர்ஸ்'' என்ற தோற்பாவை கழகத்தை ஆச்சாரியா ரமணமூர்த்தி நிறுவினார். அதனை சீதாலட்சுமி தொடர்ந்து நடத்தி வருகிறார்.

## திருமதி எம். எஸ். ராஜலட்சுமி

இவ்வாண்டு விருது பெற்ற கலைஞர்களிலே திருமதி ராஜலட்சுமிதான் வயதில் இளையவர். இன்னமும் இருபத்து நான்கு வயதினை எட்டாத இக்கலைஞர் தமது பதினோராவது வயது முதற்கொண்டே வில்லுப்பாட்டு கலையில் ஈடுபாடு கொண்டுள்ளவர். நமச்சிவாயபுரம் கணபதி ரெட்டியாரிடம் பயின்றவர்.

திருநெல்வேலி சீமை வில்லுப்பாட்டுக் கலைக்கு உறைவிடம். பாரம்பரியமும் பழைமையும் வாய்ந்த அக்கலையில் தேர்ச்சி பெற இனிய குரலும் மற்றும் சுத்தமான உச்சரிப்பும் தேவை. இளைமையாகியும் ராஜலட்சுமி இக்கலை மீது மிகுந்த பற்று கொண்டு, இது வரையும் 1400 நிகழ்ச்சிகளுக்கு மேல் நடத்தியுள்ளார்.

-தொகுப்பு: கே. எல். ராமன்

சரியாக இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன.

வடக்கே கயா, பூரி, காசி என்று போய்விட்டு, தெற்கே மதுரை, குருவாயூர், பழனி, திருப்பதி என்று வலம் வந்து கடைசியாய் இந்த முக்தி தரும் நகரான காஞ்சிபுரத்தை வந்தடைந்த போது அன்று மாலை மறையத் துவங்கிவிட்டது. மீண்டும் நினைத்தார்கள்.

வீட்டை விட்டுக் கிளம்பி இரண்டு மாதங்களாய் விட்டன.

கோவிலில் அர்ச்சனைகள் முடிந்தவுடன், பிராகாரங்களில் வலம் வந்து அந்தக் குளக் கரையில் வந்து அமர்ந்தார்கள் ஸ்ரீராமும் பத்மாவும். நிலவில்லாத வனம் — கருமையாய், வெறுமையாய் இருந்தது. அங்கொன்றும் இங்கொன்றுமாய் நட்சத்திரங்கள்

# கரை இல்லாத உள்ளங்கள்

ரஜனி சந்தானம்



சோகையாய் மின்னின. குளத்தங்கரையைத் தழுவிச் சென்ற குளிர் காற்றாலும், அவர்களின் உள்ளத்தைக் குளிர்விக்க முடிய வில்லை.

சோகமாய், பத்மாவை ஏறிட்டு பார்த்தான் ஸ்ரீராம்.,

'முப்பத்தஞ்சு வயசுக்குள்ள முழு சாமி யாராயிட்டோம் இல்லையா...?'

'எங்க தப்புனே தெரியலே பத்மா... நமக்கேன் இந்த தண்டனை...'

'பாட்டியம்மா வைத்தியத்திலிருந்து பெரிய எம்.டி. வரை எல்லாரையும் பார்த்தாச்சு., அவங்க சொன்னது எல்லாத்தையும் செஞ்சாச்சு, விரதமிருந்தாச்சு, தான தர்மம் பண்ணியாச்சு. இப்போ எல்லாப் புண்ணிய ஸ்தலங்களையும் சேவிச்சாச்சு... இனிமே எதுவுமே பார்க்க இல்லே. கடவுள் கண் திறக்கவே இல்லே... யார் செஞ்ச பாவமோ, வரவர எனக்குக் கடவுள் நம்பிக்கையே போயிடும் போல் இருக்கு. மனசு வெறுத்துப் போச்சு.''

'கொஞ்சம் பொறுமையா இரு பத்மா... நம்பிக்கைலதான் உலகமே சுழல்றது...''

' ''நம்ம ரெண்டு பேர் கிட்டேயும் குறை இல்லே. ஆனாலும் கல்யாணமாயி எட்டு வருஷங்களாகியும் குழந்தை இல்லேன்னு... வேற எந்த சுகம் இருந்தும் என்னங்க பிரயோஜனம்? 'தூ' ...ன்னு எல்லாத்தையும் தூக்கிப் போட்டுட்டு, எங்கேயாவது... மனுஷ நடமாட்டமே இல்லாத... குத்தலான பார்வைகள் படாத இடத்துக்குப் போயிடலாமான்னு இருக்கு... இது ஏதுவோ தெய்வ குத்தமா இருக்குமா?

''அதுக்குத்தான் எல்லாக் கோவில்களிலும் ஹோமம் மூட்டி பரிகார நிவர்த்தி, நவக்கிரக சாந்தி எல்லாம் பண்ணியாச்சே.''

''ஒருவேளை யாராவது இட்ட சாபமா இருக்குமோ...?''

''எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்லேர்ந்து, என் மனசுக்குத் தெரிஞ்சு, பெரிசா சாபம் கொடுக்கக் கூடிய அளவுக்கு, நான் யாருக்கும் எந்தக் கெடுதலும் செய்ததில்லேயே பத்மா...''

''நானும் கூட பெரிசா யாருக்கும் ஒண்ணும் கெடுதல் செய்யலே... ஒருவேளை நம்ம அம்மா, அப்பா, தாத்தா, பாட்டின்னு யாராவது செஞ்சு அது நம்ம தலைல விழறதோ ...?''

''அப்படிக் கூட இருக்குமா பத்மா? நாம தப்பு பண்ணாம, தண்டனையை மட்டும் அனுபவிக்கும்படி இருக்குமோ?''

''வேறே என்னவாக இருக்க முடியும்? எனக்கு நம்பிக்கையே அத்துப் போச்சு...''

இருவருக்கும் இடையில் அசௌகரியப்படுத்தும் ஒரு மௌனம் நீண்டது. எங்கோ ஓர் ஆந்தை ஒற்றையாய் அலறியது.

தாங்கள் இதுவரை பேசியதையே அசை போட்டது ஸ்ரீராமின் மனம். திடீரென... மனத்தில் ஒரு மின்னல் அடித்தது.

ஒருவேளை... பத்மா சொல்வது போல்,... அதுவாய் இருக்குமா? இருக்குமா? ஏன் இருக்கக் கூடாது? ஒருவேளை அதுதானோ? அதுதான்... அதுவேதான்... மனம் படிப் படியாய்த் தன் வழியில் பிடிவாதம் பிடிக்கத் துவங்கியது.

ஸ்ரீராம் பரபரத்தான்.

''பத்மா... கிளம்பு... இங்கதான் பக்கத்துல... வேலூர்ல அத்தை இருக்கா... பார்த்துட்டுப் போகலாம்...''

''அத்தையா..? உங்களுக்கொரு அத்தை இருப்பது, இதுவரை எனக்குத் தெரியாதே... நீங்க சொன்னது கூட இல்லேயே...''

''எல்லோருமே அவங்களை மறந்துட்டோம் பத்மா... ஒருவேளை நீ சொல்வது போல் அத்தையோட சாபமா இருக்குமோ? எனக்கு மங்கலா எல்லாம் ஞாபகத்துக்கு வருது. அப்போ எட்டு வயசு இருக்கும்னு நினைக்கிறேன்.

எங்க தாத்தாவுக்கு என் அப்பா கணேசன், சித்தப்பா ஆறுமுகம், அத்தை லக்ஷ்மி மூணு பேர் குழந்தைகள். அதுல எங்கப்பாக்கு நாங்க மூன்று பேரும் பிள்ளைங்க. பெண் குழந்தைகள் கிடையாது. சித்தப்பாக்குக் குழந்தைகளே பிறக்கவில்லே., லக்ஷ்மி அத்தைக்கு ஆனந்தின்னு ஒரே ஒரு பெண்தான்.

அவளுக்கும் எனக்கும் ஒரே வயசு. சித்தப்பா தான் எங்க குடும்பத்துல நல்ல பணக்காரர். சொந்தத்தில் நிறைய கடைகள் வெச்சு வியாபாரம் செய்து கொண்டிருந்தார்.



லக்ஷ்மி அத்தையை நல்ல இடத்திலதான் கொடுத்து இருந்தாங்க. ஆனா... போதாத காலம்... திடீர்னு அத்தையோட புருஷனுக்கு வியாபாரத்துல பெரிய நஷ்டம் வந்து... ஒரே நாள்ள ஓட்டாண்டியா ஆகிட்டாரு. வியாபாரம் நொடிச்சுப் போனதால மனம் உடைஞ்ச அத்தை புருஷன் படுக்கைல விழுந்துட்டார். கடன் தொல்லையால அவஸ்தைப் பட்டுக்கிட்டு இருந்தாங்க.

அப்பத்தான்... ஒருநாள், சித்தப்பாக்கு திடீர்னு லேசான 'மைல்ட்' ஹார்ட் அட்டாக் வந்தது. பிழைத்து வீட்டுக்கு வந்ததும் தான் அதிக நாள் வாழ மாட்டோம்கிற பயம் வந்தது. தனக்குப் பின் வியாபாரத்தையும் சொத்தையும் நிர்வகிக்க வாரிசு இல்லையேன்றதைவிட தனக்குக் கொள்ளி போடக் குழந்தை இல்லையேன்னு சதா வருந்தினார். கடைசியாக வீட்டில எல்லாருமா கூடிப் பேசி, சின்ன பையனான என்னைச் சித்தப்பா தத்து எடுக்கணும்னு முடிவு செஞ்சாங்க.

அப்போ வந்த அத்தை "அண்ணா... என் பெண்ணைத் தத்து எடுத்துக்கோயேன். அதை வளர்க்க முடியாம கஷ்டப்படறேனே.. நீயாவது நன்றாக வளர்ப்பாய். எனக்கும் மனவேதனை குறையும்..." என்றாள். ஆனா... சித்தப்பா பெண் குழந்தையைத் தத்து எடுத்து என்ன பிரயோஜனம்? புத்தென்ற நரகத்துலேர்ந்து காப்பாத்தப் போறவன் புத்திரன் தான். ஒரு பொட்டைப் பொண்ணைத் தத்து எடுத்துண்டு, எனக்குக் கொள்ளி போடக் கூட லாயக்கில்லாம, போற இடத்துக்கும் புண்ணியமில்லாம.. ச்சீ... வேண்டவே வேண்டாம்னிட்டார்."

அப்புறம் என்னைக் கோலாகலமா தத்து எடுத்துக்கிட்டாங்க. சித்தப்பாவை அப்பான்னு கூப்பிட இன்னும் கூட நான் பழகலை. அன்னிக்கு அத்தை என்னென்னமோ பேசினாங்க. சின்ன பையனா இருந்ததால எனக்கும் புரியலை. அதுக்கப்புறம் அத்தை எங்க வீட்டுப் பக்கமே வரலை. ஒருவேளை. நீ சொல்றது போல அத்தையோட சாபமோ இது... சொத்து பூரா எனக்கு வந்ததும் அதை ஆள ஒரு குழந்தை இல்லாம நானும் தவிக்கிறேனே. அத்தை வேலூர்ல தான் இருக்காங்க. வா, போய் பார்த்துட்டு வரலாம்..."

இரவு கடைசி பஸ்ஸில் வேலூரை அடைந்து, பக்கத்தில் இரண்டு மூன்று பேரிடம், அத்தை புருஷனை, அத்தையை, அவர்களின் முன்னாள் வியாபாரத்தை அடையாளமாகக் கூறி விசாரித்ததில் அந்தப் பெரிய பங்களாவை அடையாளம் காண்பித்தார்கள். நம்பிக்கை இல்லாமல் உள்ளே நுழைந்து, வாயில் மணியை அடித்துவிட்டுக் காத்திருந்தார்கள். கதவைத் திறந்தது அத்தையாய்த்தான் இருக்க வேண்டும். அந்த நீண்ட மூக்கும், சற்று உள்ளடங்கிய கண்களும் தாத்தாவை, அப்பாவை நினைவு படுத்தின.

"அத்தை.... நான் ஸ்ரீராம் வந்திருக்கேன்..."

ஒரு நிமிடம், எங்கோ உலவிய நினைவுகளை இழுத்து இனம் தேடின அத்தை —

"ஸ்ரீராம்... கண்ணா... கனகு பிள்ளை... இல்லை, இல்லை, ஆறுமுகத்தண்ணாவோட தத்துப் பிள்ளைதானே நீ...? வாடா ராஜா உள்ளே...நீயாவது என்னை நினைவு வெச்சிருக்கியா ராஜா...இத்தனாண்டுல பார்த்தேன்டா கண்ணா உன்னை... எப்படிப்பா இருக்கே...? உம் பெண்டாட்டியா? (காலில் விழுந்து வணங்கிய பத்மாவை)... எழுந்திரும்மா,... தீர்க்க சுமங்கலியா நல்லா இரும்மா..."

"சாப்பிடறயா?" — உள்ளே திரும்பி சமையல்காரியை அழைத்து வேகமாய், சின்ன விருந்தொன்றுக்கு ஏற்பாடு செய்யச் சொன்னாள்.

"ஆனந்தி எங்க இருக்கா அத்தை...?"

"ஆனந்தியை ஞாபகம் இருக்காப்பா உனக்கு...? அவளும் நீயும் ஒரே வயசு. நீ அவளைவிட இரண்டொரு மாசம் வேணும்னா பெரியவனா இருப்பே. இப்ப அவ கனடாவில இருக்கா. மாப்பிள்ளை தங்கமானவர்.

ஆனந்தியோட அப்பா போனவிட்டு மாப்பிள்ளைதான் என்னைப் பிறந்த வீட்டுப் பக்கம் போக வேண்டாம்னு சொல்லிட்டு, இந்த வீட்டை வாங்கிப் போட்டு, இத்தனை வசதியையும் பண்ணிக் குடுத்திருக்கார். வருஷத்துக்கு ஒரு தடவை பசங்களோட வாராங்க. ரெண்டு மாசம் இருப்பாங்க. மீதி பத்து மாசம் அவங்க நினைப்புலேயே நான் இருந்துடுவேன். அடிக்கடி டெலிபோன்ல பேசறா... ஆமா... நீ என்ன பண்றே... உத்தியோகத்துல இருக்கியோ...? இல்லை அண்ணாவோட வியாபாரத்தையே பார்த்துக்கறயா? உனக்கெதுக்கப்பா உத்தியோகம்...? அண்ணன்

படுக்கையில் சிறுநீர்க் கழிக்கும் குழந்தைகள் பெற்றோர்களுக்கு ஒரு பிரச்னை. டாக்டரிடம் போனால், "காலம் போகப் போகச் சரியாய் விடும்" என்றுதான் கூறுவார்.

உடம்பிலேயே நீரை நிறுத்தும் தன்மையுள்ள உணவை அவர்களுக்குத் தர வேண்டும். நீரை உறிஞ்சி அதைநிறுத்தும் தன்மை தேனுக்கு உண்டு.

தினமும் படுக்கப் போகும் போது குழந்தைக்கு ஒரு தேக்கரண்டி தேனைக் கொடுத்தால் போதும். குழந்தையின் நரம்புத் தளர்ச்சியைப் போக்கி உணவிலுள்ள நீரைக் கவர்ந்து உடலுக்குள்ளேயே நிறுத்துகிறது. குழந்தை படுக்கையில் சிறுநீர்க் கழிப்பதைத் தடுக்கிறது.

— துடுப்பதி வெங்கண்ணா.

# தங்க கவரிங் நகைகளுக்கு
# தன்னிகரற்ற பெயர் ''மேரி''

கண்ணைக் கவரும், அழகும், பொலிவும், தரமும் உத்திரவாதமும் உடைய உலகப் புகழ்பெற்ற 22ct ''மேரி'' தங்க கவரிங் நகைகளை வாங்கி அணிந்து மகிழுங்கள்!

நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் நகைகள் அனுப்பப்படும். வி.பி.பி. சார்ஜ் தனி. இலவச கேட்லாக்கைப் பெற எழுதுங்கள்!




## மேரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால்பெட்டி : 1405, 14, ரங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600017.

சொத்துதான் நாலு தலைமுறைக்கு வருமே. உன் பெண்டாட்டிக்கு எந்த ஊர்... எத்தனை பசங்க உங்களுக்கு?" மூச்சு விடாமல் பேசிய அத்தையை மௌனமாய்ப் பார்த்தார்கள். மெல்லிய பெருமூச்சொன்றை வெளிவிட்ட படி சோகையாய் பதில் சொன்னான் ஸ்ரீராம்.

"அத்தை... எங்களுக்கும் குழந்தை பாக்கியம் இல்லை அத்தை..." பத்மா அழுதே விட்டாள்.

"என்ன... என்ன சொன்னே...? உங்களுக்கும் குழந்தை பிறக்கலயா இன்னும்? அட ராமா..."

சட்டென்று பத்மா அத்தையின் கைகளை பிடித்துக் கொண்டாள். "அத்தை.... ஒரு வேளை இது நீங்க வெச்ச சாபமோன்னு தோணறது அத்தை. எது எப்படியானாலும் நாங்க ஒரு தப்பும் செய்யலே... எங்களை நீங்க மனசு குளிர்ந்து ஆசிர்வாதம் பண்ணுங்க அத்தை. எல்லா நம்பிக்கையும் இத்துப் போன நிலைல வந்திருக்கோம் அத்தை. எங்களை ஆசிர்வாதம் பண்ணுங்க அத்தை..."

உணர்ச்சிவசப்பட்டவளாய், தன் புடைவைத் தலைப்பின் முனைகளை அத்தையின் முன் மடிப்பிச்சை எடுப்பவளைப் போல் நீட்டி, மண்டியிட்டு, பரிதாபமாய், கண்களில் கண்ணீர் கோடு போல் வழிய யாசித்தாள்.

கல் போல் அமர்ந்திருந்தாள் அத்தை. முகம் இறுகி இருந்தாலும் மெதுவாய்ப் பேசினாள்.

"எனக்கென்னப்பா தகுதி இருக்கு சாபம் இட. நான் ரொம்ப சாதாரண மனுஷி. எழுந்திரும்மா. இப்பத்தானே கல்யாணமாகி எட்டு வருஷங்களாச்சுன்னே... தானே பொறக்கும்... இன்னும் நீங்க சின்னவங்க தானே...!" கைகளால் பத்மாவை அள்ளி அணைத்து, தன்னுடைய இன்னொரு பக்கத்தில் இருத்திக் கொண்டாள்.

"அத்தை... சின்ன வயசுல உங்களுக்கும் அப்பா, சித்தப்பா எல்லோருக்கும் என்னைத் தத்து எடுக்கும் போது என்னவோ வாக்கு வாதம் நடக்கலே? எனக்கு அது சரியாப் புரியாவிட்டாலும் அந்த நிகழ்ச்சி மங்கலாய் ஞாபகம் இருக்கு அத்தை..."

"ஓ... அதுவா ...? ஆனந்தியைத் தத்து எடுத்துக்கோன்னேன், சின்ன அண்ணா கிட்டே. அப்போ வினைக ஒரு சின்ன குருத்து சரியான பராமரிப்பு இல்லாம வாடிடுமோன்னு நினைச்சு பயந்தேன். அடிக்கடி ஜுரம் வரும் அவனுக்கு. டாக்டர்கிட்ட காட்ட வசதிபடாது. எங்களுக்கு மனசு கிடந்து துடிக்கும்.

அண்ணா பெண்களைத் தத்து எடுத்துக்கிட்டதா சாஸ்திரமே கிடையாதுன்னான். 'என்னப்பா சாஸ்திரங்கள்? எல்லாமே நாமே வெச்சுக்கறதுதானே. நீரில்லாம, சத்தில்லாம வாடி போற செடிக்குத் தண்ணியும் உரமும் போடணுமே தவிர, நல்ல செழிப்பான செடிக்கு அதெல்லாம் அவசியமில்லை இல்லையா? அதுபோலத்தான் இதுவும்'னேன்.

இந்த ஜென்மத்துல கண் முன்னால் ஒரு குழந்தை செழிப்பாய் வளருவதைப் பாக்கிற இன்பத்தைவிட செத்தாவிட்டுக் கிடைக்கப்போற சொர்க்கத்துக்கே முதலில் ஆசைப் படறது சுத்தசுயநலமில்லையா? சின்ன வயசுல சந்தோஷத்தையும் பெரிய வயசுல நமக்கு ஆதரவும், அன்பும் கொடுக்க ஒரு வாரிசை உருவாக்கறதுதானே இயற்கை தர்மம். அந்த வாரிசு — அந்த உயிர் — ஆணா இருந்தா என்ன, பொண்ணா இருந்தா என்ன?

இதோ பாரேன், என் பெண் என்னைத் தாங்கலையா? ஒரு பிள்ளை இருந்தா செய்யக் கூடிய எல்லாத்தையும் — பாசம் — ஆதரவுன்னு எல்லாத்தையும் எனக்குக் குடுக்கறா. இதுல என்ன குறை இருக்கு?

உனக்கு ஒரு சின்ன புத்திமதி சொல்றேன். கேட்டுக்கறதும், விட்டுடறதும் உன் இஷ்டம். ஊர்ல, ரொம்ப ஏழையான, ஆதரவற்ற அனாதையான, வியாதியால் பீடிக்கப்பட்ட, வாடி வழி தெரியாமல் ஆனா வாழணும்கிற பிடிவாதத்தோட இருக்கிற ஓர் உயிரை, அது பெண்ணாய் இருந்தால் இன்னும் விசேஷம், எந்த ஜாதி, மதம்னு பார்க்காமல் தத்து எடுத்துக்கோ. அந்தக்குழந்தையின் வாழ்வை மனப்பூர்வமா ஒளிமயமாக்கு. தானா உனக்குக் குழந்தைகள் பிறக்கும். இன்னும் நீங்க சின்னவர்கள்தானே?"

அன்று அத்தையுடன் இரவு தங்கிவிட்டு, மறுநாள் முதல் — ஓர் ஆதரவற்ற பெண் குழந்தைக்காகத் தேடத் துவங்கினார்கள் ஸ்ரீராமும், பத்மாவும். பஞ்சாபில் ஒரு ரெப்யூஜி கேம்பில் தலைமட்டும் பெரியதாக இனம் தெரியும்படி இருக்க, குச்சி குச்சிக் கால்களுடன் இருந்த அந்தப் பெண் குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ள முடிவு செய்தார்கள். பஞ்சாப் கலவரத்தில் வீட்டோடு எரிக்கப்பட்டபோது அந்தக் குழந்தை மட்டும் தப்பியதாம். அதன் பெற்றோர், உறவினர் எல்லோரும் கலவரத்தில் இறந்து போனார்கள். அந்த கேம்ப் அதிகாரிகள் காட்டிய பல காகிதங்களில் கையெழுத்திட்டு அந்தக் குழந்தையை எடுத்து வந்து வளர்த்தார்கள்.

ஒரே ஆண்டில் உடல் தேறி, அழகாக உருக் கொண்டாள் அவர்களின் மகள் சௌஜன்யா. அவள் தந்த ஆத்ம திருப்தியால் பத்மாவிற்கு மனமும், உடலும் இளகியது. மறு வருடமே அழகான ஆண் குழந்தைக்குத் தாயானாள்.

அலாரம் டைம்பீஸோ அல்லது கைக் கடிகாரமோ ஏதோ காரணமாக ஓட வில்லை என்றால் வருத்தப்படாதீர்கள். பத்துப் பதினைந்து நிமிடங்கள் நல்ல வெயிலில் வைத்தீர்களானால் தானாகவே ஓட ஆரம்பித்துவிடும்.

— கீதா பிரபாகர்.

# ஆய்வரங்கம்



முதல் ஆய்வரங்கம்

இன்றைய நிலையில் எல்லாப் பெற்றோர்களுமே, 'கஷ்டப்பட்டாவது நல்ல பள்ளியில் குழந்தைகளைச் சேர்க்க வேண்டும்; பணம் செலவானாலும் படிப்பு நன்றாக வர வேண்டும்' என்று சிறந்த பள்ளிகளில் சேர்க்கிறார்கள். ஆனால் குழந்தைகள் மீண்டும் மூட்டை 'ஹோம் — ஒர்க்' குடன் வீட்டுக்கே திரும்புகிறது. 'புத்திசாலியான குழந்தைகளுக்காக நிறைய நேரம் செலவு செய்யும் பெற்றோர்களின் குழந்தைகளே முதல் மார்க் வாங்குகின்றன. பெற்றோர்களே சொல்லிக் கொடுத்துவிட முடியும் என்றால் அப்புறம் இவர்கள் எதற்கு?' எனக் குறைபட்டுக் கொள்கிறார்கள்.

ஆசிரியர்களோ, 'குழந்தையைப் பள்ளியில் சேர்த்துவிட்டால் தங்கள் பொறுப்பெல்லாம் தீர்ந்து விட்டதாகப் பெற்றோர்கள் நினைப்பது தவறு' என்கிறார்கள்.

இவர்களில் யார் பக்கம் நியாயம்? கம்ப்யூட்டர் யுகத்தில் நமது குழந்தைகளின் நிலை என்ன?

பெற்றோர்களிடமிருந்து ஆசிரியர்கள் என்ன எதிர்பார்க்கிறார்கள்? ஆசிரியர்களிடமிருந்து பெற்றோர்கள் என்ன எதிர்பார்க்கிறார்கள்? இங்கே இதுபற்றி ஆய்பவர்கள் —

**பெற்றோர்கள் Vs கல்வியாளர்கள்**

# நாங்கள்

**கல்வியாளர்கள் :**

திரு. மீனாட்சிசுந்தரம்—சங்கரா சீனியர் செகண்டரி பள்ளி, திருமதி ராதாராவ்—அண்ணா ஆதர்ஷ் கல்லூரி, திருமதி மோகனா சந்திரசேகர் — தேசிய ஆங்கிலப்பள்ளி, திருமதி ராஜம்மாள்—சாரதா வித்யாலயா (பர்கிட் ரோட்).

**பெற்றோர்கள் :**

திருமதிகள் வித்யா, பங்கஜம், சங்கரி, சுமதி, மோகனா, சந்திரிகா, திலகவதி, திரு. சுப்ரமண்யன், நாராயணன்.

ராதாராவ்: தங்களுடைய குழந்தைகளைப் பற்றி எதிர்பார்ப்பு பெற்றோர்கள் கிட்ட மிக அதிகமா இருக்கு. நல்லா மார்க் வாங்கணும்னு எல்லோருமே எதிர்பார்க்கறாங்க. வரலைன்னா டீச்சர் மேல குறை சொல்லிடறாங்க. நல்ல ஸ்கூல் இல்லைன்னுடறாங்க.

நல்லஸ்கூல்லஎன் பையனைச்சேர்க்கணுங்கறாங்களே, இதை பெற்றோர் எப்படித் தீர்





# என்ன எதிர்பார்க்கிறோம்?

மானிக்கறாங்க? நிறைய குழந்தைங்க படிக்கறாங்கங்கறதாலயா, நிறைய பீஸ் வாங்கறதாலயா, டீச்சர்ஸ் பாடுபட்டு சொல்லித்தரத வச்சா, பிரின்ஸிபால் அன்பாப் பேசறதாலயா, மானேஜ்மெண்டுல ஆளைத் தெரியும்னு. அந்த ஸ்கூல்ல வர ரிசல்ட் வச்சா—எத வச்சுத் தீர்மானிக்கறாங்க?

வித்யா சுப்ரமண்யம்: எங்க பசங்கள சேர்க்கப் போகும்போது எங்க நண்பர் வீட்டுல இருக்கற குழந்தைகளைப் பார்த்தோம். அவங்க நடத்தை ரொம்ப நல்லா இருந்தது. உடனே என் குழந்தைகளை அங்கதான் சேர்க்கணும்னு முடிவு பண்ணினேன். ஸ்கூலைப் பார்க்காம, பிரின்ஸிபால், பீஸ் எதையுமே பார்க்காம வெறும் பிகேவியரைப் பார்த்து நம்ப பசங்களை இங்கதான் சேர்க்கணும்னு சேர்த்தோம்.

பங்கஜம்: என் பையனை மூணு வயசுல ஸ்கூல்ல சேர்த்தேன். எல்லோரும் சொல்லுவா, பிளஸ் டூவில நல்ல ரிசல்ட் வந்தாத்தான், இந்த ஸ்கூல் பசங்களுக்கு ஐ. ஐ. டி. யில் சீட் கிடைச்சாத்தான் அது நல்ல ஸ்கூலு. படிப்பு முன்ன பின்ன இருந்ததுன்னு டியூஷன் வச்சிடலாம். இப்படியெல்லாம் சொல்லிக் கொடுக்க முடியாத ஒரு விஷயம் இருக்கு. அதுதான் நல்ல பழக்கம். அதைச் சொல்லிக் கொடுக்கத்தான் பள்ளிக்கூடம்.

மோகனு: சில பேரண்ட்ஸ் வகுப்பு டீச்சரைப் பத்தியோ, மற்றதைப் பத்தியோ புகார் சொல்வாங்க. ஆனால் அதையும் மனசு புண்படாத வகையில் சொன்னாங்கன்னு நல்லாயிருக்கும். எமோஷனலா இல்லாம பிரச்னையைப் புரிஞ்சிண்டு பேசணும். பெற்றோர் புத்திசாலியா நிறைய விஷயம் தெரிஞ்சவங்களா இருக்கறது சந்தோஷம் தான். சில பெற்றோர்கள் டீச்சர்ஸுக்கு ஒண்ணுமே தெரியாதுங்கற மாதிரி பேசிடுவாங்க. அப்படிப் பேசினா குழந்தைகள் மதிப்புல டீச்சர்ஸ் விழுந்துடுவாங்க. டீச்சருடைய தன்மானத்தைக் குறைக்காத விதத்துல பெற்றோர் நடந்துக்கணும்.

மீனாட்சி சுந்தரம்: இப்படி கம்ப்ளெயிண்ட் செய்ய முன்வரும் போது சில பெற்றோருக்கு ஹைபர் டென்ஷனே வந்துடும்!



ரொம்ப சத்தம் போடுவாங்க.

சங்கரி பிரசன்னு: கேட்கும்போது டீச்சருக்குத்தான் பொறுமை அதிகம் இருக்கணும். அவங்கதானே பொறுமையை போதிக்கிறவங்க.

மீனுட்சி சுந்தரம்: இருந்தாலும் பொறுமையைச் சோதிக்கிற அளவுக்கு இருந்தா என்னம்மா பண்றது? (சிரிப்பு)

சுமதி நாராயணன்: இதுக்கெல்லாம் முக்கியக் காரணம் ஸ்கூல்ல ஒவ்வொரு கிளாஸுக்கும் நாற்பது, ஐம்பதுன்னு பசங்கள அதிகமாக்கிக்கிட்டே போறதுதான். சமாளிக்க முடியாத நிலைமைக்குப் போகும் போது டீச்சருக்குக் கோபம் வருது.

சந்திரிகா: இதை நீங்கதான் மேல இருக்கறவங்களுக்கும் சொல்லணும்.

ராதாராவ்: "நீங்க சொல்றது எப்படி இருக்குன்னு, பஸ்சுக்காகக்காத்திருப்போம். கூட்டமா பஸ் வந்தாலும், எப்படியாச்சும் முண்டியடிச்சுக்கிட்டு ஏறிளுப் போதும்னு ஏறிடுவோம். அடுத்த ஸ்டாப்லேந்து 'ஏய்யா, இப்படி ஏத்திப் பிராணனை வாங்கறே. நிறுத்தாம போயேன்'னு சத்தம் போடுவோம். இந்த ஸ்கூல்லதான் சீட் வேணும்னு அடம் பிடிச்சா இப்படித்தான்."

பங்கஜம்: நீங்க சொல்ற பஸ் கஷ்டம் ஒரு குறிப்பிட்ட நேரத்துக்குத்தான். பரவாயில்லை. ஆனல் ஸ்கூல் லைஃப் அப்படியில்லே. ஒருவனுடைய வாழ்க்கையை நிர்ணயிக்கிறதே கல்விதானே?

ராஜம்மாள்: எங்க ஸ்கூல்ல பத்தாவது வரைக்கும் இங்கிலீஷ் மீடியம் ஒரு செக்ஷன் தான். 130 குழந்தைகள் அந்த செக்ஷன்லே படிக்கிறாங்கன்னு பார்த்துக்குங்க. ஸ்டேட் போர்டு ஸ்கூல்ல குழந்தைகளைக் கட்டுப் படுத்தவே முடியாது.

சுமதி நாராயணன்: "பண்ண முடியாதா? பண்ண நினைக்கலையா?"



"குழந்தைக்கு மூணுவயசு ஆகறதுக்குள்ளே யூனிஃபார்ம் மாட்டி ஸ்கூலுக்கு அனுப்பிச்சிடறாங்க!"

ராஜம்மாள்: "பத்து வருஷமா ஏதாவது பண்ணணும்னு சொல்லிக்கிட்டுத்தான் இருக்கோம்.

மோகன: "இப்ப இருக்கிற பெற்றோர்களின் எதிர்பார்ப்பு படிப்பு, ரேங்க் அப்படிங்கற போக்குலதான் இருக்கு. இப்ப புது பாடத் திட்டப்படி நிறைய மற்ற விஷயங்களையும் சொல்லித் தரணும். சில குழந்தைகளுக்கு கல்சுரல் ஆக்டிவிடீஸில் எல்லாம் ரொம்ப ஆர்வம் இருந்தாலும் அவங்க அதுல ஈடுபடுத்த முடியறதுல்ல. ஏன்னு உடனே பேரண்ட்ஸ் வந்து சண்டை போடறாங்க. 'ஏம்மா எங்க பசங்கள படிக்க விடாம டிராமாவில் எல்லாம் சேக்கறீங்க'ன்னு.

சங்கரி பிரசன்னு: எல்லா பெற்றோர்களுமே தன் குழந்தை பெரிசா ஏதாவது ஒண்ணைச் சாதிக்கணும்னுதான் நினைப்பாங்க.

மீனுட்சி சுந்தரம்: முப்பத்திநாலு வருஷமா இந்தத் துறையில இருக்கேன். நான் பார்த்த வரைக்கும் எல்லாப் பெற்றோருக்கும் ஒரே ஆசைதான். வாழ்க்கையில நாம அடையாததை எல்லாம் நம்ம குழந்தைகள் அடைஞ்சுடணும்ங்கறதுதான் அது.

குழந்தைக்கு மூணு வயசு, ஆகறதுக்குள்ளே யூனிஃபார்ம் மாட்டி ஸ்கூலுக்கு அனுப்பிச்சிடறாங்க. நம்ம பக்கத்து வீட்டுப் பையன் நம்ப பையன விட நிறைய மார்க் வாங்கிட்டா நம்ப ஸ்கூல் டீச்சர் மேலே ஏதோ குறையிருக்குன்னு நினைக்க ஆரம்பிச்சிடறாங்க.

வித்யா சுப்ரமண்யன்: ஒரு தாய்ங்கற முறையில சொல்றேன். என் குழந்தைகள் மேல என் ஆசைகளை நான் ஒரு நாளும் திணிக்கிறதில்லே. என் பெண் சாதாரணமாக படிச்சு சாதாரணமாகத்தான் பாஸ் பண்ணினு எனக்கு சந்தோஷம்தான். ஒரு நல்ல பெண்ணு வளர்ந்ததிலே எனக்கு ரொம்பப் பெருமைதான்.

மீனுட்சி சுந்தரம்: "நாலைஞ்சு வருஷத்துக்கு முன்னல ஒரு எல். கே. ஜி. குழந்தையோட அம்மா வந்து என் பையன் சரியாப் படிக்கிறதில்லே. டியூஷன் வச்சிடுங்கன்னுங்க." (சிரிப்பு)

"டியூஷன் வச்சிட்டாப் போதும். எல்லாம் வந்துடும்னு நினைக்கிறாங்க. நிறைய ஹோம் ஒர்க் குடுக்கலைன்னு சொல்லித் தர்றது போறலைங்கறாங்க."

சந்திரிகா: எதுக்காக இந்தக் குழந்தைகளுக்கு இத்தனை ஹோம் ஒர்க்? இத்தனை புஸ்தகம்?

திலகா: "எப்பக் கேட்டாலும் எங்க டீச்சர் எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு வரணும்னு சொல்லியிருக்காங்க. எப்ப

# அறுபது ஆண்டுகளாய் மக்களை மகிழ்ச்சியூட்டும் நரசூஸ் காபி !







காலம் மாறிவிட்டது, ஆனால் நரசூஸ் காபி மாறவில்லை.
அதே குணம்! அதே மணம்! அதே சுவை!
அன்றும், இன்றும், என்றும் நிறைவுதரும் காபி!

வைர விழா கண்ட ஒரே காபி!

**நரசூஸ் காபி**



ஜீவனுள்ள ஒரே காபி

**நரசூஸ் காபி**



**நரசூஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007
கிளைகள்: தமிழகம் மற்றும் பாண்டிச்சேரியிலும்.

ADWAVE NCC 3277

# உங்கள் மகள் புகுந்த வீட்டில் பெருமை தேட சமையலறைக் குறிப்புக்களைச் சொல்லுங்கள்.

உங்கள் மகளுக்கு இன்றைக்கு நீங்கள் சொல்லித் தரும் விஷயங்கள் உங்களுக்கு நிம்மதியும் பெருமையும் தரும். அவளுக்கும் அவள் குடும்பத்திற்கும் மகிழ்ச்சி அளிக்கும்.

சமையல் அறையில் நேரத்தைக் குறைத்து, சிக்கனமாக சமைப்பது எப்படி என்பதை அவளுக்குச் சொல்லலாம். இதோ சில யோசனைகள்.

- சமைக்கத் தொடங்கும் முன் தேவையான எல்லா பொருட்களையும் எடுத்து வைத்துக் கொள்ளுங்கள்.
- தீ முழுவதுமாக பரவக்கூடிய வாயகன்ற, தட்டையான பாத்திரத்தில் உங்கள் மகள் சமைத்தால், சீக்கிரம் சிக்கனமாக சமையல் முடியும்.
- குளிர்ந்த பால் அல்லது ஃப்ரிஜ்ஜில் இருந்து எடுத்த உணவை சூடாக்கும் முன்பு சில்லிப்பு குறையட்டும்.
- தண்ணீர் நிறைய வைத்தால் சமைக்கவும் நிறைய நேரமாகும்; தண்ணீரை வடிக்கும்போது சத்தும் வீணாகும்.
- மூடி வைத்து சமைத்தால், சமையலும் சீக்கிரம் ஆகும். உணவுச் சத்தும் வெளியேறாது.
- பிரஷர் குக்கரில் சமைப்பது புத்திசாலித்தனமானது. ஏனெனில், நேரமும் எரிபொருளும் மிச்சமாவதோடு, உணவு அதன் ஆவியிலேயே வேகும்போது சுவை கூடுகிறது.
- கடலை, பருப்பு, மொச்சை ஆகியவற்றை முதல் நாளே ஊறவைத்து சமைக்கவும்.
- சாப்பிடுவதற்கு முன், அளவுக்கு அதிகமாக சூடாக்கினால், ருசி கெடுவதோடு, நிறையச் சத்தும் வீணாகிறது.

இவை சில குறிப்புக்கள் தான். உங்கள் அனுபவத்தில் இருந்து மேலும் பல யோசனைகளை உங்கள் மகளுக்குச் சொல்லலாம்.

உங்கள் மகள் சமையலில் கெட்டிக்காரியாக இருக்கலாம். இருந்தாலும் சிக்கனமாக எரிபொருளை பயன்படுத்துமாறு அவளிடம் எடுத்துச் சொல்லுங்கள். இப்போது நீங்கள் கற்றுத் தருவதை வைத்து மாமியார் மெச்சும் மருமகளாக அவள் வாழ்வாள்.

சமையல் அறைக் குறிப்புக்கள் பற்றிய <u>இலவச</u> புத்தகத்தை அனுப்புங்கள்.

பெயர்: ____________________

முகவரி: ____________________

____________________




Petroleum Conservation Research Association

Petroleum Conservation Research Association
Chordia Mansion, First Floor
739-Mount Road Madras-600 002
Ph. 810317 Grams: PETCAG.

## கேஸ், மண்ணெண்ணெய் சிக்கனம் பணத்தின் சேமிப்பு



CLARION D 389 TAM

வேணும்னு எது வேணும்னு நடத்துவாங்க. அப்படிங்கறாங்க குழந்தைகள்."

சுமதி: "அதுவேயில்லே. அத்தனே சுமையையும் முதுகில் கட்டிக் குழந்தைகள் எடுத்துக்கிட்டுப் போறாங்க. நாளடைவிலே அது முதுகுத்தண்டை பாதிக்கும்னு டாக்டர்கள் எச்சரிக்கை கொடுத்துக்கிட்டுத்தான் இருக்காங்க..."

மீனாட்சி சுந்தரம்: "சின்னக் குழந்தைகள் கையை உடைக்கிற அளவு ஹோம் ஒர்க் கொடுக்கிறதை நானும் எதிர்க்கிறேன்."

மோகனா: சரியான ப்ளானிங் இல்லாததுனலதான் இதெல்லாம். இப்ப ஹோம் ஒர்க் எல்லாம் குறைச்சுக்கிட்டு வரோம். இந்த மாதிரி குறைகளையெல்லாம் நேரே போய் பிரின்ஸிபால் கிட்ட பேசலாம்.

திலகா: வாரத்துக்கு ஒரு தடவை பெற்றோர்களைக் கூப்பிட்டுப் பேசலாம். பாதி ஸ்கூல்ல பேசவே விட மாட்டாங்க. பெற்றோர் சங்கங்கிறதெல்லாம் ஐ வாஷ்.

மோகனா: "அப்படிச் சொல்லாதீங்க. எத்தனே மீட்டிங் போட்டாலும் இந்தப் பெற்றோர் வரதில்லே. வந்தாலும் ஒரு பத்து பேர் தான் வராங்க."

சங்கரி: நமக்கு ஏதாவது சொல்லணும்னு கூட, ஸ்கூலுக்குப் போனா அவ்வளவு சுலபமா டீச்சரைப் பார்க்க முடியாது. ஏன்னா வீட்டில இருக்கும் தாயானா மத்தியானம் பார்க்கலாம். வேலை பார்க்கற பெண் என்ன செய்வாள்?

ராதா: "நீங்க பிரின்ஸிபாலைப் பார்த்துப் பேசலாமே!"

மீனாட்சி சுந்தரம்: "சில பெற்றோர் வந்து பெரிய கம்ப்ளெயிண்ட் சொல்லிட்டு நான் சொன்னேன்னு சொல்லாதீங்கன்னுடுவாங்க."

சந்திரிகா: "அப்படித் தெரிஞ்சா அப்புறம் குழந்தைகளைக் கோபிச்சுப்பாங்கங்கிற பயம். இருக்கலாமே!"

மோகனா: "ஒரு பள்ளி அல்லது கல்லூரியின் முதல்வர் எப்பவும் பெற்றோர்கள் எளிதாகப் பார்த்துப் பேசக் கூடியவங்களா இருக்கணும். அவர்களுடைய பிரச்னைகளை நாம புரிஞ்சுக்கிட்டா பெரிய அளவிலே சிக்கல்கள் ஏற்பட வாய்ப்பில்லே."

பங்கஜம்: "முன்பை விட இப்ப சிலபஸ் ஜாஸ்தின்னு சொல்றாங்களே! அப்படியா?

ராதாராவ்: "அது வாஸ்தவம்தான். புத்திசாலியான பத்துக் குழந்தைகள் படிச்சுடறாங்க. மற்ற சாதாரண நிலையில் இருப்பவர்கள் சாதாரண நிலையிலேயே எண்ணிக்கும் இருக்காங்க. அவர்களுக்குள்ள காம்ப்ளக்ஸ் இல்லாம இருக்க ஐந்து கிளாஸ் வரை பரீட்சையே வைக்கக் கூடாது. எல்லோரையும் பாஸ் போட்டுடணும். பிறகு அவரவருக்கு எந்தெந்தத் துறையில ஈடுபாடு இருக்கோ, அந்தத் துறையில ஈடுபடுத்தணும்."

மீனாட்சி சுந்தரம்: "ஆமாம், பெற்றோர்கள் குழந்தைகளின் தன்மையைப் புரிஞ்சுக்கணும். நல்லாப் படிக்கலே, நல்லாப் படிக்கலேன்னு வதைக்கிறாங்க."

சுமதி: "ஒரு தாய் தன்னுடை குழந்தை நல்லாப் படிக்கணும்னு நினைக்கிறதுல என்ன தப்பு?"

"எல்லோருக்கும்
தன் பையன்
டாக்டராகணும்;
இன்ஜினியராகணும்!!



மோகனா: "படிப்புன்னா படிப்பு மட்டுமே அர்த்தமில்லேயே. தொழிலில் ஆர்வம் இருக்கிற குழந்தைகளைத் தொழிற்கல்வி பயிற்சி அளிக்கலாம். இன்னும் எத்தனையோ இருக்கு. இதை எத்தனை பெற்றோர்கள் ஏத்துப்பாங்க? எல்லோருக்கும் தன் பையன் டாக்டராகணும், எஞ்சினியராகணும். நாங்க சொல்றபடி எங்கே கேட்கிறாங்க?"

சுப்ரமண்யன்: "டாக்டர், இன்ஜினியருக்கு கொடுக்கற மதிப்பை ஒரு தொழில்நுட்பக் கலைஞனுக்கும் நாம கொடுக்க ஆரம்பிக்கணும். ஒரு ட்ரில்லரை, ஒரு கட்டரை நாம குறைவாகப் பார்க்கும்போதுதான் இந்த பேதம் ஏற்படுகிறது.

மோகனா: "ஒரு பையன் ஸ்கூலுக்கு ஏன் வரலேன்னு கேட்டா அம்மாவே போய் காரணத்தைச் சொல்லுவா. அங்கே பிரின்ஸிபால்கிட்ட உண்மையைச் சொன்னாத்தான் எங்களாலே பிரச்னையைப் புரிஞ்சுக்க முடியும்."

சந்திரிகா: "இல்லே. அது தாய், மகன் உறவையே பாதிக்கும். அம்மா நம்மைக் காட்டிக் கொடுத்தா பாருன்னு வருத்தப்படுவான். அவனில்லாத போது அவன் பிரச்னையைப் பற்றிப் பிரின்ஸிபாலிடம் பேசலாம்."

சுமதி நாராயணன்: "பெற்றோர்னு எடுத்துக்கிட்டா, குழந்தைகளை எதுக்காக ஸ்கூலுக்கு அனுப்பறோம்? ஒரு நாளுலபெரும்

பகுதியை அங்கதான் அவங்க கழிக்கறாங்க. மனசாலயும், புத்தியாலயும் அவங்க ஆரோக்கியமா ஆக்கறது கல்வி நிலையங்களின் மிகப் பெரிய பொறுப்பு. இதை அவங்க உணரணும்கறதுதான் எங்க எதிர்பார்ப்பு.''

மீனாட்சி சுந்தரம்: ''பெற்றோர்களும் குழந்தைகளின் பண்பாட்டிற்குக் காரணமானவங்கதான். பெரியவங்க எல்லாம் குழந்தைங்க எதிரில் ஜாக்கிரதையா பேசணும். டீச்சர்ஸை மட்டம் தட்டிப் பேசிடக் கூடாது. குழந்தைகளை வச்சுண்டு வீட்டுல பணத்தைத் தாராளமா புழங்கக் கூடாது. கல்வி, பணம் போன்றவற்றின் அருமையையெல்லாம் குழந்தைகளுக்குப் பெற்றோர்தான் உணர்த்தணும்.''

சுமதி: ''பணம்ன உடனே ஞாபகம் வருது. ஏன் சில ஸ்கூலெல்லாம் இப்படி டொனேஷன் கேக்கறாங்க? உண்மையில ஸீட்டை, ஏலம் போட்டு அதிகப் பணம் கொடுக்கிறவங்களுக்கு விக்கிறாங்க?

மீனாட்சி சுந்தரம்: ''ஏன் தர்றீங்க?''

ராதாராவ்: ''வாங்கறவங்களை விட கொடுக்கறவங்க மேலேதான் தப்பு அதிகம் இருக்கு.''

திலகா: ''டொனேஷன் குடுத்தாத்தான் அட்மிஷன்னு என்ன பண்ண முடியும்?''

வித்யா சுப்ரமண்யன்: ''அந்த மாதிரி ஸ்கூலுக்குப் போகாதீங்க!''

ராதாராவ்: ''இதைத் தடுத்து நிறுத்தறது பெற்றோர்கள் கையிலதான் இருக்கு.''

ராதாராவ்:''அதிகமா டொனேஷன் வாங்கினாத்தான் நல்ல ஸ்கூல்னு நினைச்சுக்கறாங்க. அந்த மாதிரி பள்ளிகள் பக்கமே போறதை நீங்க நிறுத்திட்டா அவங்களும் டொனேஷன் வாங்கறதை நிறுத்திடுவாங்க.''



''அதிகமா டொனேஷன் வாங்கினாத்தான் நல்ல ஸ்கூல்னு நினைச்சுக்கறாங்க''

சந்திரிகா: ''மிக அதிகமா பனிஷ்மெண்ட் கொடுத்தா அது குழந்தைகள் உணர்ச்சியை பாதிக்காதா?''

மீனாட்சி சுந்தரம்:''கண்டிப்பா. குழந்தைங்களுக்கு பனிஷ்மெண்ட் கொடுக்கறதை டீச்சர்ஸ் கண்டிப்பா விடணும். குழந்தைகளோட உணர்ச்சியை மதிக்கணும். அவங்க ஏன் சொன்ன பேச்சைக் கேட்க லேங்கறதை விசாரிச்சுத் தெரிஞ்சுக்கணும். ஏதேனும் வீட்ல பிராப்ளமா கூட இருக்கலாம்.''

வித்யாசுப்ரமண்யன்:''இப்பகுழந்தைகள் எல்லாமே ரொம்ப டீ. வி. பார்க்கறாங்க. எப்பப் பார்த்தாலும் டீ. வி. பத்திதான் பேசறாங்க. அதனால டீ. வி. யிலயே நிறைய பாடம் சொல்லித் தரலாமே!''

நாராயணன்: ''அதுக்கு நான் ஒரு ஐடியா சொல்றேன். ஒவ்வொரு ஸ்கூல்லேயும் ஒரு வி. சி. ஆரையும் டீ. வி. யையும் வாங்கி வச்சுக்கிட்டு கல்விப் படங்கள் போடலாம்.''

ராதாராவ்: ''அதை இப்பவே 30 எம்எம் புரொஜெக்டர் வச்சிக்கிட்டு செய்யறோமே!

நாராயணன்: ''இல்ல, இந்த வி. சி. ஆர். ஒரு நிரந்தரமான இடத்தில் இருக்கும். வெளிநாட்டில இருந்து நல்ல காஸெட்டெல்லாம் வரவழைச்சு பல விஷயங்களை சொல்லித் தரலாம். ஏன்னு, கேட்டு படிச்சுத் தெரிஞ்சுக்கறதை விட, பார்த்துத் தெரிஞ்சுக்கறது நிறைய மனசுல இருக்கும்.

ராதாராவ்: ''இருந்தாலும் பெற்றோர் வீட்டுல குழந்தைங்க டீ. வி. பார்க்கறதைக் குறைக்கணும்.''

......இப்படியாக உரையாடல் தொடர்ந்தது. திரு. மீனாட்சி சுந்தரம் கூறினார், ''கல்விக் கூடம் என்பது குழந்தைகள் சந்தோஷமாக இருக்க வேண்டிய இடம்'' என்று. ஆம், உண்மைதான். அதைத்தான் இந்த ஆய்வரங்கத்தின் மூலமாக மங்கையர் மலர் அனைத்துக் கல்விக் கூடங்களையும் வேண்டுகிறது —

''ஒரு குழந்தை தன் பால பருவத்தில் உங்கள் பள்ளியில் நுழைகிறது. கிட்டத்தட்ட பதினாறு வயதில் பள்ளியை விட்டு வெளியே வரும் அந்தக் குழந்தையின் பள்ளி நாட்கள் நினைத்து நினைத்துச் சந்தோஷப்படக் கூடியதாக இருக்க வேண்டும். ஆனால் கல்விச் சுமை என்ற பெரிய சுமையை அவர்கள் தலையில் ஏற்றி வைத்தது போல இருக்கிறது. பெற்றோர் — ஆசிரியர் சங்கங்கள் நல்ல முறையில் செயல்பட்டு நாட்டிற்கு நல்ல மாணவ, மாணவியரைத் தாருங்கள்!''

ஏற்பாடு: டி. ஆர். ரமேஷ்

தொகுப்பு: கிரிஜா ராகவன்

புகைப்படங்கள்:
பிரஸ் போட்டோ பீரோ



## People around the world are using stainless steel pressure cookers,

### ... because a stainless steel pressure cooker

- has the shine and strength which no other materiall has.
- is longer lasting and easy to maintain
- cooks faster and saves upto 30% fuel
- can withstand very high pressures and thus is totally safe.

**Stainless Steel is the most hygienic metal used for kitchen ware.**

In India, Butterfly offers a carefull blend of International and traditional Indian design to suit the need of every Indian housewife. —And has the backing of 40 years expertise in the manufacture of quality stainless steel kitchenware.

# Butterfly

**STAINLESS STEEL PRESSURE COOKER**




MATRIX GE 86/1



MANUFACTURED BY:

**GANGADHARAM ENTERPRISES**

147, Karapakkam Village Old Mahaballipuram Road, Madras-600 096. Ph: 552587, 555127, 412091.



# வீட்டில் பூந்தோட்டம்

வீட்டைச் சுற்றிப் பூச்செடிகளும் கனி தரும் மரங்களும் இருக்க வேண்டும் என்று நாம் எண்ணுவது உண்டு. வீட்டுத் தோட்டம் இருந்தால் அதுவே ஒரு பொழுது போக்காக இருக்கும். வீட்டுத் தோட்டம் போடும் பெண்கள் கீழ்க்கண்டவற்றில் கவனமாக இருந்தால் அது அவர்களுக்கு ரொம்ப உபயோகமாக இருக்கும்.

* பூச்செடிகளைத் தரையில் வளர்க்க ஆசைப்படாமல் அழகிய தொட்டிகளில் வைத்து வளர்ப்பது நல்லது. செடிகளை பதியம் போடுவதென்றால் தொட்டியில் வைத்துப் பதியம் போடும் போது சிரமமிருக்காது. வீட்டில் ஏதாவது பார்ட்டி அல்லது விசேஷ காலங்கள் என்றால் தொட்டியை எளிதாகத் தூக்கி வந்து வீட்டை அலங்கரிக்கலாம். பின்பு, தொட்டியைப் பத்திரமாகத் தோட்டத்தில் கொண்டு வைத்து விடலாம்.

* பூச்செடிகளைத் தேர்ந்தெடுக்கும் போது கவனம் தேவை. வாசனை மிகுந்த மலர்ச் செடிகளாக இருப்பது நல்லது. இவை தலையில் சூடிக்கொள்ளவும், பூஜைக்கும் உபயோகமாக இருக்கும்.

* பூச்செடிகளைத் தொட்டியில் வைத்து வளர்ப்பதால் தண்ணீரை மிச்சப்படுத்தலாம். நிலத்தில் இருந்தால் நிலம் அதிக தண்ணீரை உறிஞ்சும். தொட்டி என்பதால் நாமே அளவாகத் தண்ணீரை ரப்பர் குழாய்களின் மூலம் பாய்ச்சலாம்.

* தொட்டிகளை ஒரே வரிசையாக அடுக்கி வைக்க வேண்டும். பூக்கள் பல நிறமானவை. ஒரு நிறம் கொண்ட பூச்செடி தொட்டிகளை ஒரு வரிசையிலும், வேறு ஒரு நிறம் கொண்ட பூச்செடித் தொட்டிகளை வேறு ஒரு வரிசையிலும் வைத்து அழகுபடுத்தலாம். உதாரணத்திற்கு மல்லிகைப்பூ, பிச்சிப்பூ, இருவாட்சி, இவை வெள்ளை நிறம் கொண்டவை. இவைகளை ஒரு வரிசையிலும், கனகாம்பரம், சிவப்பு ரோஜா, நந்தியாவட்டை, சிவப்பரளி இவை சிவந்த நிறம் கொண்டவை. இவைகளை ஒரு வரிசையில் வைத்தால் பார்ப்பதற்கு நன்றாக எடுப்பாக இருக்கும்.

* பூக்களை தினசரி பறிப்பது முக்கியம். மொட்டுகளை விட்டுவிட்டு மலர்ந்த பூக்களைப் பறித்தால்தான் புதிய மொட்டுக்கள் பூக்கவும், மொட்டுக்கள் மலராய் விரியவும் இயற்கை இடம் கொடுக்கும். அழகிற்காக தோட்டத்தைப் போட்டுவிட்டுப் பூக்களைப் பறிக்காமல் இருக்கக் கூடாது!

* கனி தரும் மரங்களை வீட்டைச் சுற்றி வளர்ப்பது சுகாதார முறையிலும் நல்லது. சில பழம் தரும் மரங்கள் நிழலும் தரக் கூடியவை. கோடைக்காலத்தில் காற்று இம் மரங்களைத் தாக்கி அம்மரக் கிளைகள் அசைந்து நம் வீட்டுக்குள் காற்றை அனுப்பும். சுகாதாரமான இயற்கைக் காற்று மரங்களால் நமக்குக் கிடைக்கின்றன.

* வேர்கள் அதிகமாக நிலத்தில் ஊடுருவாத மரங்களை வீட்டின் அருகிலும், அதிக வேர் பரப்பு கொண்ட மரங்களை வீட்டின் காம்பவுண்ட் பக்கத்திலும் வளர விடுவது நல்லது. சில மரங்களின் வேர்கள் பூமிக்கடியில் ஊடுருவிப் பாய்வதால் வீட்டு அஸ்திவாரம் பாதிக்கப்படலாம். எனவே அது போன்ற மரங்களை வீட்டுக் கட்டிடத்தை ஒட்டி வைக்கக் கூடாது.

மரங்களிலிருந்து உதிரும் இலைகள் குப்பைகளாக சேர வாய்ப்புள்ளது. எனவே உடனுக்குடன் உதிரும் இலைகளை அகற்ற வேண்டும். இந்த இலைகளை வீட்டின் பின்புறத்தில் சேர்த்து வைத்து மக்க வைத்தால் அதுவே உரச் சத்தாக வர வாய்ப்புண்டு. மரங்களுக்கு இயற்கை உரமான தழைகள், சாணம் போன்றவற்றை வைப்பதும் நல்லது!

தகவல்: **பி. ஆர். விஸ்வநாதன்**

கட்டுரை: **ஹரிதன்**

# சென்ற ஆண்டு மங்கையர் மலர் பாதிப்பு தொடர்கிறது

**ஜூ**ன் 86 இதழில் 'ஜீடி என்ற அனாதை நாயின்மேல் ஓர் இளைஞன் கொண்ட அன்பைப் பற்றிய கதை வந்திருந்தது.

ஜீடி நாய்க்குட்டியைப்போல் எங்களிடமும் ஒரு 'சீஃப்' 1973—ல் வந்து சேர்ந்தது. அப்பொழுது எங்கள் குழந்தைகள் நிர்மலும், ராஜனும் ஹைதராபாத்தில் சென்ட்ரல் ஸ்கூலில் ஒன்பதாம், ஏழாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தனர். ஒருநாள் மாலை பள்ளியிலிருந்து திரும்பி வரும்பொழுது புத்தக மூட்டையுடன், டிபன்பாக்ஸ் பையில் ஒரு நாய்க்குட்டியையும் தூக்கமாட்டாமல் இருவரும் மாற்றி மாற்றித் தூக்கிக் கொண்டு பஸ்ஸில் வந்து இறங்கினர். வந்ததும்வராததுமாக "அம்மா முதலில் இந்த 'பப்பி'க்கு பால் கொடும்மா" என்று சொன்னார்கள்.

கறுப்பும் வெளுப்புமாக அந்த நாய்க்குட்டி ரொம்பவும் அழகாகத்தான் இருந்தது. மும்மூன்று வருடங்களுக்கு ஒருதரம் மாற்றலாகும் உத்தியோகத்தில் என் கணவர் இருந்த காரணம் ஆசையாக வளர்க்கும் பிராணிகளை நண்பர்களுக்கோ, வேலைக்காரர்களுக்கோ கொடுத்துவிடுவோம். அதனால் இனிமேல் நாம் ஒன்றுமே வைத்து வளர்க்கக் கூடாது. பின் பிரிவதற்கு கஷ்டமாக இருக்கிறது என்று குழந்தைகளிடம் வாதாடிப் பார்த்தேன். ஆனால் அவர்கள் மசியவில்லை. நாம் இருக்கும்வரை இந்தக் குட்டி இங்கு இருக்கட்டுமே, ப்ளீஸ் அம்மா, எங்களுக்கும் பொழுது போகும். நம் வீட்டிற்கும் ஒரு காவல்' ஆகும் என்று என்னவெல்லாமோ காரணங்கள் சொல்லி என்னை ஓ.கே. சொல்ல வைத்துவிட்டனர். இனி நான் என்ன சொல்ல முடியும்? அவர்களுடைய அப்பாவும் அதே கட்சியில் சேர்ந்துவிட்டார்.

அந்தக் குட்டிக்கு "சீஃப்" என்று நாமகரணம் சூட்டினோம். நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக எங்கள் சீஃப் வளரத் தொடங்கினான். காலையில் கோதுமை சாதம், மத்தியானம் அவனுக்கென்று தோசை (கல்லை அடுப்பில் வைக்கும் சப்தம் எப்படித்தான் கேட்குமோ? எங்கிருந்தாலும் ஓடி வந்துவிடுவான்.) இரவு சப்பாத்தி அல்லது பிரட் என்று ஆகாரம் சாப்பிடுவான். வாரம் ஒருமுறை மட்டன் முட்டை என்று வாங்கிக் கொடுப்பது வழக்கம்.

கொஞ்ச நாளில் நம்முடைய வேலைகளில் சிலவற்றைப் பழக்கிக் கொண்டுவிட்டான். கேட்டிலிருந்து தினசரி பேப்பரை வராந்தாவில், வாயில் கவ்விக் கொண்டு வந்து வைப்பது, இவர் 'வாக்கிங்' செல்லும்பொழுது அவருடன் 'பாடிகார்ட்' போல் போய்வருவது, குழந்தைகள் ஸ்கூலுக்குப் போகும் பொழுதும், வரும்பொழுதும் பஸ் ஸ்டாண்டில் போய் நிற்பது, நான் அருகில் யார் வீட்டிற்காவது அல்லது கோயிலுக்குப் போகும் பொழுது எனக்குத் துணை, வீட்டில் பகவான் ஸ்லோகம் சொல்லும்பொழுது, பூஜை அறையின் வெளியே நின்று கொண்டு காதை விடார்த்திக் கொண்டு கேட்டுக் கொண்டு நிற்கும் அழகே அலாதிதான். அவனும் என்னைப் போல் நமஸ்காரம் செய்வது போல் முன்னங்கால்களை சேர்த்துத் தலையை அதில் வைத்து நமஸ்கரிப்பான்!

1976—ல் மாற்றல் வந்துவிட்டது சென்னைக்கு. குழந்தைகளின் பரீட்சை முடிந்ததும் புறப்பட வேண்டும். சீஃப்பை பிரிய வேண்டுமே என்று மனசில் வருத்தம் ஆரம்பித்துவிட்டது. சாமான்களை 'பாக்' செய்யத் தொடங்கினோம். அந்த சமயம் எல்லாம் சீஃப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டு நிற்கும். பீரோ, கட்டில், சோபா என்று சாமான்களை வெளியில் போட்டுக் கோணியினால் சுற்றித் தைக்கும்பொழுது, வேலை செய்பவர்களைச் செய்யவிடாமல் குரைக்கும். அதற்காகக் கட்டிப் போட வேண்டிவரும்.

அன்று லாரி வந்து வீட்டு வாசலில் நின்றுவிட்டது. சாமான்களையும், காரையும் 'வாக



னில்' ஏற்றிவிட்டு, ஒருவாரம் கழிந்தபின் நாங்கள் பிளேனில் டில்லி போவதாக ஏற்பாடு. சாமான்களை லாரியில் ஏற்றும்பொழுது லாரியை சீஃப் எத்தனை பிரதக்ஷணம் செய்திருப்பானே?! கூப்பிடக் கூப்பிட நம் பக்கம் வந்தால்தானே? சாமான்கள் போனபின்பு இவன் சோர்ந்துபோய் வந்து படுத்துவிட்டான். ஆகாரத்தைச் சீண்டவே இல்லை. குழந்தைகள் அவனைச் சமாதானப்படுத்தி, தடவிக் கொடுத்து சாப்பிடச் சொல்லியும் கண்ணிலிருந்து கண்ணீர் வழிய படுத்துக் கொண்டே இருந்தான். அந்த நினைவு இன்னும் மனத்தை மிகவும் சங்கடப்படுத்துகிறது. எங்களுக்கும் ஆகாரம் இறங்கவே இல்லை. என்ன செய்வது? ஆபீஸ் பியூனிடமும் இவனுக்குப் பற்று உண்டு. அவனிடம் இவனை ஒப்படைக்க எண்ணி இருந்தோம். அவனும் அதை வைத்துக் கொள்ள சந்தோஷத்துடன் சம்மதித்தான்.

புறப்படும் தினம். விடியற்காலையில் குளித்துப்புறப்பட்டுக்கொண்டு இருக்கிறோம். இவன் எங்கள் காலைச் சுற்றிச் சுற்றி வருவதும், அழுவதும் பார்க்க சங்கடமாய் இருந்தது. இவனைக் கண்மறைவாய் கொண்டு செல்லுமாறு பியூனிடம் சொன்னேம். அவன் அதை குண்டுகட்டாய்த் தூக்கிப் போனுன். நாங்களும் ஏர்—போர்ட்டிற்கு புறப்பட்டுப் போனேம். அங்கு இறங்கி 'லௌன்சில்' போய் உட்கார்ந்திருந்தோம். பின்னலேயே நாலு கால் பாய்ச்சலில் அங்குள்ள காவல்களையும் மீறி ஓடி வந்திருக்கிறன் பாருங்கள்! பியூனிடமிருந்து திமிறி மறைந்து நின்று கொண்டு நாங்கள் காரில் வரும் பாதையிலேயே பின் தொடர்ந்துள்ளான். எங்களுக்கு அழுகையை அடக்க முடியாமல் போய்விட்டது. நமக்குப் போய்த்தானே தீர வேண்டும். மனத்தைக் கல்லாக்கிக் கொண்டோம்.

பின் சண்டிகரிலிருந்து பியூனிற்குக் கேட்டு எழுதுவோம். அவன் மொத்தமாக எல்லோரும் சௌக்கியம் என்று எழுதுவான். மூன்று வருடங்கள் கழிந்த பின்பு மறுபடியும் ஹைதராபாத்/செகந்திராபாத் 'ட்வின் ஸிட்டி'க்கு மாற்றலாகி வரும் வாய்ப்பு. 1980 ஏர்போர்ட்டில் வந்து இறங்கினேம். அங்கு எங்கள் சீஃப்பைப் பார்க்க ஆவலோடு பறந்தடித்துக் கொண்டு இறங்கினேம். பியூன் மட்டும் நின்று கொண்டு இருந்தான். முதல் கேள்வியே சீஃப்பைப் பற்றித்தான்.

அவனுடைய பதிலைக் கேட்டதும் மரமாய் நின்றுவிட்டோம். வந்த அழுகையை அடக்க மாட்டாமல் நம்முடைய சீஃப்பிற்கு இந்த கதியா? என்று கதறிவிட்டோம்.

நாங்கள் போனபின்பு தினமும் இவன் ஏர்போர்ட்டிற்குப் போவானும். அங்கு சில மணி நேரங்கள் படுத்திருப்பானும். பின் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு பியூனிடம் திரும்புவானும். இவனுக்கு அந்த ஏர்போர்ட் கூர்க்கா சொல்லித் தெரிய வந்தது. ஒருநாள் திரும்பவே இல்லை. இவன் தேடிப் போனதில் அங்கு ஒரு காரின் கீழ் அடிபட்டு இறந்து போயிருக்கிறது என்று அங்குள்ளவர்கள் சொன்னதை பியூன் எங்களிடம் சொல்ல..... இதற்கு மேல் எனக்கு அந்த சம்பவத்தை நினைக்கவே மனசு சங்கடப்படுகிறது. கை எழுதவே மறுக்கிறது.....

நன்றியும் விசுவாசமும், சினேகமும் எல்லாம் ஒருங்கே கூடிய பிராணி நாய் இனம்தான். அதிலும் எங்கள் சீஃப்.... சீஃப் தான். ஈடு இணை கிடையாது.

— விசாலம் நாராயணசுவாமி

# கர்ப்பமா இல்லையா

தற்போது ஒரு இந்தியப் பெண்மணி ஒரு பரீட்சை முறையை உபயோகித்து தான் கர்ப்பமா, இல்லையா என்பதைக் கண்டு கொள்ள முடியும்.

மாதவிலக்கு, எப்போதும்போல் சரியான தினத்தில் ஆகாமலிருந்து இரண்டு நாட்களுக்குப் பின் இப்பரீட்சை மூலம் கர்ப்பமா இல்லையா என்று கண்டறிய முடியும். இப்பரீட்சை செய்ய உதவியாக, ஒரு பரிசோதனைக் குழாய், கரைசல் அடங்கிய ஒரு செட் இருக்கிறது. பரிசோதனைக் குழாயில் சுத்திரிப் பூ வண்ணக் கரைசலை முதலில் எடுத்து அதில் செட்டுடன் கொடுக்கப்பட்டிருக்கும் கரைசலையும், மூன்று துளிகள் சிறுநீரையும் விட வேண்டும். பெண் கர்ப்பமாக இருந்தால், அரை மணி நேரத்தில், சுத்திரிப் பூக் கலரில் இருக்கும் கரைசல், கருமையான பிங்க் கலராக மாறி, பிறகு இலேசான 'பிங்க்' கலருக்கு வந்து பிறகு 'க்ரே' கலராகவோ அல்லது நிறமற்றதாகவோ மாறிவிடும். கர்ப்பமில்லை என்றல், இந்தவிதமான நிறம் மாறுதல் எதுவும் ஏற்படாது. சூரிய வெளிச்சமோ அல்லது சாதாரண வெப்பமோ இப்பரீட்சையைப் பாதிப்பதில்லை. இப்பரீட்சை 'பிரெக் கலர் டெஸ்ட்' என்று அழைக்கப்படுகிறது.

— ரஞ்ஜி

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் முதற் சுவையிலிருந்தே.

நான்கு மாதங்கள் ஆகும்
பொழுது உங்கள் குழந்தைக்கு
பாலுடன் கூட திட உணவும்
தேவை. அவனுக்கு ஸெரி
லாக்கின் அனுகூலங்களைப்
புகட்ட இதுவே உகந்த
வேளை.

**போஷாக்கு அனுகூலம்:**
ஒவ்வொரு தடவை ஸெரி
லாக் ஊட்டும் பொழுதும்
உங்கள் குழந்தைக்குத்
தேவையான புரத சத்து,
கார்போஹைட்ரேட்,
கொழுப்பு, வைட்டமின்
மற்றும் தாது ஆகிய எல்லா
போஷாக்கு சத்துக்களும்
அவனுக்கு கிடைக்கின்றன.
அனைத்தும் குழந்தையின்
விசேஷ தேவைக்கு ஏற்றபடி
சரியான விகிதத்தில் தயாரிக்
கப்பட்டுள்ளன.

**சுவையில் அனுகூலம்:**
ஸெரிலாக் நலம் தரும்
போஷாக்குடன் நல்ல சுவை
யும் கொண்டது. ஸெரிலாக்
சுவை என்றாலே குழந்தை
களுக்கு கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில்
அனுகூலம் :**
ஸெரிலாக் குழந்தை உண்ப
தற்கேற்ப முன்கூட்டியே
பதமாக்கப்பட்டுள்ளது.
கொதிக்கவைத்து ஆறிய
வெது வெதுப்பான நீரில்
கலந்தால் போதும். நொடியில்
தயார் ஸெரிலாக் உணவு.

உங்கள் குழந்தைக்கு
சரியான விகித சத்து கிடைக்
கவும், சுகாதார முறையில்
கலக்கவும், டின்னில் தரப்
பட்டுள்ள குறிப்புகளை தயவு
செய்து பின்பற்றுங்கள்.

**இலவச ஸெரிலாக்
புத்தகம் பெற**
இம்முகவரிக்கு எழுதவும் :
ஸெரிலாக்,
தபால் பெட்டி எண் : 3
புது டில்லி 110 008.




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**



# துன்பம் நேர்கையில்...

## 14

ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக டிபன் கூட சாப்பிடாமல் ஹால் சோபாவில் கன்னத்தில் கையை ஊன்றிக் கொண்டு இந்த உலகமே தலைகீழாய்ப் புரண்டு போய் விட்டது போல் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் மகளைப் பார்த்து வியப்புற்றாள் மங்களம்.

என்ன ஆயிற்று இவளுக்கு? என்று நினைத்தவள் வாய் விட்டுக் கேட்டும் விட்டாள்.

''என்ன ஆச்சு உமா ரொம்ப டல்லா இருக்கே?'' அந்தக் கேள்வியில் ஒரு நிமிடம் சிந்தனை சலனப்பட நிமிர்ந்து அம்மாவைப் பார்த்தாள்.

அவளின் அந்தப் பெரிய விழிகள் நீரால் நிறைந்திருப்பதைக் கண்ட மங்களம் பதறிப் போய் விட்டாள்.

''என்னம்மா உமா?''

அவ்வளவுதான் அந்த அன்பான கேள்வியில் உமா உடைந்து போய் விட்டாள். அருகில் உட்கார்ந்த மங்களத்தின் மடியில் முகம் புதைத்தவளின் உடம்பு அவளின் கேவலில் அதிர்ந்தது.

பயந்து போய் விட்டாள் மங்களம். ஆறுதலாக உமாவின் உடம்பைத் தடவிக் கொடுத்து விசாரித்தாள்.

அடிக்கடி அழும் சுபாவம் உள்ள பெண்ணல்ல உமா என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அப்படி இருக்க இன்று எதனால் இப்படி உடைந்து போய் அழுகிறாள். இப்படி அழும்படியாக அப்படி என்ன வேதனை அவள் மனத்தில்? புரியாமல், அவள் அழுது தீரட்டும் என்று விட்டு விட்டாள். அதே நேரத்தில் உள்ளே நுழைந்த மஹாதேவனும் அந்தக்காட்சியைப்பார்த்துவிட்டுத் திக்பிரமை பிடித்துச் சில கணம் நின்று பிறகு சுதாரித்துக் கொண்டு செருப்பைக் கழற்றிவிட்டு, உடையைக் கூட மாற்றாமல் ப த றி ய ப டி உமாவின் அருகில் வந்தார்.

அப்பா வந்து விட்டதை அறிந்ததும் உமாவின் அழுகை அதிகமாயிற்று. எந்தக் கேள்விக்கும் பதிலில்லாமல் போகவே சலித்துப் போய், சரி; அவளாகவே அடங்கி சொல்லட்டும் என்று விட்டு விட்டனர்.

அரை மணி நேரம் கழித்து ஒருவழியாக அழுகை அடங்கித் தந்தையை ஏறிட்டுப் பார்த்தவளின் கண்கள் கோவைப் பழமாகச் சிவந்து இடுங்கி இருந்தது. அது தவிர லேசான ஆற்றாமையும் இருந்தது.

''என்னம்மா ஆச்சு'' பரிவுடன் வினவினார். இவரா? இவரா நம்மை ஒரு வார்த்தை கூடக் கலந்தாலோசிக்காமல், அப்படிச் செய்தார்? உப்பு பெறாத விஷயத்திற்குக் கூட,

''நீ என்னம்மா சொல்றே? உன்னோட அபிப்பிராயம் என்ன?''ன்னு ஆயிரம் தடவை கேட்டுத் தன் சுதந்திரத்தைச் சுட்டிக் காட்டும் இவரா இப்படிச் செய்தார்? நினைக்க நினைக்க அழுகையாக வந்தது.

''ஏம்ப்பா எனக்குக் கல்யாணம் பண்ணப் போறீங்களா?'' துக்கம் தெறித்த குரலில் கேட்டாள்.

ஒரு நிமிடம் அந்தக் கேள்வியில் திகைத்தவர், பிறகு சிரித்து, ''இதற்காம்மா அழுதே? ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் செய்ய வேண்டியது பெத்தவனோட கடமையில்லையா?'' என்றார்.

''கடமைதாம்பா. ஆனா என்னை ஒரு வார்த்தை கூட கன்சல்ட் பண்ணலை. இந்தப் பையனை உனக்குப் பார்க்கறதா இருக்கேன் உமா. உன்னோட ஒப்பீனியன் என்னன்னு ஒரு வார்த்தை கேட்காமப் பத்தாயிரம் ரூபா வரதட்சணையும் ஒரு லட்ச ரூபா சீரும், அறுபது பவுன் நகையும் போட்டு ஆடம்பரமா கல்யாணம் பண்ணி வைக்க ஒரு மாப்பிள்ளையை விலைக்குப் பேசிவிட்டு வந்திருக்கீங்களே, இது என்னப்பா நியாயம்?'' என்று குமுறினாள் உமா.

அந்தக் கேள்வியில் அதிகமாகவே தாக்குண்ட மஹாதேவன் திகைப்புற்று மங்களத்தைப் பார்த்து, ''என்ன மங்களம் இது? இவ என்னவெல்லாமோ சொல்றா? அப்படமன்னா?'' என்று சந்தேகமாக இழுக்க, அவள் பரிதாபமாக விழிக்க,

''உமா, உன் மனசுக்கு விரோதமா நாங்க எதுவும் செய்யலையேம்மா. உனக்கு அந்தப் பையனைப் பிடிச்சிருக்கிறதா ஜாடைமாடையாத் தெரிஞ்சப்புறம்தான் நான் மேற்கொண்டு விவகாரத்திலே இறங்கினேன். இப்போ நீ என்னென்னமோ சொல்றியே...'' — தடுமாறினார் அவர்.

அந்தச் சமாதான வார்த்தைகள் தீயாய்ச் சுட கொதித்து எழுந்தாள் உமா.,

''யாருப்பா சொன்னா எனக்கு அந்தப் பையனைப்பிடிச்சிருக்குன்னு? எப்படி ஜாடைமாடையாத் தெரிஞ்சுண்டீங்க சொல்

வித்யா சுப்ரமணியம்

ளுங்க?"

"நம்ப அஞ்சலைதாண்டி சொன்னா உமா. நீ அந்தப் பையன் கூட சிரிச்சுப் பேசிண்டு போறதப் பார்த்துட்டு அப்படியும் இருக்குமோன்னு சந்தேகப்பட்டுச் சொன்னா. நான் இவர்கிட்ட சொல்லிட்டேன். இவரும் நீ அவனோட ஒரு தடவை பேசிக்கிட்டு போனதைப் பார்த்து விசாரிச்சிருக்கார். சரி, உனக்கு அவனைப் பிடிச்சிருந்தா உன் இஷ்டப்படி அவனையே உனக்குப் பேசி முடிச்சிட்டு, உன்னை சந்தோஷப்படுத்தணும்னு குழந்தையாட்டம் ஆசைப்பட்டுதான் உங்கிட்ட கேட்டுக்காமயே போய்ட்டு வந்தார்."

அந்த வார்த்தைகளைக் கேட்டுச் சிரிப்பதா அழுவதா என்று புரியவில்லை உமாவுக்கு. அதிகப்படியாக அவர் தம் மீது வைத்திருக்கும் அன்பே அறியாமையாய் உருமாறிவிட்ட கோலத்தைக் கண்டு வேதனையுடன் சிரித்தாள்.

"என்னப்பா நீங்க? என்னைப் புரிஞ்சுகண்டது அவ்வளோதானா? கண்ணால பாக்கறதும் பொய், காதால கேட்கறதும் பொய்னு சின்ன வயசுல எனக்கு அடிக்கடி சொல்லிட்டு இப்போது நீங்களே அஞ்சலை கண்ணால் பார்த்துச் சொன்னதைக் காதால் கேட்டுத் தீர விசாரிக்காமலேயே வேறே அர்த்தம் கற்பிச்சுண்டிருக்கீங்களே; என்ன கொடுமைப்பா இது? ஒரு பொண்ணும் ஆணும் சிரிச்சுப் பேசினா அதுக்கு அர்த்தம் இதுதான்னு அஞ்சலை நினைச்சுக்கலாம். ஆனா நீங்க எப்படிப்பா அப்படி நினைக்கலாம்? பிரியமான பொருளைத் திடீர்னு வாங்கிக் கொடுத்துக் குழந்தையை சந்தோஷப்படுத்தற விஷயமா இது? காலையில ஆபீஸ்க்குப் போன் பண்ணி அந்தப் பையன், நீங்க அவங்க வீட்டுக்கு வந்ததைப் பற்றியும், எதுக்காக வந்தீங்கங்கிறதைப் பற்றியும் சொல்லிட்டு,

"சாரி உமா, சட்டுன்னு சலனப்படற பெண் இல்லை நீங்கங்கிறது எனக்கு நல்லாத் தெரியும். இருந்தாலும் உங்க மனசுல எங்கயாவது ஒரு துளி சலனத்தை நான் ஏற்படுத்தியிருந்தேன்னா அதுக்காக நான் வருத்தப்படறேன்'னு சொன்னான். அந்த ஒரு நிமிஷம்! நான் எவ்வளவோ கூனிக் குறுகிப் போய்ட்டேன் தெரியுமாப்பா! உண்மையிலேயே அந்த நிமிஷமே நான் செத்துப் போயிருக்கக் கூடாதான்னுதான் நினைச்



சேன். எனக்கு நல்லது செய்யறதா நெனைச்சே என்னை அவமானப்பட வெச்சிட்டீங்களேப்பா.''

உமா இரண்டாம் முறையாக அழத் தொடங்கிய போது மஹாதேவன் எவ்வளவு பெரிய தப்பைத் தாம் முட்டாள்தனமாகச் செய்துவிட்டோம் என்று உணர்ந்து கூசிக் குறுகிப் போனார். உமா பேசின ஒவ்வொரு வார்த்தையும் உண்மை என்னும் குத்தூசிகளாய் அவரது உடம்பு முழுவதும் பாய்ந்து சொல்லொணா வேதனையைத் தந்தது.

''என்னை மன்னிச்சுடு உமா'' — அதற்கு மேல் எதுவும் பேசத் தெரியாமல் தடுமாறிக் கண் கலங்கினார் மஹாதேவன்.

பெற்ற மகளிடமே மன்னிப்புக் கேட்கும் தன் கணவரின் நிலையைப் பார்க்கச் சகிக்காமல் அழுதபடியே எழுந்து உள்ளே போய் விட்டாள் மங்களம்.

"எட்டாத பழத்துக்கு அசைப்படற தப்பு முரளி. நீ யோக்கியமானவன்தான். நல்ல பையன்தான் எனக்கு நல்லாத் தெரியும். உன்னை மாப்பிள்ளையாக்கிக்க பாக்கியம்தான் பண்ணியிருக்கணும். இல்லேன்னு நான் சொல்லலே. ஆனா தராதரம் வேண்டாமா? அந்தஸ்து வேண்டாமா? உங்க தகுதிக்கும் உங்க அம்மாவோட ஆசைக்கும் இனி போட என்னால் முடியாது. சக்தியும் கிடையாது. உன்னோட தகுதிக்குப் பத்தாயிரம் ரூபா வரதட்சணைக்கும், லட்ச ரூபாய் சீருக்கும் ஆசைப்பட உங்கம்மாவுக்குத் தகுதி இருக்கு. ஆசைப்படறா. ஆனா கொடுக்க சக்தியில்லாத நான் ஆசைப்படலாமோ? இல்ல சித்ராதான் ஆசைப்படலாமோ? நீ நல்ல பையன். உன்னோட படிப்புக்கும் அழகுக்கும் உத்தியோகத்துக்கும் பொண்ணு குடுக்க நீ, நான்னு போட்டி போட்டுக்கிட்டு கியூல நிப்பா எல்லாரும். அதனால சித்ராவை மறந்துடு. உன் அந்தஸ்திற்கு ஏற்ற பெண்ணா பார்த்து பண்ணிக்கிட்டு சௌக்கியமா இரு'' தீர்மானமாகப் பேசினாள் ஈஸ்வரி.

[redacted]

எலுமிச்சை மஞ்சள் நிறச் சோளி எல்லாவிதக் கலர் புடைவைகளுக்கும் பொருத்தமாக இருக்கும். பல வகையான வண்ணச் சோளிகள் தைத்து உபயோகிக்க முடியாதவர்கள் வெள்ளை, எலுமிச்சை மஞ்சள் ஆகிய இரு வண்ணங்களில் மட்டுமே சோளி வைத்திருந்தால் சமாளித்து விடலாம்.

— ஆர். ஜெயலட்சுமி.

[redacted]

ஒரு பக்கம் மூலையில் உட்கார்ந்து குடம் குடமாய்க் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள் சித்ரா. இன்னொரு பக்கம் சுவரில் சாய்ந்து நின்று கையைக் கட்டிக் கொண்டு சலனமற்ற முகத்துடன் நின்று கொண்டிருந்தான் ஹரி. நடுவில் கையைப் பிசைந்து கொண்டு பரிதாபமாக நின்றிருந்தான் முரளி. ஆனால் சொன்னதோடு தன் கடமை முடிந்து விட்டது போல் சிறிது கூட அந்த நேரத்தைச் சட்டை பண்ணாமல் அப்பளம் இட்டுக் கொண்டிருந்தாள் ஈஸ்வரி.

கல்யாண விஷயமாய்ப் பேச அம்மாவை அழைத்துக் கொண்டு வந்த முரளி புறப்படும் போதே அவளிடம் தீர்மானமாகச் சொல்லியிருந்தான்.

''இதோ பாரம்மா. நீ நினைக்கற மாதிரி ஈஸ்வரி மாமியால் எதுவும் செய்ய முடியாது. அதே நேரத்துல சித்ராவைத் தவிர நான் யாரையும் கல்யாணம் பண்ணிக்கவும் முடியாது. பணம் இன்னிக்கு வரும்; நாளைக்குப் போகும்மா. அதையே பெரிசா நெனைச்சுகிட்டு பெத்தபிள்ளையோட ஆசைகளை அலட்சியம் பண்ணாதே. அது நல்லதில்லே. நல்லபடியா எங்கூட வந்து அவங்ககிட்ட பேசிக்கல்யாணத்தைமுடிக்கற வழியைப் பாரு.''

அதட்டலும், கெஞ்சலும் உறுதியுமாகப் பிள்ளை சொன்ன போது ஒன்றும் சொல்லாமல் சரி என்று ஒத்துக் கொண்டு கிளம்பியவள், ஈஸ்வரியைப் பார்த்துப் பேச ஆரம்பித்ததும்தான் முரளிக்கு அவள் குணம் புரிந்தது. அந்த நேரத்தில் ஒன்றும் பேச முடியாமல் தவித்தான்.

''இதோ பார் ஈஸ்வரி. என்னமோ எம் பிள்ளை சொல்றானேன்னு வந்தேன். அவன் ஆசைக்குக் குறுக்கே நிக்கக் கூடாதுங்கற நல்லெண்ணத்துலேயே சித்ராவை அவனுக்குப் பேச வந்திருக்கேன். ஆனா அதே நேரத்துல என்னோட கௌரவமும் எனக்கு ரொம்ப முக்கியம். அவன் கண்ணுக்கு இப்போ பணமெல்லாம் பெரிசாத் தெரியாது. கட்டின பொடவையோட வந்தா கூட இவளைப் பண்ணிக்கத்தான் தோணும். மோகம் முப்பது நாளும், ஆசை அறுபது நாளும் ஆக மூணு மாசம் கழிஞ்சாத்தான் அவனுக்குத் தன் சுயநினைவே வரும். தன் கையில சல்லிக்காசு கூட பணமோ நகையோ கிடையாதுன்னு உறைக்கும். அப்போ வேணும் வேணும்னு குதிச்சா, கூரையைப் பொத்துக்கிட்டா கொட்டும்?

''எனக்கு எம் பிள்ளையோட எதிர்காலம் தான் முக்கியம். என்னதான் மாசம் ஆயிரமாயிரமா சம்பாதிச்சாலும் கையில கொஞ்சம் ஜுவேஜு இருந்தால்தானே மதிப்பு?

''நீ என்ன செய்வியோ, ஏது செய்வியோ எனக்குத் தெரியாது. பத்தாயிரம் ரூபாய் வரதட்சணை. அவளோட வந்து என் வீட்டுல

---

மன்று! உங்களது இமாலய வெற்றிக்கு
இதோ இனிப்புகளில் உயர்ந்த
அகர்வால்பவன் இனிப்புகள்



# அகர்வால் பவன்

128, கோவிந்தப்ப நாயக்கன் தெரு,
சென்னை-600 001. போன்: 21219, 31349

தின்ன தின்ன தெவிட்டாதது அகர்வால் இனிப்புகள்.

ELEGANT

உம் பொண்ணு குடித்தனம் பண்ணணும்னு லட்ச ரூபாய் சீரோடயும் அறுபது பவுன் நகையோடவும் வரட்டும். இதெல்லாம் முடி யும்னு சித்ராதான் எம் மாட்டுப் பொண் கறாராக முடித்தாள் சம்பா.

''அவ்வளோத்துக்கு நா எங்க போவேன் மாமி, எங்க நிலைமை உங்களுக்குத் தெரி யாதா?'' என்றாள் ஈஸ்வரி மெல்லிய குரலில்.

''உன் நிலைமை எனக்கு நல்லாவே தெரி யும்டி. ஆனா என் நிலைமையும் அந்தஸ்தும் தான் உம் பொண்ணுக்குத் தெரியலே. கைநிறைய சம்பாதிக்கிறவனை கடைக்கண் பார்வை பார்த்து மயக்கி செலவில்லாம கல்யாணம் பண்ணிக்கிட்டு சுகமா, சொகுசா வாழலாம்னு திட்டம் போட்டி ருக்கா. இல்லாட்டா உன்னால எந்தக் காலத்துல அவளுக்குக் கல்யாணம் பண்ணி வைக்க முடியும்? எந்தப் பையன் வசமா மாட்டுவான் வளைச்சுப் போடலாம்னு திட்டம் போடறதே இப்போ உன்னை மாதிரி இல்லாதப் பட்டவங்களோட குடும்பத்துப் பெண்களுக்கு வாடிக்கையாப் போச்சு.'' குத்தீட்டிகளாக வந்த வார்த்தைகளைத் தாங்க முடியாமல் சித்ரா 'ஓ'வென்று அழ ஆரம் பிக்க, முரளிக்குத் தாங்க முடியாத ஆத்திரம் வந்தது.

''போதும் நிறுத்தும்மா. ரொம்ப ஓவராப் பேசாதே. இருக்கிறவங்க இல்லாதப்பட்ட வங்க எல்லாருமே மனுஷங்கதான். அவளை ஆசைப்பட வெச்சதே நான்தான். அனா வசியமா அந்தப் பொண்ணு மனசைப் புண் படுத்தாத. நீ கல்யாணம் பேச வந்தது போதும் எழுந்திரு போகலாம்'' என்று கத்தி னான்.

அவ்வளவுதான் அத்தனை பேருக்கெதிரில் பிள்ளை தன்னை எடுத்தெறிந்து பேசினதும் பொத்துக் கொண்டு வந்தது ஆங்காரம் அவ ளுக்கு. அதோடு அழுகையும் சேர.

''இப்போ சந்தோஷமாடி ஈஸ்வரி? எம் பிள்ளையை வளைச்சுப் போட்டதுமில்லாம எனக்கெதிராப் பேசவும் வெச்சுட்டே. எது எப்படியானாலும் உனக்கு ரோஷம் மானம் ஏதேனும் இருந்தா நான் சொன்னபடி சீரும் செனத்தியுமா உம் பொண்ணை அவனுக்குப் பண்ணி வை. இல்லன்னா நான் சும்மா இருக்க மாட்டேன்'' என்று புயலாகச் சீறி விட்டுப் பிள்ளைக்காகக் கூடக் காத்திருக் காமல் வெளியேறி விட்டாள் சம்பா.

(தொடரும்)

# தானம்-2

பெயரில்தான் 'சிறு' என்றிருக்கிறதே தவிர, மனிதன் உயிர் வாழ்வதற்கு இதயத்திற்கு அடுத்தபடியாக உதவும் மிக முக்கிய உறுப்பு சிறுநீரகங்கள். இது பழுதுபட்டால் மருத்துவ சிகிச்சையின்றி உயிர் வாழ இயலாது. மாற்றுச் சிறுநீரகத்தைப் பொருத்திக்கொள்வது ஒன்றே நிரந்தரமான உடல் நலத்திற்கு வழி செய்யும் முறை. இத்தகைய சிறுநீரக தானம் பற்றிப் பல முக்கிய விவரங்களை நம்மோடு பகிர்ந்து கொள்பவர் பண்டலே காட்டியாக் தொராஸிக் ஃபவுண்டேஷனிலும், கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி மருத்துவ மனையிலும் சிறுநீரக இயல் மருத்துவராகப் பணியாற்றும் டாக்டர் ஸி.எம். தியாகராஜன்.

கே: டாக்டர், சிறுநீரகங்கள் மிக முக்கியமான உறுப்பு என்கிறீர்கள். அவற்றின் வேலை என்ன?

ப: 1. இரத்தமானது சிறுநீரகத் தமனி மூலம் சிறுநீரகத்திற்குள் செலுத்தப்படுகிறது. அப்போது இரத்தத்திலுள்ள அதிகப்படியான உப்பு, யூரியா, செயல்படாத ஹார்மோன்கள் இவற்றையும், பெருமளவு நீரையும் சிறுநீரகம் பிரித்து விடுகிறது. இவை சிறுநீர் என்னும் கழிவுப் பொருளாக வெளியேறுகின்றன.

2. சிறுநீரகத்தில் மட்டும் சுரக்கும் ரெனின் என்னும் ஹார்மோன் இரத்த அழுத்தம் சீராக இருக்க உதவுகிறது. மேலும் எரித்ரோ பாய்டின் என்னும் ஹார்மோன் இரத்த உற்பத்திக்கு மிக அவசியமானது.

3. கோடையில் அதிகமாக வியர்க்கும் போது குறைவாக சிறுநீரை வெளியேற்றியும், குளிர்காலத்தில் வியர்வை குறைவதால் அதிக அளவு சிறுநீரை வெளியேற்றியும் உடல் வெப்பநிலை சீராக இருக்க உதவுகிறது.

கே: சிறுநீரகம் பழுதுபடக் காரணங்கள் யாவை?

ப: இதற்கு சற்று விளக்கமாக பதிலளிக்க வேண்டியுள்ளது. இதை அக்யூட் ஃபெய்லியர், க்ரோனிக் ஃபெய்லியர் என்று இரு வகைப் படுத்தலாம்.

அக்யூட் ஃபெய்லியர் என்பது சிறுநீரகம் திடீரென்று பழுதுபடுவதைக் குறிக்கிறது. இது தற்காலிகமானதாகையால் இதனைக் குணப்படுத்தி விடலாம். கர்ப்பிணிகளின் கடைசி மூன்று மாதங்களில் வாந்தி, கை, கால், முக வீக்கம், சிறுநீர் கழிக்காமை, இரத்த அழுத்தம் இவை இருந்தால் அவர்களின் சிறுநீரில் ஆல்புமின் உள்ளதா என்று சோதித்துப் பார்க்க வேண்டும். ஆல்புமின் இருந்தால் பிரசவத்தின் போது சிறுநீரகம் பழுதுபட வாய்ப்பு உண்டு. இவர்களுக்கு ஆபரேஷன் செய்து குழந்தையை எடுத்துவிட்டால் சிறுநீரகம் பழுது படுவதைத் தவிர்க்கலாம். இதைத் தவிர, விஷம் சாப்பிடுவதாலும், பிரசவம் அல்லது ஆபரேஷன் சமயத்தில் மிகுதியாக இரத்தம் வெளியேறுவதாலும், வாந்தி, பேதி, இவற்றின் காரண

# சிறுநீரக தானம்



மாக உடலிலுள்ள நீர் வற்றிப் (dehydration) போவதாலும் அக்யூட் ஃபெய்லியர் ஏற்படலாம். இக்குறையை சிகிச்சை மூலம் நீக்கிவிட்டால் சிறுநீரகம் பழையபடி இயங்கத் தொடங்கிவிடும்.

அடுத்து க்ரானிக் ஃபெய்லியர். இது நீண்ட காலமாகச் சிறிது சிறிதாகப் பழுதடைந்து முடிவில் குணப்படுத்த முடியாத அளவு சிறுநீரகம் பழுது படுவதாகும்.

1. சுமார் பத்து ஆண்டுகளுக்கு மேல் சர்க்கரை வியாதியோ அல்லது இரத்தக் கொதிப்போ இருந்து அது கட்டுப்படுத்தப் படாவிட்டால் சிறுநீரகம் பழுது பட்டுவிடும். இவற்றைக் கட்டுப்படுத்துவதால் சிறுநீரகத்தை ஓரளவு இயங்கச் செய்யலாம். 60% மனிதர்கள் இத்தகைய காரணங்களாலேயே சிறுநீரகம் பாதிக்கப்பட்டு அவதிப்படுகிறார்கள்.

2. பரம்பரையில் பாலிஸிஸ்டிக் கிட்னீஸ் உள்ளவர்களுக்கு 40 வயதுக்கு மேல் சிறுநீரகம் பழுதுபட வாய்ப்பு உண்டு. இவர்களின் குழந்தைகளுக்கும் இதே குறை ஏற்பட 50% வாய்ப்பு உண்டு.

3. க்ளாமருலோநெப்ரிடிஸ் என்பது சிறுநீரகத்திலேயே ஏற்படும் ஒருவித நோய். இதை ஓரளவு கட்டுப்படுத்தலாமே தவிர முழுவதும் குணப்படுத்த இயலாது.

4. அனல்ஜெஸிக் மருந்துகள் அதிகம் உண்பதாலும், அசைவ உணவில் கல்லீரல் (liver) பகுதியை உண்பதாலும், சிறுநீரகம் பாதிக்கப்படலாம். அதிகம்புகைபிடிப்பதால் டாக்ஸின் என்னும் நச்சு சிறுநீர்ப் பையை அரித்துப் புற்றுநோயை உண்டாக்கும். புற்றுநோய் மேலும் பரவி சிறுநீரகத்தைத் தாக்கலாம். கல் அடைப்பு காரணமாகவும் சிறுநீரகம் பாதிக்கப்படலாம். ஆரம்ப நிலையில் கண்டுபிடித்தால் ஓரளவு குணப்படுத்தலாம்.

5. டான்ஸிலைடிஸ், க்ஷயரோகம், பயோரியா எனப்படும் ஈறு வியாதி, ஸ்கேபீஸ் எனப்படும் தோல் வியாதி இவற்றால் இந்நோய்க் கிருமிகள் இரத்தத்தின் மூலம் சிறுநீரகத்தை அடைந்து அதைத் தாக்குகின்றன.

க்ரோனிக் ஃபெய்லியர் ஆனவர்கள் டயாலிஸிஸ் என்னும் சிகிச்சை முறையில் ஓரளவு சிறுநீரகத்தை இயந்திர உதவியால் வேலை செய்ய வைக்கலாம். அதன் பிறகு மாற்றுச் சிறுநீரகம் பொருத்திக் கொள்வதே நல்லது.

கே: டயாலிஸிஸ் என்றால் என்ன?

ப: இதை ஒரு செயற்கைச் சிறுநீரகம் என்று கூறலாம். ஒரு குழாய் வழியாக மனித உடலிலிருந்து இரத்தம் இதனுள் செலுத்தப்படுகிறது. ஸெமி பர்மியபிள் மெம்பரேன் என்னும் சவ்வு இருக்கும். இதன் ஒரு பக்கம் இரத்தமும் மறுபக்கம் டயாலிஸேட் கரைசலும் இருக்கும். இந்தச் சவ்வு இரத்தத்திலுள்ள கழிவுப் பொருட்களையும், தேவைக்கு அதிகமான நீரையும் மட்டும் பிரித்துவிடும். தூய்மையடைந்த இரத்தம் மீண்டும் உடலுக்குள் செலுத்தப்படுகிறது.

கே: டயாலிஸிஸ் முறை அதிக செலவா



கும் என்கிறீர்களே, என்ன காரணம்?

ப: சிறுநீரகம் பாதிக்கப்பட்ட ஒருவருக்கு ஒரு தடவைக்கு 5 மணி நேரம் என்ற கணக்கில் வாரத்தில் 15 மணி நேரம் டயாலிஸிஸ் சிகிச்சை செய்யப்படுகிறது. இதற்குப் பயன்படும் குழாய், செயற்கைச் சிறுநீரகம், டயாலிஸேட் கரைசல் இவைகளை அடிக்கடி மாற்ற வேண்டும். இவை டிஸ்போஸபிள் அயிட்டம் எனப்படும். எனவே ஒருமுறை டயாலிஸிஸ் செய்வதற்குச் சுமார் ரூ. 400/— வரை செலவு ஆகும்.

கே: ஒருவருக்கு எந்த நிலையில் மாற்றுச் சிறுநீரகம் பொருத்துவது என்று தீர்மானிக்கிறீர்கள்?

ப: ஒருவருக்கு கால், முகம் வீங்குதல், பகலைவிட இரவில் அதிக அளவில் சிறுநீர் கழித்தல், இரத்த அழுத்தம் அதிகரித்தல் போன்ற அறிகுறிகள் தோன்றினால் சிறுநீரகம் பழுது பட்டுள்ளது என்பது பொருள். ஆனால் இந்த அறிகுறிகள் தோன்றும்போதே சிறுநீரகம் சுமார் 60% பழுது பட்டிருக்கும். பசியின்மை, அசதி, வாந்தி இவை முற்றிய நிலையின் அறிகுறிகள்.

ஆயினும் உணவுக் கட்டுப்பாடு, புரோட்டீன், உப்பு, பொட்டாசியம் இவைகளை உணவில் குறைவாகச் சேர்த்துக் கொள்ளுதல், இரத்த அழுத்தத்தைக் கட்டுப்படுத்துதல் போன்றவற்றால் சுமார் 95% வரை பழுதாகிப் போன சிறுநீரகத்தை ஓரளவு இயங்கச் செய்யலாம். அதன் பிறகு டயாலிஸிஸ் சிகிச்சையில் நோயாளியை வைத்திருக்க வேண்டும். அவருக்கு ஏற்ற சிறுநீரகம் கிடைத்ததும் அதை அவருக்கு அறுவை சிகிச்சை மூலம் பொருத்த வேண்டும்.

கே: சிறுவர்களுக்கும் சிறுநீரகங்கள் பழுது படுமா?

ப: சில சூழ்நிலைகளில் சிறுவர்களது சிறுநீரகங்களும் பாதிக்கப்படலாம். அப்போது மாற்றுச் சிறுநீரகம் பொருத்த வேண்டும்.

பலாத்காரம், ஹிம்சை, கொடுமை என்றால் நாம் எப்போதும் கத்தியையோ, துப்பாக்கியையோ தான் நினைத்துக் கொள்கிறோம். ஆனால் உண்மையில் நாம் நம் நாக்கினாலும், நம் நடத்தையினாலுமே அதிகக் கொடுமைகளைச் செய்கிறோம். நாம் ஒருவருடன் ஒருவர் பழகும் விதத்திலேயே, அன்பினாலேயே, ஒரு புன்சிரிப்பினாலேயே ஹிம்சை செய்வதைத் தவிர்த்துச் சமாதானத்திற்கு அடிக்கல் நாட்ட வேண்டும்.

— அன்னை தெரஸா

தொகுப்பு: எஸ். விஜயா சீனிவாசன்.

கே: ஒருவர் சிறுநீரகத்தைத் தானமாகக் கொடுத்தால் அவரின் உடல்நிலை பாதிக்கப் படுமா?

ப: ஒவ்வொருவரின் உடலிலும் இரண்டு சிறுநீரகங்கள் உள்ளன. இவை இரண்டுமே இயங்கிக் கொண்டிருக்கும். ஒருவர் தனது சிறுநீரகங்களில் ஒன்றைத் தானமாகக் கொடுத்ததும் அவரின் இன்னொரு சிறுநீரகம் அளவில் சற்று விரிவடைந்து இன்னும் தீவிரமாக வேலை செய்து, மற்றொரு சிறுநீரகத்தின் இழப்பை ஈடு செய்துவிடும். எனவே சிறுநீரகத்தைத் தானமாகக் கொடுப்பவர்கள் தங்கள் உடல்நிலை பாதிக்கப்படும் என்று அஞ்சத் தேவையில்லை.

கே: சிறுநீரக தானம் செய்பவர்களின் உடல்நிலை எவ்வாறு இருக்க வேண்டும்?

ப: ஒருவரிடமிருந்து சிறுநீரகத்தைத் தானமாகப் பெறுவதற்கு முன் அவர் முழுமையான மருத்துவச் சோதனைகளுக்கு உட்படுத்தப்படுகிறார். தானமளிப்பவர் வயது 18 வயதுக்கு மேல் 55 வயதுக்கு உட்பட்டு இருக்க வேண்டும். அவரது இதயம், கல்லீரல் போன்ற அனைத்து உறுப்புகளும் சரிவர இயங்க வேண்டும். அவருக்குச் சர்க்கரை வியாதியோ, இரத்தக் கொதிப்போ இருக்கக் கூடாது. க்ஷயரோகம், மஞ்சள் காமாலை, புற்று நோய் இவற்றின் கிருமிகள் இரத்தத்தில் நிலையாகக் கலந்திருக்கக் கூடாது.

கே: சிறுநீரகத்தை உறவினர்கள் தான் தானமாகக் கொடுக்க வேண்டுமா? ஏன்?

சிறுநீரகத்தை ஒருவரிடமிருந்து பெறுவதற்கு முன் ஹெச்.எல்.ஏ. அதாவது ஹ்யூமன் லூகோசைட் ஆன்டிஜன் பொருத்தம் பார்ப்பார்கள். இது சரியாகப் பொருந்தாவிட்டால் நோயாளிக்கு அந்தச் சிறுநீரகத்தைப் பொருத்த மாட்டார்கள். உறவினர்களிடையே இந்த ஹெச்.எல்.ஏ. பொருத்தம் அதிக அளவில் இருப்பதால் பெரும்பாலும் உறவினர்களே சிறுநீரக தானம் செய்கிறார்கள். வெளி நபர்களிடமிருந்தும் சில சமயம் சிறுநீரகத்தைப் பெற்றுப் பொருத்துவது உண்டு.

கே: இறந்தவர்களின் சிறுநீரகங்கள் பயன்படுமா?

ப: இறந்தவர்களின் இதயம் நின்று போய் விடுவதால் சிறுநீரகங்களின் இயக்கமும் நின்று விடும். இந்நிலையில் இவர்களின் சிறுநீரகங்கள் பயன்படாது. ஆனால் சில சமயம் மூளைப் பகுதி மட்டும் பாதிக்கப்பட்டு அது செயலிழந்திருக்கும். செயற்கை சுவாச முறையினால் இதயத்தை இயங்கச் செய்திருப்பார்கள். இதனால் சிறுநீரகங்களும் செயல்பட்டுக் கொண்டிருக்கும். இந்த நிலையில் சிறுநீரகத்தை எடுத்தால் அதை மற்றவர்களுக்குப் பொருத்தலாம். வெளிநாடுகளில் 'இனி

# ப்ரீத்

சிறந்த சமையலறை சாதனம்




அதிக பட்ச விலை
ரூ. 1,200

- 1/2 மணி விடாமல் இயங்கும் சக்தி வாய்ந்த 450 வாட்ஸ் மோட்டார்
- 2 வருட உத்திரவாதம்
- ஆயுள் கால இலவச சர்விஸ்

ஏதோ ஒரு மிக்ஸி அல்ல — இது ஒரு ttk தயாரிப்பு

# N. S. K.

## பில்டர்ஸ்

## எங்களது 5-வது ஆண்டு விழாவின் சிறப்பு!

இந்தியாவிலேயே முதன் முறையாக!

## அறிமுகப்படுத்துகிறோம்.




## டெபாசிட்டுதாரர்களுக்கு பாதுகாப்பு திட்டத்தில் ஒரு புரட்சி!

## அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைப்பத்திரம்

தங்களுடைய முதலீட்டுக்கு இந்தியாவிலேயே முதன் முறையாக அரசு அங்கீகாரம் பெற்ற மனைப்பத்திரங்கள் பாதுகாப்பாக அளிக்கப்படுகிறது. இதை தவிர அறிமுகச் சலுகையாக 1.2.87 முதல் 30.4.87 வரை 24% வட்டியும் அளித்து சிறப்பு பரிசாக வெள்ளி குத்து விளக்கும் அளிக்கப்படும். இந்த அதிகபட்ச அறிமுகச்சலுகை வட்டி 24% 30.4.87 வரை மட்டுமே அளிக்கப்படும். 1.5.87 முதல் இந்த வட்டி 21% குறைக்கப்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

குறிஞ்சி டெபாசிட் திட்டம்: உங்களுடைய முதலீடு 48 மாதங்களில் இருமடங்காகிறது. உதாரணம் ரூ. 5000/- ரூ 10,000/- மாகிறது.

வீட்டுமனைப் பாதுகாப்பு பத்திரத்துடன் வட்டி விகிதங்கள்.
(1.2.87 முதல் 30.4.87 வரை)

| 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் | 5 வருடம் |
|---|---|---|---|
| 20% | 21% | 22% | 24% |

1.5.87 முதல் வட்டி விகிதங்கள்

| 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 21% |

### கூடுதல் போனஸ் வட்டி:

3 மாதங்களுக்கு 1% + 24% = 25%
6 மாதங்களுக்கு 2% + 24% = 26%
12 மாதங்களுக்கு 3% + 24% = 27%

சிறப்பம்சங்கள்:

1) அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைப் பத்திரம் பாதுகாப்பு.
2) வெள்ளியிலான சிறப்பு பரிசுகள்.
3) பிரதிமாதம் 25-ம் தேதிக்குள் வட்டி பணம் அனுப்பப்படுகிறது.
4) கால வரம்பிற்கு முன்பாக தேவைப்படுபவர்களுக்கு 30 நாள் தவணையில் டெபாசிட் திருப்பி தரப்படும்.



## N. S. K. பில்டர்ஸ்

38-B, பர்கிட் ரோடு [முதல் மாடி], (தி. நகர் பேருந்து நிலையம் எதிரில்) தி. நகர், சென்னை-600 017.
போன் : 445252
(எதிர்கால சேமிப்பிற்கு என். எஸ். கே.)





பிழைக்கமாட்டார்' என்றநிலையில் உள்ளவர்களின் சிறுநீரகங்களைத் தானமாகக் கொடுக்கும் வழக்கம் உள்ளது.

கே: ஒருவரிடமிருந்து சிறுநீரகத்தைஎடுத்த பின் எவ்வாறு பாதுகாக்கிறீர்கள்?

ப: நம் நாட்டில் சிறுநீரகத்தைத் தானமாகக் கொடுப்பவர், பெறுபவர் இருவருமே ஒரே சமயத்தில் மருத்துவ மனையில் சிகிச்சைக்கு உட்படுகிறார்கள். எனவே ஒருவர் உடலிலிருந்து சிறுநீரகத்தை எடுத்தவுடனேயே அது நோயாளிக்குப் பொருத்தப்பட்டு விடுகிறது. ஆனால் வெளி நாடுகளில் சிறுநீரகத்தை 'பர்ஃபியூஷன்' முறையில் 0° யில் வைத்துச் சுமார் 72 மணி நேரம் வரை பாதுகாக்கிறார்கள். கம்ப்யூட்டர் உதவியால், எடுக்கப்பட்ட சிறுநீரகம் யாருக்குப் பொருந்தும் என்பதை உடனடியாகக் கண்டுபிடித்து வேற்று நாடுகளுக்குக் கூட விரைவாக விமானம் மூலம் அனுப்பி விடுகிறார்கள். நம் நாட்டில் இன்னும் அவ்வளவு வசதிகள் ஏற்படவில்லை.

கே: சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை சென்னையில் எங்கெங்கு செய்யப்படுகிறது?

ப: வேலூர் சி. எம். சி. மருத்துவமனையில் தான் 1971 ஆம் ஆண்டு இந்தியாவிலேயே முதல் சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை வெற்றிகரமாக நிகழ்த்தப்பட்டது. அதன் பிறகு கடந்த 16 ஆண்டுகளாக அங்கு பல சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை நடைபெற்றுள்ளன. சென்னை நகரில் அரசாங்க மருத்துவமனைகளிலும், ஸ்டான்லி, அப்போலோ, கெஸ்ட் ஆஸ்பத்திரிகளிலும், பண்டலே கார்டியோ தொராஸிக் ஃபவுண்டேஷனிலும் நூற்றுக் கணக்கான சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சைகள் வெற்றிகரமாகச் செய்யப்பட்டு வருகின்றன.

கே: சிறுநீரகம் மாற்றப்பட்ட பின் மீண்டும் பழுதடையுமா?

பெரும்பாலும்பழுதுபடுவதில்லை. அப்படி ஓரிரு நாட்களுக்குப் பழுதுபட்டு விட்டால் மீண்டும் அறுவை சிகிச்சை மூலம் வேறு ஒரு சிறுநீரகத்தைப் பயன்படுத்தலாம்.

கே: மாற்றுச் சிறுநீரகம் பொருத்திக் கொண்டவர்கள் எவ்வளவு நாட்கள் ஓய்வாக இருக்க வேண்டும்?

ப: அறுவை சிகிச்சை செய்து கொண்டவர்கள் ஒரு வாரம் வரை கடினமான வேலைகளில் ஈடுபடுவதும், பளுதூக்குவதும்கூடாது. அதன் பிறகு இயல்பான வேலையில் ஈடுபடலாம். எடை மட்டும் அதிகரிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

கே: இறுதியாக சிறுநீரக தானம் பற்றி என்ன கூற விரும்புகிறீர்கள்?

ப: மற்ற உறுப்புக்களைப் போல், சிறுநீரகத்தை இறந்த ஒருவரிடமிருந்தோ, அல்லது வேறு நபர்களிடமிருந்தோ பெற இயலாது. எனவே நோயாளியின் நெருங்கிய உறவினர்கள் பரந்த மனப்பான்மையோடு தங்களின் ஒரு சிறுநீரகத்தைத் தானமாகக் கொடுத்தால் நோயாளி உயிர் பிழைப்பார். எனவே பணத்தை விட பாசத்தை உயர்வாகப் போற்றுங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்.

பேட்டி: **லக்ஷ்மி சங்கர்.**




# சொல்ல விரும்புகிறோம்

அட்டை வண்ணப் படம்: யோகா

* 'ராகம் தவறிய பாடல்கள்' மிக அருமை. ஏன் சார் அடுத்த இதழில் முடியும் என எங்களை ஒரு முக்கியமான இடத்தில் தவிக்க விட்டீர்கள்?

நீடாமங்கலம், பூமாகிருஷ்ணன்.

* 'இரத்தம் என்பது வெறும் சிவப்பு நிறத் திரவம் மட்டுமல்ல; அது ஓர் ஜீவனுள்ள திரவமும் கூட' என்ற இரத்ததான பேட்டி அருமை. பொது மக்கள் மட்டும் அல்ல — குறிப்பாக சினிமா நடிகர் — நடிகையர்களின் ரசிகர்களும் ரத்ததானம் தருகிற — நல்ல பல நற்பணிகளில் ஈடுபடலாமே!

மதுக்கூர், ஏ. பிரேமகுமார்.

* "பாலைப் பாதுகாப்பது எப்படி? பெண்கள் முடியை எப்படிக் காப்பது?" போன்ற பெண்களுக்குத் தகுந்த கட்டுரைகளை வழங்குவதில் 'மங்கையர் மலர்' ஒரு 'மங்காத மலர்' தான்!

புல்லந்தை, இரா. ஜான்சி ராணி.

* 'திருமண வேலைகளுக்குத் தயாராகுங்கள்' என்ற கட்டுரை அருமை. கல்யாண காலமான இப்போது இதை வெளியிட்டு இருப்பது சாலப் பொருந்தும்.

சேலம், ராமசுப்ரமணியன்.

* பெண் விடுதலையைப் பற்றிய கேள்விக்கு, ராதிகா "நம்ப பண்பாட்டுப்படி ஒரு பெண் கணவனோட வாழ்ந்து அவனால கௌரவிக்கப்படறதுதான் அவளுக்குப் பெருமை. அந்த வாழ்க்கையில கிடைக்கிற சந்தோஷமே தனிதான்" என்று அளித்துள்ள பதில் அருமை.

நந்தியநல்லூர், க. இளங்கோ.

* 'பத்திரிகை படித்தால் என்ன பயன்?' என்று கேட்பவர்களுக்கு 'மனம் திருந்தினேன்!' கட்டுரைகள் சரியான பதிலைத் தந்து விட்டது.

கோவை, உமார்த்தி.

* சென்ற ஆண்டின் பன்னிரண்டு மங்கையர் மலர் இதழ்களிலும் விமரிசிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆறு பேரில் ஒரே ஓர் ஆண் வாசகரை — அதுவும் பத்திரிகையாளரை — மட்டுமே தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள். மங்கையர் மலருக்கு ஆண் வாசகர்களும், பெண்களுக்கிணையாக உண்டு என்பது அடிக்கடி மறந்து விடுகிறதோ? — இது ஓர் ஆண் வாசகரின் விமரிசனம்.

சென்னை — 14. ஐயாறு எஸ். வாசுதேவன்.

* 'தைப்பூசத் திருநாளிலே' சித்திரக் கதை வெகு ஜோர். தைப்பூசத்தின் சிறப்பை வெகு அழகாகப் படத்துடன் விளக்கிய விதம் பாராட்டுக்கு உரியது. எங்கள் வீட்டில் சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவரும் படித்து மகிழ்ந்தோம்.

வளவனூர், சி. ஆர். நாகராஜன்.

* "ஹாப்பி பர்த் டே" கொண்டாடும் மங்கையர் மலரின் அட்டைப் படம் அருமையிலும் அருமை!

மதுரை, சுகந்தி.

* 'பிப்ரவரி 'மங்கையர் மலர்' இதழில் வெளிவந்துள்ள திருமதி சுமதி ரகுநாதன் அவர்கள் வரைந்துள்ள கோலத்தை நாங்கள் ரங்கோலியில் போட்டுப் பார்த்தபோது, நன்றாக வந்ததோடு, நண்பர்கள் எல்லோரும் 'அருமை!' என்று பாராட்டினார்கள்!

திருவனந்தபுரம், சரஸ்வதி வெங்கட்ரமணி.

* "யோசியுங்கள்" தலைப்பில் லட்சுமி நடராஜன் அவர்களின் "நமக்குள்ளே ஒரு கடிதம்" உடைந்து போன இதயங்களுக்கு இதமான கடிதம் மட்டுமல்ல! இனி வரும் தாய்மார்களுக்கு நல்ல பாடமும் கூட.

புல்லந்தை, இராம. மாதவன்.



# காரில் உங்கள் குழந்தை.

**கா**ர் வாங்கியிருக்கிறீர்களா? உங்கள் பையன் அல்லது பெண் குழந்தையைப் பெருமையாக 'முன் பக்கத்து இருக்கையில் உட்கார வைக்கிறீர்கள். அல்லது நீங்கள் முன் இருக்கையில் அமர்ந்து உங்கள் மடியில் குழந்தையை அமர்த்திக் கொள்கிறீர்கள். பலரும் குழந்தையை நிற்க வைத்து அழைத்துச் செல்வதைக் கூடப் பார்த்திருக்கலாம். குழந்தையை 'முன்' இருக்கையில் உட்கார வைப்பதோ, நிற்க வைப்பதோ. அல்லது உங்கள் மடியில் அமர்த்திக் கொண்டு பிரயாணம் செய்வதோ மிக மிக ஆபத்தான செயலாகும்.

அதிகபட்ச வேகத்தில் கார் செல்லும் போது சாலையின் குறுக்கே இடர்ப்படும் பிராணிகள், சிறுவர் சிறுமியரின் மீது மோதுவதைத் தவிர்க்க அவசரமாக ப்ரேக் போடும் போது காரின் முன்பக்கம் அமைந்துள்ள பகுதியில், உங்கள் குழந்தை சரிந்து மோதிக் கொள்ள வாய்ப்பு அதிகம் உண்டு.

இந்த மோதலினால் குழந்தையின் பற்களில் அடிபடுவதும், மூக்கு உடைபடுவதும் தவிர்க்க முடியாதது.

இந்தியக் கார்களில் 'லாமினேடட் விண்ட் ஷீல்ட்' உபயோகப்படுத்தப்படவில்லை. இதனால் மோதப்பட்ட முகத்தில் மிக ஆபத்தான 'சிராய்ப்புகள்' ஏற்படுகின்றன.

மேலும் மடியில் அமர்ந்துள்ள குழந்தையாக இருந்தால் காரின் முன்பகுதிக்கும் உட்கார்ந்திருப்பவருக்கும் இடையில் அகப்பட்டு உயிருக்கு அபாயம் ஏற்படும் நிலையும் உண்டாகலாம்.

குழந்தைகளை காரில் அபாயமின்றி அழைத்துச் செல்வது எப்படி?

1. முன் இருக்கையானாலும், பின் இருக்கையானாலும் மடியில் குழந்தையை உட்கார வைத்துக் கொள்ளக் கூடாது.

2. பின் இருக்கையில் அவர்களைத் தனியாக உட்கார வைக்க வேண்டும்.

3. குழந்தை அமருவதற்கென்றே தயாரிக்கப்பட்ட (**Specially designed safety seats**) இருக்கைகளை பொருத்துவது மிக நல்லது. இதில் நான்கு வயதுக்கு உட்பட்ட குழந்தைகளை உட்கார வைக்கலாம்.

4. நான்கு வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு இருக்கையில் விமானத்தில் இருப்பதுபோல 'பெல்ட்' இணைத்துக் கொள்ள வேண்டும்.

மேற்கூறிய அதிகப்படி வசதிகளை செலவு செய்து காரில் நாமே பொருத்திக் கொள்ளலாம்.

அல்லது கார் உற்பத்தியாளர்களின் கவனத்திற்கு இவற்றை முன்வைத்து கார் தயாரிக்கும்போதே இத்தகைய இணைப்புகளுடன் தயாரிக்கச் சொல்லலாம்.

— அமிர்தா சுப்ரமண்யம்

புகைப்படம்: ஏ. எஸ். திவாகர்

(காரில்: பாஸ்கர், மாதுரி)



(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

7

குமாரசாமியின் வேலைகள் முடிந்து, வீட்டுக்குப் புறப்பட்டார்கள் சுந்தரமும் மீனாட்சியும்.

மீனாட்சி, நந்தினியைக் கூப்பிட்டு, வாசலில் நின்று கொண்டு, உள்ளே இருக்கிறவர்களுக்கும் கேட்கும் ஸ்தாயியில் "நந்தினி! நீ வீட்டுக்கு வர்றபோது அந்தப் பத்தாயிரத்தை வாங்கிக்கிட்டு வா... இல்லேன்னா, இங்கேயே இருந்துடு..." என்று, முகத்தைக் கடுகடுவென்றுவைத்துக்கொண்டுசொன்னாள்.

திடுக்கிட்ட் நந்தினி, பேச நா எழாமல், கணவனின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

"சுந்தரம்! நீயும் சொல்லிட்டு வாடா..." என்று ஆணை பிறப்பித்தாள் தாய்.

"அதான், நீ சொல்லிட்டியேம்மா, அதையே திருப்பி நானும் சொல்லணுமா?" என்று மனைவியின் முகத்தையே பார்க்காமல், தாயின் கட்டளையை அஞ்சல் செய்துவிட்டு, அவள் பின்னால் நடந்தான்.

நந்தினியின் இரத்த நாளமெல்லாம் ஆத்திரம் கொப்பளித்தது...

இப்படி ஒரு 'அம்மா பிள்ளை' உலகத்தில் இருப்பானா...?

விலா எலும்புகளுக்குக் கைகளை ஆதரவாக வைத்துக் கொண்டு, லொக் லொக் என்று, குழிந்த கண்களுக்குள் நீர் தளும்ப, இருமி, சளித் திரளை ஒரு தகரக் குவளையில் துப்பிவிட்டு, "ஏன், நந்து! உங்கப்பா செத்த பிறகும் அந்தப் பத்தாயிரம் விவகாரம் சாகலியா? இனிமே நான் பத்தாயிரத்துக்கு எங்கே போவேன்?" என்று ஒப்பாரி வைக்கும் குரலில் வேதனைப்பட்டாள் வள்ளி.

"அம்மா! அப்பா செத்ததுக்கு அரசாங்கத்திலே கொடுப்பாங்களே பத்தாயிரம் ரூபாய்! அந்தப் பத்தாயிரத்தைத்தான் வாங்கிக்கிட்டு

# ராகம் தவறிய பாடல்கள்

வரச் சொல்றாங்க... அப்பா செத்துட்டார்ங்கிற சேதி வந்து நான் அங்கேயிருந்து புறப்பட்ட போதே, இழவுக்குப் போயிட்டுத் திரும்புற போது, கவர்ன்மெண்ட் கொடுக்கிற பத்தாயிரத்தை வாங்கிக்கிட்டு வான்னு என் மாமியார் சொல்லித்தான் அனுப்பினாங்க— இரக்கமேயில்லாத பாவி!'' என்று மனங் குமுறித் திட்டினாள் நந்தினி.

நோயாளியின் வறண்ட முகத்திலே ஓர் ஒளிப் பிழம்பு தெறித்தது:

''ஆமா.... நந்து! அந்தப் பத்தாயிரம் வந்ததும், அதை எடுத்துக்கிட்டுப் போ... அப்போதான் உன் வாழ்க்கை அங்கே நிம்மதியாயிருக்கும்...'' என்றாள் தாய்.

''அம்மா! இத்தனை நாளும் நான் அங்கே வாழ்ந்தது வாழ்க்கை இல்லே; நரக வேதனை... ஒவ்வொரு நாளும் எப்போ கழியும்னு, உயிரைக் கையிலேயே பிடிச்சுக்கிட்டிருப்பேன்...'' என்று விழிகளில் நீர் கசியச் சொல்லி அழுதாள் மகள்.

''பத்தாயிரம் கொடுக்காததினால்தான் அப்படி உன்னைக் கொடுமைப்படுத்தியிருப்பாங்க... இப்போ பணத்தைக் கொடுத்திட்டா, நீ சந்தோஷமாய் அங்கே வாழலாம்...'' என்று நம்பிக்கையூட்டினாள் வள்ளி.

''புகுந்த வீட்டிலே சந்தோஷத்தை பத்தாயிரம் ரூபாய் கொடுத்துத்தான் வாங்கணும்னா, அப்படி விலை கொடுத்து வாங்குகிற சந்தோஷம் எனக்கு வேண்டாம்...''

''அப்படிச் சொல்லாதே... நாம் சொன்னபடி பத்தாயிரம் கொடுக்காதது நம்ம தப்புத்தானே? செத்தும் கொடுத்தான் சீதக்காதி என்பாங்க; அதுமாதிரி உங்கப்பா செத்து உன்னை வாழ வைச்சிருக்கார்ன்னு நினைச்சுக்கோ...''

''அதெப்படி, அந்தப் பத்தாயிரம் எனக்கு மட்டுமில்லையே, உனக்கு, மற்ற பிள்ளைகளுக்கு, எல்லோருக்குமே பங்கு இருக்கு. உங்களையெல்லாம் விட்டுட்டு, நான் ஒருத்தியே அந்தப் பணத்தை எடுத்துக்கிட்டுப் போறது என்ன நியாயம்?'' என்று மறுத்து விட்டாள் நந்தினி.

அப்போது அங்கே வந்த ரேவதியும் நாராயணனும், அக்கா சொன்னதை ஏற்றுக் கொள்ளவில்லை.

''அக்கா! நாம் ஏற்கெனவே பத்தாயிரம் தர்றதாகச் சொல்லியிருக்கோம்... அதைக் கொடுக்கிறதுதான் நியாயம்.. நீ அங்கே சந்தோஷமாயிருக்கணும்.. எங்களைப் பத்தி நீ கஷ்டப்படாதேக்கா! நாங்க எப்படியாவது பிழைச்சுக்கிடுவோம்...'' என்று ரேவதி சொன்னாள்.

''ரேவதி! நாராயணா! நீங்க எல்லாம் இப்படிச் சொல்றதிலே ஆச்சரியம் இல்லே; ஆனால், நீங்க சொல்றதுக்காக, அந்தப் பணத்தை எடுத்துக்கிட்டுப் போனால், அது அநியாயம்.. உங்களை எல்லாம் அனாதையாய், நிர்க்கதியாய் விட்டுட்டு, நான் போக மாட்டேன்...'' என்று உறுதியாகச் சொல்லி விட்டாள் நந்தினி.

அரசாங்கம் தந்த பத்தாயிரத்தில், சில்லறைக் கடன்களை அடைத்துவிட்டு, மீதியைக் குடும்பச் செலவுக்கு வைத்துக் கொண்டாள்.

டைப்ரைட்டிங், ஷார்ட்ஹாண்ட் பாஸ் பண்ணி வைத்திருந்தது, இப்போது நல்லதாகப் போயிற்று. அந்த குவாலிஃபிகேஷனை வைத்து, வேலை தேடத் தொடங்கினாள் நந்தினி.

அப்பாவுக்குத் தெரிந்த ஓர் ஆசிரியர், கல்பனா எலக்ட்ரானிக்ஸ் கம்பெனியில், மானேஜரிடம் சிபாரிசு செய்ததன் மூலம், அந்தக் கம்பெனியில் ஸ்டெனோகிராபராக வேலையில் சேர்ந்தாள் அவள்.

நல்ல சம்பளத்தில் அவள் வேலையில் சேர்ந்துவிட்டதால், தம்பியும் தங்கைகளும் தொடர்ந்து பள்ளிக்கூடத்துக்குப் போகத் தொடங்கினார்கள்.

ஒரு நல்ல டாக்டராகப் பார்த்து, அம்மாவைக் காட்டி, மருந்து மாத்திரைகள் வாங்கிக் கொண்டு வந்தாள் நந்தினி.

அவள் வேலைக்குச் சேர்ந்த முதல் நாள் — மேனேஜர் அலுவலகத்திலிருந்த ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்தி வைத்தார்.

அவர்களில் 'மிஸ்டர் கணேசன் — அக்கவுண்டண்ட்' என்று அறிமுகப்படுத்தப்பட்டவனை, அதற்கு முன்பு எங்கோ பார்த்த மாதிரி இருந்தது அவளுக்கு.

ஆனால், அவன் அவளிடம் எதுவும் சொல்லாமல் — தெரிந்ததுபோல் காட்டிக் கொள்ளாமல் இருந்தான். அதனால் அவனிடம் துருவிக் கேட்பது ஒரு பெண்ணுக்குப் பண்பல்ல என்று விட்டுவிட்டாள் நந்தினி.

ஒருநாள் — அலுவலகம் வழக்கத்தை விட, அதிகசுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கியது.

அய்க்கண்

எம். டி. அன்று அலுவலகம் வருகிறாராம்...

வடநாட்டுச்சுற்றுப்பயணம்சென்றஎம்.டி. ஒருமாதத்திற்குப்பிறகு, அன்றுதான் அலுவலகத்துக்கு வருகிறாராம்...

சரியாகப் பத்து மணிக்கு, டீக்காக டிரஸ் செய்து கொண்டு, கம்பீரமாக உள்ளே வந்தார் எம். டி. சிவராமன்.

வயது நாற்பதுதான் இருக்கும்; வயதுக்கு மீறிய சுறுசுறுப்பு; பெரிய கண்களிலே ஆழமான தீட்சண்யம்; எப்போதும் சிரிப்பது போன்ற முகக்களை.

எல்லோருடைய வணக்கங்களையும் ஏற்றுக் கொண்டு, அறைக்குள் போய் உட்கார்ந்த சில நிமிஷங்களில், பியூன் நந்தினியிடம் வந்தான்:

''மேடம்...! புதுசா சேர்ந்த உங்களைப் பார்க்கணும்னு எம். டி. கூப்பிடறார்.''

உடலெங்கும் படபடப்பு கிளர்ந்தெழ, சேலை, முந்தானை, தலை, பின்னல் எல்லாவற்றையும் சரி செய்து கொண்டு எம். டி. யின் அறைக்குள் நுழைந்தாள் நந்தினி.

''குட்மார்னிங், ஸார்...!'' என்று மெல்லிய குரலில் வணக்கம் சொல்லிவிட்டு, லேசான நடுக்கத்துடன் நின்றாள் அவள்.

அவளை நிமிர்ந்து பார்த்த எம். டி. ஒரு விநாடி தன்னை மறந்து எழுந்து நின்றுவிட்டு, சட்டென்று, ''குட்மார்னிங்...'' என்று தட்டுத் தடுமாறிச் சொல்லிவிட்டு உட்கார்ந்தான்.

அவனுடைய தடுமாற்றத்தைக் கண்டு திகைத்துப் போன நந்தினி, அடுத்து என்ன சொல்வதென்று தெரியாமல் குழம்பிப் போய், தன் வழக்கம்போல், மூக்கை இடது கைச் சுட்டுவிரலால் லேசாகத் தேய்த்தபடி நின்றாள்.

இப்போது, சிவராமனின் முகத்தில் மேலும் அதிர்ச்சி படிந்தது.

அவனுடைய கண்களில் வெளிப்பட்ட ஆச்சரியத்தைக் கூட அவளால் புரிந்து கொள்ள முடிந்தது.

8

தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டு, எதிரே நின்ற நந்தினியிடம், ''யுவர் நேம், ப்ளீஸ்?'' என்று மெலிந்த குரலில் கேட்டான் சிவராமன்.

''நந்தினி.. மிஸஸ் நந்தினி சுந்தரம்...'' என்று அழுத்தமாகக் கூறினாள் அவள்.

''ஓ!... உங்களைப் பார்த்ததும் கொஞ்சம் தடுமாறிட்டேன்... ஆல் ரைட்... இந்த ஆபீஸ் எப்படியிருக்கு உங்களுக்கு?'' என்று பரிவோடு விசாரித்தான் எம். டி.

''நல்லாயிருக்கு... எந்தக் குறையும் இல்லை...'' என்று அவள் சொல்லும்போது, அவன் காதுகளைவிட, அவன் கண்களே அதிகமாக அவளிடம் ஈடுபட்டிருந்ததை அவள் உணர்ந்து உடம்பிலே கம்பளிப் புழுக்கள் ஊர்வது போல் மெலிதாக நெளிந்தாள்.

எம். டி. அலுவலகம் வரும் போதெல்லாம், தன்னுடைய லெட்டர்களை டிக்டேட் செய்ய, நந்தினியைக் கூப்பிடுவது வழக்கமாகிவிட்டது. அவளைவிட சீனியர் ஸ்டெனோ இன்னொருத்தி இருந்தாலும், அவளை எம்.டி. கூப்பிடுவதில்லை.

எம். டி. நந்தினியிடம் தவறாக எதுவும் பேசாவிட்டாலும், அவனுடைய பார்வை, தன்னிடம் அளவுக்கு மீறி நிலைத்து நிற்பதை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை., என்றாலும், அதை வெளியே யாரிடமும் சொல்வதற்கும் பயம்; எம். டி. எப்படிப் பட்டவர் என்று மற்றவர்களிடம் விசாரிக்கவும் பயம்.

அறையில் அவனுடன் தனியே இருக்கும் போது, ஏதோ தணலில் இருப்பது போல் உணர்வாள் நந்தினி. ஒருநாள், வழக்கம் போல், அவன் டிக்டேட் செய்த கடிதத்தை எழுதிக் கொண்டு, திரும்பினாள் அவள்.

''எக்ஸ்க்யூஸ் மி, நந்தினி! ஒன் மினிட், ப்ளீஸ்... என் பெர்ஸனல் விஷயமாக உன் கிட்டே பேசணும்... உட்கார்...'' என்றான், சிவராமன்.

படபடக்கும்நெஞ்சுடன், நாற்காலிவிளிம்பில் உட்கார்ந்தாள் அவள்.

''நந்தினி! உன் அப்ளிகேஷனைப் பார்த்தேன். உன்னைப் பத்தி மானேஜரிடமும் விசாரிச்சேன். உங்க அப்பா ஆசிரியராயிருந்தவர், இல்லியா? உனக்குயாரேனும்டீச்சரைத் தெரிஞ்சிருக்குமே?''

சிறிது தைரியம் வரப் பெற்றவளாய், ''எதுக்கு ஸார்?'' என்று மெதுவாகக் கேட்டாள் நந்தினி.

''என்னோட பையன் பாஸ்கர், இரண்டாம் வகுப்பு படிக்கிறான். அவனுக்கும் என் மகள் ஜீவிதாவுக்கும் பாடம் சொல்லித் தர்றதுக்கு ஒரு டீச்சர் தேவை. அவங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறதைவிட, நல்ல பழக்கங்கள், பண்பாடு, எல்லாம் சொல்லித் தர்ற நல்ல டீச்சராயிருக்கணும்... இதுவரை நாலைஞ்சு பேர் டியூஷன் சொல்லிக்

சேமியா பாயஸம் செய்யும் பொழுது அதோடு சிறிது வறுத்த அவல் பொரியையும் பொடித்துப் போட்டுச் செய்தால் பாயஸம் சேர்ந்தாற்போல் இருப்பதோடு ருசியாகவும் மணமாகவும் இருக்கும்.

— பாலா.

# இப்போது! நியூட்ரின் வழங்குகிறது... இன்ஸ்டன்ட் ஃபுட்ஸ்!

## விரும்பிக் கேட்டதுமே...



## குலாப் ஜாமூன்!

ஆம் உண்மை இப்போது நியூட்ரின், இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன்களை உங்களுக்கு வழங்குகின்றது. இன்சுவை சொட்டும் இனிப்புப் பண்டம், நொடிகளில் தயார் ஆவதில் நீரும் குலாப் ஜாமூன்களைத் தயாரித்து குடும்பத்தினரையும் நண்பர்களையும் வியப்பில் ஆழ்த்துங்கள். நியூட்ரின் இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன் மிக்ஸ் உபயோகித்து, கணப்பொழுதில் தயாரித்து மகிழுங்கள்.

நியூட்ரின் இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன் மிக்ஸ் 200 கிராம் மற்றும் 100 கிராம் பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

நீங்கள் விரும்பும் விருதுவான தேனூறும் குலாப் ஜாமூன்களை உங்கள் அன்றுட உணவுடன் ருசித்து ரசித்துச் சாப்பிடுங்கள்.

வாழ்வில் இனியவைகளை வழங்குவோர் நியூட்ரின்!

**நியூட்ரின்**

**இன்ஸ்டன்ட்**

திகைப்பூட்டும் தித்திப்பு












வழங்குவோர்: இந்தியாவிலேயே மிகப்பெருமளவில் விற்பனையாகும் மிட்டாய் தயாரிப்பாளர்கள்.

ACIL/0919/85 TAM

கொடுக்க வந்தாங்க... ஆனால் அவங்களெல்லாம், ப்ரொஃபெஷனலாக இருந்தாங்களே ஒழிய, மனிதாபிமானத்தோட என் குழந்தைகளிடம் பழகலே... நந்தினி! இஃப்யூ டோன்ட் மைன்ட், ஒரு நல்ல டீச்சரை ஏற்பாடு பண்ணி உதவலாமே...'' என்று வேண்டினான் சிவராமன்.

அவனுடைய குரலின் கண்ணியமும் பேச்சின் தன்மையும் அவளை மிகவும் பாதித்தன.

அவனைப் பற்றிப் பெரிய தப்புக் கணக்குப் போட்டுவிட்டோமே என்று அவளுடைய மனசாட்சி, சாட்டையாய் அவளைச் சாடியது.

சட்டென்று அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது...

மாலை அலுவலக வேலை முடிந்ததும், வீட்டுக்குப் போய், கொட்டு கொட்டு என்று சும்மாதானே உட்கார்ந்து கொண்டிருக்கிறாள்? அந்த நேரத்தில், எம். டி. யின் குழந்தைகளுக்கு டியூஷன் சொல்லிக்கொடுத்தால் என்ன? பொழுதும் நல்லபடியாகப் போகும். வருமானமும் கிடைக்குமே? அந்த வருமானம், வீட்டுச் செலவுக்கு உதவியாயிருக்குமே...?

''ஸார்! நீங்க பெர்மிஷன் கொடுத்தீங்கன்னா, நானே உங்க குழந்தைகளுக்கு ட்யூஷன் சொல்லிக் கொடுக்கிறேனே?'' என்று நந்தினி சொன்னதும், சிவராமன் மகிழ்ச்சியில் துள்ளிக் குதித்து விட்டான்:

''ஷ்யூர்? எனக்கு ரொம்ப மகிழ்ச்சி நந்தினி! இன்னிக்குச் சாயந்திரமே என் பங்களாவுக்கு வந்திடு. நானும் என் குழந்தைகளும் ஆவலோடு உன்னை எதிர்பார்த்திருப்போம். பை த் பை, உனக்கு ட்யூஷன் ஃபீஸ் எவ்வளவு வேணும்னாலும் வாங்கிக்கோ.'' என்று சிரித்தவாறு சொன்னான்.

''நீங்க கொடுக்கிற சம்பளத்தை வாங்கிக்கிடறேன், சார்?''

''அப்படியா?... சரி, நான் கொடுக்கிறதை நீ ஆட்சேபனை சொல்லாம வாங்கிக்கணும் — ஓ.கே... யூ மே கோ நவ்...'' என்றான் சிவராமன்.

அன்று மாலை, அலுவலகம் முடிந்ததும், சிவராமனின் வீட்டுக்குப் புறப்பட்டாள் நந்தினி.

அகலமான தெருவில், பெரிய காம்பவுண்டுக்குள், சிறியதாக — ஆனால் அழகாக, நாகரிக பாணியில் மாடியுடன் அமைந்திருந்தது அவனுடைய பங்களா.

போர்டிகோவில் செருப்பைக் கழற்றிப் போட்டுவிட்டு, பளிங்குக் கற்கள் பதித்த வராந்தாவைத் தாண்டி, ஹாலுக்குள் தலையை நீட்டினாள் நந்தினி.

ஹாலின் நடுவே, பெரிய 'லைஃப் சைஸி'ல் வைக்கப்பட்டிருந்த போட்டோவைப் பார்த்துத் திடுக்கிட்டு நின்றாள் அவள்.

அந்தப் போட்டோவில் இருந்த பெண், நந்தினியைப் போலவே இருந்தாள்!

அவள் திகைப்புடன் நின்று கொண்டிருந்தபோது —

''ஹலோ நந்தினி! யூ ஆர் வெல்கம்..'' என்று உள்ளேயிருந்து வந்து, வரவேற்றான் சிவராமன். அவளுடைய கண்களில் திமிர்ந்த திகைப்பைப் புரிந்து கொண்டான் அவன்.

''நந்தினி! இந்த போட்டோவில் இருப்பது யார் தெரியுமா...? என் மனைவி ரஞ்சிதா. அவள் என்னை விட்டுவிட்டுப் போய் இரண்டு வருஷமாயிட்டுது... உன்னை முதன் முதலில் ஆபீஸில் பார்த்தபோது, நான் ஏன் திடுக்கிட்டுப் போனேன்னு உனக்கு இப்போ புரிஞ்சிருக்கும்! நீ அசப்பிலே என் ரஞ்சிதா மாதிரியே இருக்கிறது மட்டுமில்லே — அவளுடைய மேனரிஸம் — மூக்கை விரலாலே தேய்க்கிற பழக்கம் — அதுகூட உன்கிட்டே இருந்தவுடனே, நான் பிரமிச்சுப் போயிட்டேன். உன்னைப் பார்க்கிற போதெல்லாம், என் மனைவியைப் பார்க்கிற மாதிரி ஓர் உணர்வு எனக்கு...'' என்று தழுதழுத்த குரலில், கண்களில் ஈரம் கசிய, மெதுவாகச் சொன்னான் அவன்.

அப்போது — ''டாடி!'' என்று கூவிக்கொண்டு ஓடிவந்த சிறுவன், அவளைப் பார்த்ததும் ''மம்மி...! மம்மி...! நீ எப்போ வந்தே?'' என்று அவளை நோக்கிப் பாய்ந்தான்.

நந்தினி அருகே வந்ததும், அவள் மம்மி இல்லை என்று புரிந்து கொண்டவனாய், தயங்கி அப்படியே விரிந்த கண்களுடன் நின்றான்.

''நந்தினி! இவன்தான் என் மூத்த மகன் பாஸ்கர். அவனும், உன்னைப் பார்த்ததும், மம்மின்னு நினைச்சிட்டான், பார்த்தியா?'' என்று சிரித்தபடி, ''டேய் பாஸ்கர்! இவங்க பெயர் நந்தினி. உனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க வந்திருக்கிற டீச்சர்... சுட்டித்தனம் பண்ணாம, ஒழுங்காய் இவங்ககிட்டே பாடம் படிக்கணும், தெரியுதா?'' என்று அறிமுகம் செய்து வைத்தான் சிவராமன்.

பாஸ்கர், உடன்பாடாகத் தலையை ஆட்

இல்லத்தரசிகள் தங்கள் அழகைப் பாதுகாத்துக் கொள்ள நேரம் கிடைப்பதில்லையே என்று கவலைப்பட வேண்டாம். வீட்டு வேலைகளையும் கவனித்துக் கொண்டு அழகுக் குறிப்பும் செய்து பார்க்கலாமே! உதாரணமாகப் பால் பாத்திரத்தை ஒழித்துப் போடுவதற்கு முன் அதில் ஒட்டிக் கொண்டிருக்கும் பாலாடையை முகத்திலும் கழுத்திலும் தடவி, பத்து நிமிடம் கழித்து முகம் கழுவினால் தோல் மென்மையாகவும் பளபளப்பாகவும் இருக்கும்.

— மீனா ரமணி.

டிஞன். அவனைக் கூப்பிட்டுத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள் நந்தினி.

''இவனைவிட, இவன் தங்கை ஜீவிதா ரொம்ப சுட்டி... ஆனல், பேச மாட்டாள். ஏன்ன, அவள் ஊமை...'' என்ற தந்தையின் குரலில் அவலம் இழையோடியது.

''என்ன ஊமையா...?'' என்று திடுக்கிட்டாள் நந்தினி.

''ஆமா... ஆனல் பிறவியிலேயே ஊமை இல்லே... ரெண்டு வருஷத்துக்கு முன்னலே, பாஸ்கரை ஸ்கூலிலே விட்டுட்டு, காரிலே நானும் ரஞ்சிதாவும் ஜீவிதாவும் வந்துக்கிட்டிருக்கும் போதுதான் அந்த ஆக்ஸிடெண்ட் நடந்திச்சு; ஆக்ஸிடெண்ட் ஆன ஸ்பாட்டிலே, தன் கண் முன்னலே, தாய் துடிதுடித்துச் செத்ததைப் பார்த்த அதிர்ச்சியிலே, ஜீவிதா ஊமையாயிட்டா... நானும் எவ்வளவோ வைத்தியம், ஆயிரக்கணக்காய்ச் செலவழிச்சுப் பார்த்திட்டேன். பயன் இல்லே... இனிமே என் ஜீவிதா பேச மாட்டான்னு எல்லா டாக்டர்களும் கைவிரிச்சுட்டாங்க... இன்னும் கைவிரிக்காத டாக்டர் ஒரே ஒருத்தர்தான். அவர்தான் 'சுப்ரீம் காட்!' எஸ்... இனிமேல் கடவுள்தான் அவளைப் பேச வைக்கணும்...'' என்று சிதைந்த குரலில் பேசிய தந்தையின் கன்னங்களில் விழிநீர் வழிந்தோடியது.

அவனுடைய பாசமும் அன்பும் நந்தினியை உருக்கிவிட்டது.

''பாஸ்கர்! தங்கச்சி எங்கே?'' என்று கேட்ட சிவராமன், உள்ளே திரும்பி ''ஜீவிதா! ஜீவிதா! இங்கே வாம்மா...'' என்று உரக்கக் கூப்பிட்டான்.

''பாஸ்கரைக் கூப்பிட்டால், என்ன டாடின்னு குரல் கொடுத்துக்கிட்டே ஓடி வருவான்; ஆனல் ஜீவிதா?'' என்று விம்மினன் சிவராமன்.

ஹாலின் தெற்கு வாசற்படியில், ஒரு பெரிய ரோஜாப்பூவாகச் சிரித்தபடி தோன்றினள் ஜீவிதா.

டாடியைப் பார்த்த அவளது பூவிழிகள், நந்தினியைப் பார்த்ததும், அப்படியே வியப்பில் விரிந்து மலர்ந்து, ஆழமான சலனத்துடன் அவளையே பார்த்தவாறு நின்றன.

அந்தச் சிறு புஷ்பத்தைப் பார்த்த நந்தினி, எழுந்து, கைகளை நீட்டி, ''வா ஜீவிதா!'' என்று உருக்கமாக அழைத்தாள்.

அவள் தோற்றமும் அழைப்பும், அந்தப் பிஞ்சு உள்ளத்திற்குள் பெரிய அதிர்வுகளை எழுப்பி விட்டன. விழிகள் அகன்று ஒளி வீச, உதடுகள் நடுங்கி விரிந்து குவிந்து, திருகி, பலமாக அசைய — நாக்கு உள்ளே எழும்பி; புரண்டு, நகர்ந்து அசைய — அவள் முகத்திலே உணர்ச்சிக் கொந்தளிப்புக்கள் பொங்கின.

அந்த ஊமைச் சிற்பத்தைக் கண்டு உணர்ச்சிவசப்பட்ட நந்தினி, தன்னையறியாமலேயே, வழக்கம்போல், மூக்கை இடது சுட்டு விரலால் மெதுவாகத் தேய்த்துக் கொண்டாள்.

9

நீண்ட நாட்களுக்குப் பிறகு, மறுபடி மம்மி வந்து, வழக்கம்போல் மூக்கைத் தேய்த்துக் கொள்வதைக் கண்ட அந்தப் பிஞ்சு உள்ளம் சிலிர்த்தது.

''ம...ம்...மி!'' என்று தட்டுத் தடுமாறிச் சொல்லிக் கொண்டே ஜீவிதா நந்தினியை நோக்கி ஓடிவந்தாள்.

அவளைத் தூக்கி வாரியணைத்து உச்சி மோந்து நந்தினி கொஞ்சிய போது, ''ம..ம்..மி!... மம்மி!... எப்போ வந்தே மம்மி?'' என்று பேசத் தொடங்கி விட்டாள் ஜீவிதா.

எதிர்பாராத வியப்பில் தந்தை மெய் சிலிர்த்து, கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொழிய, எழுந்து நின்றன்.

''டாடி! மம்மி இத்தனை நாள் எங்கே போயிருந்தாங்க?'' என்று தந்தையிடம் கேட்டவாறு, அவனிடம் தாவினள் ஜீவிதா.

மகளைக் கட்டிப் பிடித்து, முத்த மழை பொழிந்து கொஞ்சினன் சிவராமன்.

''ஜீவிதாக் கண்ணு! இவங்க வெறும் மம்மி இல்லே! தெய்வம்! மம்மியாக இருந்த உன்னோட அம்மா, கடவுள் கிட்டே போயிட்டுத் தெய்வமாகத் திரும்பி வந்திருக்காங்க...'' என்று மகளுக்குப் புரியாத வார்த்தைகளாக, நன்றியுணர்ச்சி மேலிட்டுப் பேசினன் அவன்.

''நந்தினி! உன்னைத் தெய்வம்னு சொல்றேனே — அது வெறும் வார்த்தை இல்லே. ஐ மீன் இட்.. உனக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே எனக்குத் தெரியலே. எத்தனையோ ஆயிரம் ஆயிரமாய் வைத்தியம் பார்த்தும், கொடுக்க முடியாத பேச்சை, நீ கொடுத்திட்டியேம்மா! உனக்கு எவ்வளவு பணம் வேணும்னலும் கேள், தர்றேன்...'' என்று மகிழ்ச்சியின் விளிம்பில் நின்று பேசினன் சிவ

மக்காச்சோளத்தைச் சுத்தப்படுத்தி ரவை போல் உடைத்துக் கொள்ளவும். ஒரு பங்கு ரவைக்கு [illegible] பங்கு [illegible] உளுத்தம் பருப்பை ஊறப்போட்டு நன்கு அரைத்து ரவையில் போட்டு உப்புப் போட்டு கரைத்து வைத்து விடவும். மறுநாள் இட்லியாக வார்த்துச் சாப்பிடவும். சர்க்கரை வியாதி உள்ளவர்களுக்கு நல்ல சத்துள்ள உணவு.

— ஜெயலக்ஷ்மி.

ராமன்.

''ஸார்! என் அன்பையும், பரிவையும் ரூபாய் பைசாவாக மாத்திடாதீங்க, ஸார்! இதிலே என் செயல் என்ன இருக்கு? நீங்க சொன்ன மாதிரி, சுப்ரீம் டாக்டரான கடவுள், என்னைக் கருவியாய் வச்சு, குழந்தைக்குப் பேச்சைக் கொடுத்திருக்கிறார் — அவ்வளவுதான்...'' என்ற நந்தினியின் பண்பும் அடக்கமும் சிவராமனின் நெஞ்சுக்குள் ஆழமாகப் பதிந்தன.

மறுநாள் முதல் — தினசரி மாலையில் நந்தினி அங்கே வந்துவிடுவாள். எல்லோரும் டிபன், காப்பி சாப்பிடுவார்கள். பிறகு குழந்தைகளுடன் பாடமும் விளையாட்டுமாக, இரண்டு மணி நேரத்துக்கு மேல் தங்கியிருப்பாள். பின்பு, டவுன் பஸ்ஸில் வீடு திரும்புவாள்.

ஒருநாள், சிவராமனும் இருக்கும் போது, ஜீவிதா, ''ஏன் டாடி! அப்போ எல்லாம், மம்மி இங்கேதான் இருப்பாங்க? இப்போ ஏன் எங்கேயோ போயிடறாங்க?'' என்று கேட்டாள்.

அவளுக்கு என்ன பதில் சொல்வதென்று புரியாமல் விழித்தான் அவன்.

''ஜீவிதாக் கண்ணு! அப்போ, மம்மி உனக்கு மட்டும் மம்மி! ஆனா இப்போ அவளை நம்பி ஒரு குடும்பமே இருக்கு.. அதைக் கவனிக்க வேண்டாமா? அதுதான், அங்கே போயிட்டு வர்றா மம்மி...'' என்று சிரித்துக்கொண்டே சமாளித்தாள் நந்தினி..

''எக்ஸ்க்யூஸ் மி, ஸார்...! நான் இப்படிக் கேட்கிறேனேன்னு கோபிச்சுக்கக் கூடாது..'' என்ற பலமான பீடிகையோடு தொடங்கினாள் அவள்.

''ஸார்! உங்களுக்கு அப்படி ஒண்ணும் வயசாயிடல்லே. உங்க வசதிக்கும் அந்தஸ்துக்கும், எத்தனையோ பெண்கள் உங்களுக்கு இரண்டாம் தாரமாக வரத் தயாராயிருப்பாங்க... நீங்க ஏன் இரண்டாம் கல்யாணம் செஞ்சிக்கக் கூடாது?'' என்று அவள் திடும் என்று கேட்டதும், சிவராமன் திகைத்துப் போய், சோபாவில் நன்றாகச் சாய்ந்து கண்ணை மூடிக்கொண்டான்.

ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக் கொண்டான் சிவராமன்.

''நந்தினி! நான் இந்த இரண்டு குழந்தைகளுக்கு மட்டும்தான் தந்தையாயிருக்க முடியும். இன்னொரு குழந்தைக்குத் தந்தையாகவோ, இன்னொரு பெண்ணுக்குக் கணவனாகவோ நான் இருக்க முடியாது.''

நந்தினிக்கு ஒன்றும் புரியவில்லை.

''என்ன சொல்றீங்க ஸார்?''

''என் மனைவி இறந்த அதே விபத்தில், நான் ஆண்மையை இழந்திட்டேன்; எஸ். ஐ யாம் இம்பொடன்ட் நவ்... எனக்கு இனிமேல் ஒரு மனைவி தேவை இல்லே. ஆனால் இந்தக் குழந்தைகளுக்கு ஒரு மம்மி தேவை. உலகத்திலே எந்தப் பெண்ணும் தாயாக மட்டுமே இருக்க விரும்ப மாட்டாங்க. இல்லையா?''

ஒருநாள் மாலை, நந்தினி பங்களாவுக்குப் போன போது, ஜீவிதாவுக்குக் கடுமையான காய்ச்சல்.

டாக்டர் வந்து, ஊசி போட்டுவிட்டு, மருந்து கொடுத்து, நேரப்படி கொடுக்கச் சொல்லிவிட்டுப் போனார்.

நந்தினி, வீட்டுக்குப் புறப்படும் நேரம் வந்ததும் எழுந்தாள். ஆனால் ஜீவிதா அவளை விடவில்லை.

அவளுடைய சேலைத் தலைப்பைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, ''மம்மி! மம்மி!! நீ இங்கேயே இரு. என் பக்கத்திலேயே இரு... என்னை விட்டுட்டுப் போயிடாதே மம்மி!'' என்று கெஞ்சி அழுதாள்.

''எக்ஸ்க்யூஸ் மி, நந்தினி! நீ போயிட்டா, குழந்தை ரொம்ப ஏங்கிப் போயிடுவா; காய்ச்சலும் அதிகமானாலும் ஆயிடும்... இன்னிக்கு ராத்திரி மட்டும் தயவு செஞ்சு இங்கேயே இவள் கூடவே இருந்திடேன், ப்ளீஸ்... உங்கவீட்டுக்கு நான் ஆள் அனுப்பித் தகவல் சொல்லிடறேன்...'' என்று சிவராமனும் கெஞ்சியபோது, அவளால் மறுக்க முடியவில்லை.

இரவு சாப்பாட்டுக்குப் பிறகு தூங்கப் போன நந்தினியிடம் வந்தான் அவன்:

''எக்ஸ்க்யூஸ் மி நந்தினி! உன்கிட்டே ஒரு பெர்ஸனல் விஷயம் — உன்னைப் பற்றிய விஷயம் — கேட்கணும்னு ரொம்ப நாளாய் நினைச்சுக்கிட்டேயிருக்கேன். ஆனால் சந்தர்ப்பம் கிடைக்கலே. இப்போ கேட்கலாமா?'' என்று அவன் திடுக்கென்று கேட்டதும், நந்தினி திகைத்துப் போனாள்.

அவன் தன்னுடைய 'ரகசியங்களை'யெல்லாம் சொல்லிய பிறகு, அவள் மட்டும் தன் சொந்த வாழ்க்கையைப் பற்றிச் சொல்ல மாட்டேன் என்று மறுக்க முடியுமா?

அவளுடைய மௌனத்தைச் சம்மதமாக எடுத்துக் கொண்டு, தொடர்ந்தான் அவன்.

''நந்தினி! நீ கணவரோட வாழாம, பிறந்தகத்திலே இருக்கிறே என்பது மட்டும்தான்

''குணமுள்ள பெண் ஒருவன் சமூகத்தில் ஒளி வீசுகிறாள். அறிவுடைய பெண் ஒருவனின் கவனத்தைக் கவர்கிறாள். அழகான பெண் ஒருவனின் கலையுணர்வை மயக்குகிறாள். ஆனால், பரிவும், பாசமும் உள்ள பெண்ணோ, அவனையே தனதாக்கிக் கொள்கிறாள்.''

— அரிஸ்டாட்டில்

எனக்குத் தெரியும். ஆனால், நீ அப்படி வாழ வேண்டிய அவசியம் என்னன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?'' என்று கேட்டான் அவன்.

தன் சோக வரலாற்றைச் சொல்வதைத் தவிர வேறு வழியில்லை அவளுக்கு.

மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு, முற்றிலும் சாதாரணமாகச் சலனமில்லாமல் சொல்ல வேண்டும் என்று நினைத்துத் தொடங்கினாலும், அவளால் முடியவில்லை.

குரலிலேயே இழைந்தோடிய அவலமும் விழிகளிலே கசிந்து நின்ற ஈரமும், சிறிது சிறிதாக வெளிப்பட்டு மிகுந்துவிட்டன.

அவளுடைய கதையைக் கேட்டதும், சற்றுமென்மையாகச் சிரித்தான் சிவராமன்.

''ப்பூ! இவ்வளவுதானா? நான் என்னமோ ஏதோன்னு கவலைப்பட்டுக்கிட்டிருந்தேன்! உங்க வாழ்க்கைக்கு ஒரு பத்தாயிரம் ரூபாய் தானே பிரச்னை? ஓ.கே. உனக்கு நான் பத்தாயிரம் ரூபாய் தர்றேன்...'' என்றதும், திகைப்புடன் அவள் குறுக்கிட்டாள்:

''வேண்டாம், ஸார்!''

''நோ... இது ஸார் தர்ற பணம் இல்லே; சிவராமன் தர்றது... உனக்கு நான் ரொம்பக் கடனாளியாயிட்டேன். அதிலே ஒரு பத்தாயிரம் ரூபாயையாவது குறைச்சுக்கிடறேன்... ஓ.கே. குட்நைட்...'' என்று அழுத்தமாகச் சொல்லிவிட்டுச் சென்றான் அவன்.

இரண்டு நாட்கள் கழித்து —

அலுவலகம் வந்ததும், சிவராமன் நந்தினியைத் தன் அறைக்குக் கூப்பிட்டான்.

''நந்தினி! நீ இப்போ உன் ஹஸ்பண்டோடே பேசப் போறே... நாளைக்கு நல்ல முகூர்த்த நாள். அதனாலே நாளைக்கு நான் பத்தாயிரம் ரூபாய் கொண்டு வர்றேன்னு அவர் கிட்டே சொல்றே...'' என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு, போனை எடுத்து, ''ஹலோ, ஆபரேட்டர்! மவுண்ட் ரோடு அருணா கெமிக்கல்ஸ் ஆபீஸிலே யு.டி.ஸி.யாக வேலை பார்க்கிற மிஸ்டர் சுந்தரத்துக்கு கனெக்ஷன் கொடுங்க...'' என்றான் சிவராமன்.

சில விநாடிகளில், போனில் சுந்தரம் வந்ததும், ''இந்தா நந்தினி! பேசு...'' என்று அவள் கையில் போனைக் கொடுத்தான்.

திகைத்துப் போன நந்தினி, என்ன பேசுவது, எப்படிப் பேசுவது என்று புரியாமல் தவித்தாள்.

வெகு நாட்களுக்குப் பிறகு, கணவனின் குரலைக் கேட்டபோது, அவளுடைய இதயம் சிலிர்ப்புடன் படபடத்தது.

''ஹலோ... நான் நந்தினி பேசறேன். ஆமா, உங்க நந்தினிதான் பேசறேன்... நாளைக்கு நான் பத்தாயிரம் ரூபாய் கொண்டு வர்றேன்... அதெல்லாம் நேர்லே விவரமாய்ச் சொல்றேன்... ஆமா — தெய்வம் மாதிரி தான்... சரி, அத்தைகிட்டயும் சொல்லிடுங்க... சரி... சரி...'' என்று பேசி விட்டு போனை வைத்தாள்.

''ஸார்! உங்களுக்கு நான் எப்படி நன்றி சொல்லப் போறேன்னு தெரியலே...'' என்ற நந்தினியின் குரல் தழுதழுத்தது.

''நோ...நோ...ஃபார்மாலிட்டிஸ்..நந்தினி! நான்தான் சொன்னேனே, நான் உனக்குப் பெரிய கடனாளியாயிட்டேன்னு.. இது, என்னுடைய 'ரீ—பேமெண்ட்'தான். எஸ்.. யூ மே கோ...'' என்று சொல்லிவிட்டு, தன் வேலையில் ஆழ்ந்தான் எம். டி.

மனத்தின் பரப்பெல்லாம்; வண்ண வண்ணக் கனவுகள் மலர்ந்து நடமாட, துள்ளிய நடையுடன், எம். டி. அறையிலிருந்து வெளியே வந்த நந்தினியைப் பார்த்து, குரோதமும் வெறுப்பும் பொங்கிய ஒரு ஜோடிக் கண்களை அவள் கவனிக்கவில்லை.

அன்று மாலை —

அலுவலகத்திலிருந்து மகிழ்ச்சி துள்ள வெளியே வந்தான் சுந்தரம்.

''ஹாய் சுந்து...!'' என்ற குரல் கேட்டுத் திரும்பினான் சுந்தரம்.

''டேய் கணேசா...! சௌக்கியமா?''

''ஓ.கே... உன்னைப் பார்க்கணும்னு ரொம்ப நாளாய் நினைச்சுக்கிட்டேயிருக்கிறேன். ஆனால் நேரம் கிடைக்கலே. ஆபீஸில் வேலை முடிஞ்சு, தாம்பரத்துக்கு வீட்டுக்குப் போறதுக்கே நேரமாயிடுது... உன் வொய்ஃப் நந்தினி, இப்போ எங்க ஆபீஸிலேதான் வேலை பார்க்கிறாங்க, தெரியுமோ?''



பிளாஸ்டிக் பாட்டில்களில் குழந்தைகளுக்குப் பால் கொடுத்தால், பிளாஸ்டிக் வாடை அடிக்கிறது. இதனால் குழந்தை முகம் சுளித்துப் பால் குடிக்காமல் இருந்து விடுகிறது. கண்ணாடி பாட்டில்களில் பாலைக் கொடுக்கும் போது கீழே விழுந்து உடைந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இந்தச் சிரமங்களை எல்லாம் போக்க இரண்டு கையாலும் குழந்தை பிடித்துக் கொள்ளும்படி நீளவட்டமான பாட்டிலை நடுவில் ஓட்டையுடன் தயாரித்திருக்கிறது அமெரிக்கக் கம்பெனி ஒன்று! இந்த பாட்டிலுக்கு 'அன்சா' பேபி பாட்டில் என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது.

நன்றி: சொஸைட்டி; தகவல்: உமா.

என்று ஆரம்பித்தான் கணேசன்.

கணேசனுக்கு ஆரம்பத்திலிருந்தே நந்தினி மேல் ஆத்திரம். எம். டி. வடநாட்டுச் சுற்றுப் பயணத்திலிருந்து திரும்பியதும், அவரைப் பார்த்து, அந்த ஆபீஸ் ஸ்டெனோ வேலையை தனது தங்கைக்கு வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று திட்டமிட்டிருந்தான். ஆனால், இடையில் நந்தினி புகுந்து மானேஜர் மூலம் அந்த உத்தியோகத்தைத் தட்டிச் சென்றுவிட்டாள்.

அதற்குப் பிறகு, கணவனைப் பிரிந்து தனியே இருக்கும் அவளுக்கும், எம். டி. க்கும் ஏதாவது 'தொடர்பு' ஏற்பட்டிருக்குமா என்று மோப்பம் பிடிப்பதே, அவனுடைய முக்கிய வேலையாகப் போய்விட்டது.

''தெரியும்... அவளுக்கும்தான், உன்னைத் தெரியுமே? எங்க கல்யாணத்திலே உன்னைப் பார்த்திருக்கிறாளே?'' என்றான் சுந்தரம்.

''ஆனால், என்னைத் தெரிஞ்சவளாகவே காட்டிக்கலே... ஏன், அவங்க எம். டி. யின் 'பெட்.' என்னை மாதிரி ஏழைக் குமாஸ்தாக்களை அவங்க மதிப்பாங்களா?'' என்று விஷம விதையைத் தூவத் தொடங்கினான் நண்பன்.

''சேச்சே! அவள் அப்படிப்பட்டவ இல்லேடா...''

''சுந்து! நீ பழைய நந்தினியைப் பத்திச் சொல்றே! இப்போ இருக்கிறது புது நந்தினி! எம். டி. யோட ரொம்ப நெருக்கமாக இருக்கிற 'கெட்டிக்காரி!'...'' என்று 'ரொம்ப' என்பதற்கு அதிக அழுத்தம் கொடுத்துச் சொன்னான் கணேசன்..

சுந்தரத்தின் முகம் கோபத்தில் சிவந்து இறுகியது.

''சுந்து! என் மேல் கோபப்படாதே! நான் உள்ளதைத்தான் சொல்றேன். என்னை நம்பலேன்னா, எங்க ஆபீஸிலே வேலை பார்க்கிற வேறு ஆட்களை விசாரிச்சுப் பார்...''

''உன் வொய்ஃபும், எம். டி. யும் ஆபீஸிலே ரொம்ப நெருங்கிப் பழகறதோடே நில்லாம, இப்போ தினசரி அவர் பங்களாவுக்குப் போய், குழந்தைகளுக்கு ட்யூஷன் சொல்லிக் குடுக்கிற சாக்கிலே, சந்திச்சுப் பழகறாங்க... சாயந்தர நேரம், குழந்தைகள் கூட இருக்காங்க -- தப்பு ஏதும் நடந்திராதுன்னு நினைச்சா, இப்போ ரெண்டு மூணு நாள் ராத்திரியிலேயும் அங்கேயே உன் வொய்ஃப் தங்கிடறாங்களாம் — பங்களா வாட்ச்மேன் சொன்னான்...'' என்று கடகடவெனச் சொல்லிக் கொண்டே போனான் நண்பன்.

''சுந்து! எல்லாம் பணம் பண்ணுகிற வேலை. சம்பளம் என்கிற பெயரிலே, அவங்களுக்கு நெறையப் பணம் கொடுக்கிறார் எம். டி...'' என்று கணேசன் சொன்னதும், சரக் என்று பொறி தட்டியது சுந்தரத்துக்கு:

''நாளைக்கு, பத்தாயிரம் ரூபாய் என் வீட்டுக்குக் கொண்டு வருவதாகச் சொன்னாளே?''

''அப்படியா? பத்தாயிரம் என்ன, பத்து லட்சம் கூட இப்போ அவங்க கொடுக்க முடியும்! ஒண்ணு செய், சுந்து! இப்பவே அவங்க வீட்டுக்குப் போய், அந்தப் பத்தாயிரம் எப்படி வந்தது, யார் கொடுத்தாங்கன்னு கேள்... உண்மை வெளிவரட்டும்!'' என்று அவனை முடுக்கிவிட்டான் கணேசன்.

இரவு, பங்களாவிலிருந்து வந்து, நந்தினி உள்ளே உடைமாற்றிக் கொண்டிருக்கும் போது, சுந்தரம் வேகமாக வீட்டுக்குள் நுழைந்தான்.

மாப்பிள்ளையைக் கண்டதும், மாமியாரும் மச்சினர்களும் மகிழ்ச்சியில் திக்குமுக்காடி வரவேற்றார்கள்.

''வாங்க... உட்காருங்க...''

''நான் உட்கார்றதுக்கு வரலே... உடனே நந்தினியைப் பார்த்து ஒண்ணு கேட்கணும்...'' என்று குமுறினான் சுந்தரம்.

''உக்காருங்க மாப்பிள்ளே! காப்பி சாப்பிடுங்க...'' என்று சற்றுக் குறைவான 'லொக்'களுக்கிடையே சொல்லி முடித்த வள்ளி, அதே மூச்சில் உள்ளே திரும்பி வந்து, ''நந்து! நந்து!'' இங்கே வா, மாப்பிள்ளை வந்திருக்கார்.'' என்று குரல் கொடுத்தாள்.

பரவசத்துடன் துள்ளி ஓடிவந்தாள் நந்தினி. முகமெல்லாம் மகிழ்ச்சி பொங்கிப்

வடாம் ஒரு வருடத்திற்கு மேல் வைத்துக் கொள்பவர்கள் பூச்சி வந்து, உளுத்து, உதிர்ந்து போவதைக் காணலாம். அதைத் தவிர்க்க மிளகாய் வற்றலை (100 கிராம்) அந்த வடாமுடன் கலந்து டப்பிகளில் அள்ளி வைத்தால்வீணாகாமல் இருக்கும்.

— எம். பிரேமா.

இஞ்சி, பச்சை மிளகாய், உப்பு, தேங்காய் இவற்றுடன் சிறிது (பச்சை) கடுகையும் சேர்த்து அரைத்து, அதிகம் புளிக்காத தயிரில் கலக்கி கடுகு, கறிவேப்பிலை, பெருங்காயம் தாளித்து விடவும். (குழம்பை அடுப்பில் வைக்க வேண்டாம்) இந்த மோர்க் குழம்பு மாறுதலான மணமும் சுவையுடனும் இருக்கும்.

— பாலா.

பிரவகிக்க, ''வாங்க... உட்காருங்க...'' என்று சிரித்தாள்.

''நந்தினி! எனக்கு ஒரு விஷயம் தெரிஞ்சாகணும்!'' என்ற சுந்தரத்தின் முகம் கோபத்தில் சிவந்து கனிந்தது.

துடிக்கும் அவனது உதடுகளும், தெறிக்கும் கனல் பொங்கும் கண்களும், அவனுக்குள்ளே வெடித்துக் கொண்டிருக்கும் எரிமலையை வெளிப்படுத்தின.

''நாளைக்குக்கொண்டுவருவதாகச்சொன்னியே, அந்தப் பத்தாயிரம் ரூபாய் உனக்கு எப்படிக் கிடைத்தது? யார் கொடுத்தது?!'' என்று அலறினான் அவன்.

''எங்க எம். டி. மிஸ்டர் சிவராமன்தான், என் கதையை — நம் கதையைக் கேட்டு இரக்கப்பட்டுக் கொடுத்தார். ஏன், அதற்கென்ன?'' என்று இயல்பாகச் சொன்னாள் நந்தினி.

''ஓ! இரக்கப்பட்டுக் கொடுத்தாரா? ஒவ்வொரு ஆபீஸிலேயும், ஸ்டெனோக்களுக்கும், கிளார்க்குகளுக்கும் பணக்கஷ்டம் இருக்குது தான். எந்த எம். டி. அவங்களுக்குப் பத்தாயிரம் ரூபாயைத் தூக்கிக் கொடுக்கிறான்? நீ வெறும் ஸ்டெனோவாக மட்டும் இருந்தா, உங்க எம். டி. பணம் கொடுத்திருக்க மாட்டான் —'' என்று அவன் சொல்லும்போதே, அவனுடைய எண்ணத்தைப் புரிந்து கொண்டு விட்டாள் நந்தினி.

அவனுடைய எந்த மறுப்புக்கும் செவி சாய்க்காமல் வாய்க்கு வந்தபடி கத்திவிட்டு வெளியேறினான்.

## 11

மறுநாள் காலை.

எம். டி. சிவராமன், அலுவலகம் வந்ததும், நந்தினியைக் கூப்பிட்டு, ஒரு கவரை நீட்டினான்:

''குட்மார்னிங்! மிஸஸ் நந்தினி சுந்தரம்! இதில் பத்தாயிரம் ரூபாய் இருக்கு. நீ இப்பவே போய், உங்க கணவரைப் பார்த்துப் பணத்தைக் கொடுக்கிறே... இன்னிக்கு உனக்கு ஸ்பெஷல் லீவ்...'' என்று சிரித்தவன், நந்தினியின் சுருங்கிய முகத்தைக் கண்டு, சட்டென்று வாயை மூடிக் கொண்டான்.

''இந்தப்பணம்வேண்டாம்ஸார்! எல்லாத்தையும் சாயந்தரம் வீட்டிலே விவரமாச் சொல்றேன்...'' என்று வெளியே போய்விட்டாள் நந்தினி.

அன்றுமாலை, வழக்கத்துக்குச் சற்றுமுன்னதாகவே பங்களாவுக்குப் போய் நந்தினிக்காகக் காத்திருந்தான் சிவராமன். அவள் வந்ததும்,

''நந்தினி! என்னம்மா நடந்தது? கொஞ்சம் விவரமாய்ச் சொல்லேன்; ப்ளீஸ்!'' என்று துடித்தான் சிவராமன்.

கண்ணீருக்கும், விம்மலுக்கும் இடையே, நடந்த நிகழ்ச்சிகளைச் சொன்னாள் அவள்.

''என்ன? உன்னையும் என்னையும் சம்பந்தப்படுத்தி, சந்தேகப்பட்டானா உன் புருஷன்? ஓ. கே... இதில் என்ன பிரச்னை இருக்கு? சுலபமாய் அவனுடைய சந்தேகத்தைத் தீர்த்திருக்கலாமே? எங்க எம். டி. ஒரு இம்பொடண்ட். அவராலே எந்தப் பெண்ணையும் கெடுக்க முடியாதுன்னு நீ சொல்லியிருக்கலாமே, நந்தினி? அதுக்கு நானும் நேரில் சாட்சி சொல்லியிருப்பேனே?'' என்றான் அவன்.

அவனுடைய கம்பீர சுடர்விடும் ஒளி முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள் நந்தினி.

''நோ... நீங்க இம்பொடண்டாயிருந்தாலும் ஆண் மகன். ஜெண்டில்மேன் — ஆனால் அவர் ஆண்மையிருந்தாலும், இம்பொடண்ட்தான். தாய்சொல்றதையெல்லாம் கேட்டு, தாலிகட்டியமனைவியையே, கேவலம் பணத்துக்காக, விரட்டியடித்த அந்தக் கோழைக்காக, ஒரு ஜெண்டில்மேனை, இம்பொடண்ட்னு பகிரங்கமாய்ச் சொல்லிக் கேவலப்படுத்த நான் தயாராயில்லே, ஸார்! அப்படியே நான், உங்களைப் பத்திச் சொல்லியிருந்தாலும், 'அவர் இம்பொடண்ட்'னு உனக்கு எப்படித் தெரிஞ்சுது. எப்போ தெரிஞ்சுது'ன்னு துருவிக் கேட்டிருப்பார்!'' என்று புருவத்தை நெறித்தாள் அவள்.

''ஆனைப்பட்ட ராமபிரானே, சீதையைச் சந்தேகப்படலியா? அக்கினிப் பிரவேசம் செஞ்சு தானே, சீதை தன் கற்பை நிரூபிச்சா?''

''அந்த ராமபிரான், அகல்யையே மன்னிச்ச உத்தமன்; அந்தவீரனுக்காக அக்கினிப் பிரவேசம் என்ன, உயிர்த் தியாகமே செய்யலாம். ஆனால் இந்தக் கோழைக்காக? என்னை உங்க வைப்பாட்டின்னு அத்தனை பேர் முன்னாலே சொன்னானே, இப்போ நான் உங்க பெண்டாட்டின்னு நாலு பேர் முன்னிலையில் தாலி கட்டி, என்னை ஏத்துக்குங்க, ஸார்!'' என்று குமுறியழுதாள் நந்தினி.

அவனுடைய உணர்ச்சிப் பிரளயத்தைப் புரிந்து கொண்டு, சில நிமிஷங்கள் அவனை

எலுமிச்சைப் பழங்கள் (அசட்டையினால்) வாடி வதங்கி விட்டதற்காக, உங்கள் சந்திர முகமும் வாடிவிட வேண்டுமா? வாட விடாதீர்கள். நிதானமாக ஒரு பாத்திரத்தில் ஒரு கப் அளவு தண்ணீரைக் கொதிக்கவிட்டுப் பின் இறக்கி, அதில் வாடிய பழங்களைப் போட்டு, 10 நிமிடம் ஊற விட்டு, பின் சாறு பிழியுங்கள். 'அடேயப்பா! எவ்வளவு சாறு!' என்று மலைத்துப் போவீர்கள்.

— திருமதி தேவனாதன்.

# ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ 500– முதலீடு* செய்யுங்கள்!

1. ஒவ்வொரு மாதமும் அமுதசுரபி மாத இதழ்கள் இல்லம் தேடி வரும்.
2. ஒவ்வொரு ஆண்டும் தீபாவளி மலர் தீபாவளிக்கு முன்னால் வந்தடையும்.
3. ஒவ்வொரு ஆண்டும் வசந்த மலர் தமிழ் புத்தாண்டு அன்று உங்களைத் தேடி வரும்.

(மலர்கள் பதிவுத் தபாலில் எங்கள் செலவிலேயே அனுப்பப்படும்.)

நீங்கள் செய்த டெபாசிட் தொகையை (ரூ. 500) எப்போது வேண்டுமானாலும் திரும்பப் பெறலாம்.

**நீங்கள் செய்ய வேண்டியது:**

ஸ்ரீராம் டிரஸ்ட் பெயருக்கு ரூ. 500/- A/C Payee டிராப்டாக எடுத்து அனுப்ப வேண்டும்.

**சிறப்பு அன்பளிப்பு:**

நீங்கள் சேர்ந்தவுடன் சிறப்பு அன்பளிப்பாக ஒவ்வொரு குடும்பத்தினரும் போற்றிப் பாதுகாக்கக்கூடிய காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் அருளிய "அமுத மொழிகள்" புத்தகமும், பரிசு பெற்ற சிறந்த 5 குறுநாவல்கள் அடங்கிய புத்தகமும் உங்களுக்கு (எங்கள் செலவில்) அனுப்பப்படும்.









*இத்திட்டத்தின் கீழ் நீங்கள் முதலீடு செய்யும் தொகை இந்திய ரிசர்வ் வங்கி சட்டம் 45 J.P.P பிரிவின் கீழ் விசேஷ விலக்குக்குரியது.




திட்ட விவரங்களுக்கும், விண்ணப்ப பாரங்களுக்கும்

## ஸ்ரீராம் டிரஸ்ட்

தபால் பை எண். 5043
145, லிங்கிச் செட்டி தெரு,
சென்னை 600 001
தொலைபேசி எண்: 28545

ரெசிடெண்ட் மேனேஜர்கள் : ● கோயம்புத்தூர் : D. மோகன்தாஸ், S/o A. தனபால், போன் : 34776, C. ராமச்சந்திரன், போன் : 37455 ● திருச்சி : G. சங்கர் ராவ், போன் : 24950. ● மதுரை : S.K. நடராஜன், போன் : 43179. ● சேலம் : T.V. ராமச்சந்திரன், ஸ்ரீ அன்னை ..., 1, சின்னப்பா காம்ப்ளெக்ஸ், ஓமலூர் ரோடு. ● பாண்டிச்சேரி : R.V. ..., 50, M.G. ரோடு. ● விசாகப்பட்டினம் : A.S. ஆச்சார்யலு, போன் : 63871. ● தூத்துக்குடி : K. ..., போன் : 22577. ● நெய்வேலி : R. சந்திரசேகரன் D-37, T. ... ● நாகர்கோவில் : R.P. ..., 46, ... ● காஞ்சிபுரம் : B. ... போன் : 2787. ● நாகப்பட்டினம் : P.R. ..., போன் : 730. ● புதுக்கோட்டை : A.R. ..., போன் : 2971. ● கடலூர் : திருப்பதி ... போன் : 46.

ADWAVE/ST/3266

அழ விட்டுவிட்டான் சிவராமன்.

"நந்தினி! நீ அறிவுபூர்வமான பொண்ணு; உணர்ச்சிவசப்படாம, சிந்திக்கணும்... ஆற்றிலே வெள்ளம் போற போது, காத்திருந்து, நல்ல படகிலேதான் கடக்கணும். அவசரப்பட்டு ஓட்டைப் படகிலே ஏறிடக் கூடாதும்மா! நந்தினி! நான் வாழ்ந்து முடிந்தவன்; நீ வாழ வேண்டிய பொண்ணு..."

"ஸார்! நீங்க சொல்ற தாம்பத்திய வாழ்க்கை — அந்த ஒன்றிரண்டு நிமிஷங்களின் சுகங்களை — நான் அனுபவிச்சிட்டேன், ஸார்! இனிமேல் எனக்கு அதெல்லாம் வேண்டாம்... பொய்மையான உடல் சங்கமங்களை விட, சத்தியமான ஆத்ம சங்கமங்களுக்காகத்தான் நான் இப்போ ஏங்குகிறேன்... மனைவி ஸ்தானத்துக்கு அடுத்துக் கிடைக்க வேண்டிய தாய் ஸ்தானம் எனக்குத் தேவை... நீங்க சொன்னீங்களே... என் குழந்தைகளுக்கு ஒரு தாய்தான் வேணும்னு — இதோ, நான் இருக்கிறேன்."

"நந்தினி! அவசரப்படாதே... நல்லா யோசிச்சுப் பாரு!"

"ராத்திரி பூரா, நல்லா யோசிச்சுத்தான் ஸார், இந்த முடிவுக்கு வந்தேன். இனிமேல் நான் பாஸ்கருக்கும் ஜீவிதாவுக்கும் அன்னையாக இங்கேயே இருக்க முடிவு செஞ்சிட்டேன்... நீங்க விரும்பினால் — என்னை உங்க மனைவியா ஏத்துக்குங்க. 'நந்தினி கல்யாணமாகாததுக்கிரி இல்லே; ஒரு ஜென்டில்மேனின் மனைவி' என்கிற அங்கீகாரத்தை எனக்குக் கொடுங்க. இல்லேன்னு, இங்கே சம்பளம் வாங்குகிற ஆயாவாக இருந்திடறேன்..."

அவலத்தையும், ஆற்றாமையையும் வென்று, உறுதியாகவும், தெளிவாகவும் ஒலித்த அவளுடைய பேச்சு, அவனுடைய நெஞ்சுக்குள் நெடுந்தூரம் சென்று உலுக்கியது.

நெடுநேரம் யோசித்தவன், "ஆல்ரைட் நந்து... நீ சட்டப்படி உன் கணவனிடம் விவாகரத்து வாங்க ஏற்பாடு செய்கிறேன். அப்புறம் நம் கல்யாணம்..." என்றான் பரிவோடு.

ஓடிவந்த ஜீவிதாவை முழு தாயின் அன்போடு அரவணைத்துக் கொண்டாள் நந்தினி.

(முற்றும்)

# சடுகுடு... சடுகுடு... சடுகுடு...



டென்னிஸ் விளையாட்டில் விஜய்ராஜ் சகோதரர்கள் இருப்பது போல் கபாடி (சடுகுடு) விளையாட்டில் இரு சகோதரிகள் (அக்கா — தங்கை) மதுரையில் உள்ளார்கள். பி. விஜயா (வயது 17), பி. அமுதா (வயது 16) இருவரும் மதுரை சென்ட்ரல் பள்ளியின் மாணவிகள். அகில இந்திய சென்ட்ரல் ஸ்கூல் கபாடி போட்டியில் விஜயா 1984—ல் கலந்து கொண்டு தங்கப் பதக்கம் பெற்றார். 1985—ல் விசாகப்பட்டினத்தில் நடைபெற்ற போட்டியில் இருவரும் தங்கப் பதக்கம் பெற்றனர். 86—ல் குஜராத்தில் உள்ள ஜாம் நகரில் நடந்த போட்டியில் விஜயா தங்கப் பதக்கம் பெற்றார்.

"கபாடி இந்தியாவில் மட்டுமே புகழ் பெற்றுள்ளது. உலக அளவில் பரவுமானால் எங்கள் திறமையை அங்கும் நிரூபிப்போம்" என்கிறார்கள் இருவரும்.

— மதுரை ராஜசேகரன்

# இதற்கு என்ன செய்வது?

கெஜலக்ஷ்மி, மைலாப்பூர்.

என் கணவர் தன் நெருங்கிய ஆபீஸ் சிநேகிதர் ரொம்ப கெஞ்சுகிறாரே என்று அயல்நாட்டில் இருக்கும் பெண்ணின் வீட்டை அவளுக்கு டைப் ரைட்டிங் இன்ஸ்டிடியூட் வைக்க வாடகைக்கு விட்டு விட்டார். அவள் அதில் ஒரு போர்ஷனில் குடி வைத்து விட்டாள். கேட்டால், 'என் இஷ்டம்' என்கிறாள்.

என் பெண் மூன்று மாதத்தில் இந்தியா வரப் போகிறாள். அவளும் அவள் கணவரும்குழந்தையுமிருக்கவீட்டைக்காலிபண்ணி கொடு என்றால், கெஞ்சித்துக் கூட மனிதாபிமானமில்லாமல் "முடியாது! உங்களால் ஆனதைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்கிறாள். என்ன பண்ணலாம்?

உங்களுக்குச் சாதகமாக இரண்டு விஷயங்கள் உள்ளன. 1. நீங்கள் டைப் ரைட்டிங் இன்ஸ்டிடியூட்டிற்காக வாடகைக்கு விட்டதை, அவர் 'உள் வாடகை'க்கு விட்டிருக்கிறார். 2. உங்கள் மகள் தன் சொந்த உபயோகத்திற்காகவே மீண்டும் வீட்டைக் கேட்கிறார்.

இவ்விரண்டின் அடிப்படையில் உங்கள் பெண்ணிடம் இருந்து 'பவர் ஆஃப் அட்டர்னி' வாங்கிக் கொண்டு நீங்கள் கேஸ் தொடரலாம். ஆனால் நடைமுறையில் நீங்கள் எதிர்பார்க்கும் விரைவில் கேஸ் முடியாது. எனவே அலுவலக சினேகிதர் என்பதால் அலுவலகத்திலுள்ள நான்கு பேரை வைத்துக் கொண்டு நல்ல தனமாக அவர்களை வெளியேற்றுவது நல்லது.

...............

என் மனத்தில் ஒருவித நிம்மதியில்லை. வெளியூரிலிருந்து இங்கு என் உறவினர் வீட்டில் தங்கி வேலை பார்க்கிறேன். ஒரு பிரைவேட் கம்பெனியில் எனக்கு ஒரு நல்ல சிநேகிதியும் இல்லை. என் மனத்தில் உள்ளதை மனம் விட்டுப் பேச யாருமே இல்லை. எந்த ஒரு விஷயத்தையும் மனத்தில் போட்டு அமுக்கி அமுக்கி மனமே வெடித்துவிடும் போல உள்ளது. என் மீது அன்பு காட்ட, பரிவுடன் பேச ஒரு ஜீவன் இல்லையே என்று எண்ணும்போதுஎனக்குத்துன்பமேஅதிகரிக்கிறது. இதனால் என் மனநிலை பாதிக்கப்பட்டு என்னையறியாமல் நான் ஏதாவது செய்து விடுவேனோஎன்று கூடப் பயமாய் உள்ளது.

உங்களிடம் தாழ்வு மனப்பான்மையும், ஒதுங்கியிருக்கும் குணமும் அதிகம் உள்ளது. காலையில் எழுந்தவுடன், ஒரு பிரார்த்தனை போல,

"நான் இன்று சந்தோஷமாக இருப்பேன். எல்லோரிடமும் மகிழ்ச்சியுடன் பேசுவேன். மற்றவர்களுக்கு உபயோகமாக ஒரு காரியம் செய்வேன்" எனத் திரும்பத் திரும்ப கூறிக் கொள்ளுங்கள். இதை 'ஆட்டோ சஜஷன்' என்று சொல்வார்கள். உங்களைப் பற்றியே நினைத்துக் கொண்டிராமல் மற்றவர்களை நாம் சந்தோஷப்படுத்துகிறோமா என கவனியுங்கள். வாழ்க்கையில் ஏதேனும் ஒரு குறிக்கோளை ஏற்படுத்திக் கொண்டு அதற்காக வேலை செய்ய ஆரம்பித்தீர்களானால் இந்தப் பிரச்னைகள் இருக்காது.

..................., சென்னை.

என் சகோதரிக்கு 1977 ஆம் ஆண்டு திருமணம் நடந்தது. இரண்டு பெண் குழந்தைகள் பெற்றாள். அவள் கணவர் 75% தனியார் மூலதனமும் 25% அரசாங்க மூலதனமும் கொண்ட ஒரு கம்பெனியில் பி. ஏ. வாகப்பணியாற்றிவருகிறார்.எனதுசகோதரியும் அவள் கணவரும் சேர்ந்து வாழ்ந்த காலம் 1981 வரைதான். எனது சகோதரியின் கணவர்இரண்டாவதுதிருமணம்செய்து கொள்ள என் சகோதரி சம்மதம் தர வேண்டும் என்கிறார். இரண்டாவது குழந்தையைப் பெற்று எடுத்து வந்த நாற்பது நாட்களுக்குள் மீண்டும் அவர் இரண்டாவது திருமணத்திற்கு என் சகோதரியின் சம்மதத்தைக் கேட்க ஆரம்பித்து, அவருடன்வாழ்க்கை நடத்த முடியாதபடி, அடித்து, உதைத்து, சீர் சாமான்களையும், அவளுடைய சுய சம்பாத்தியத்தில் வாங்கிய பொருட்கள் முதலியவற்றைப் பிடுங்கிக் கொண்டு அவளை வீட்டை விட்டு வெளியே அனுப்பி விட்டார்.. அவரே கோர்ட்டில் விவாகரத்தும் கோரியுள்ளார். கோர்ட்டில் விவாகரத்து கேஸ் போட்டவுடன் என் சகோதரியின் கணவரும் அவருடைய பெற்றோர்களும் மற்றவர்களின் உதவியுடன் எவ்வித ஆதாரமும் இன்றி, வெளியே தெரியாமல் அவருடைய வீட்டில் இரண்டாவது திருமணம் செய்து கொண்டு, குடும்பத்

துடன் சென்னையில் (இரண்டாவது மனைவியுடன்) வாழ்ந்து வருகிறார். எனது சகோதரிக்கு நியாயமும், நீதியும் பெற என்ன செய்ய வேண்டும்?

கணவன், மனைவியிடம் இரண்டாம் திருமணத்திற்குச் சம்மதம் கேட்பது என்பது சட்டப்படி செல்லுபடியானது அல்ல எனப் பலமுறை இதே பகுதியில் கூறியிருக்கிறேன். விவாகரத்து, அல்லது மரணம் தவிர வேறெதுவும் சட்டப்படி தம்பதிகளைப் பிரிக்காது.

உங்கள் சகோதரியின் கணவரின் இரண்டாவது திருமணத்திற்கு ஆதாரம் இல்லை என்றீர்கள். அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்திருந்தால் பிறப்புச் சான்றிதழில் தந்தை பெயர் குறிப்பிட்டிருக்குமே. அதைக் கொண்டு இரண்டாம் திருமணத்தை நிரூபிக்கலாம். நீதிமன்றத்தில் வழக்கில் வாய்தா வாங்கிக் கொண்டே இருக்கிறார்கள் என்கிறீர்கள். ஏனென்ற காரணத்தை உங்கள் வழக்கறிஞரிடம் கேளுங்கள். இரண்டாவது திருமணம் நிரூபிக்கப்படுமானால் நீதிமன்றம் உங்கள் சகோதரி, குழந்தைகளுக்குத் தகுந்த நியாயத்தை வழங்கும்.

...............

எனது அம்மாவுடன் பிறந்தது இருவர் — ஒரு தங்கை; ஒரு தம்பி. என் அம்மாவின் தம்பி குடும்பச் சொத்துக்களை, தன் சகோதரிகளின் ஒப்புதலுடன் தன் பெயருக்கு மாற்றிக் கொண்டுள்ளார். பின்னால் சொத்தைப் பிரித்துக் கொள்ளலாம் என உறுதி கூறி உள்ளார்.

பின்னால் இவர் எங்களை ஏமாற்ற முடியுமா? பின்னால் இவர் சொத்துக்களைப் பிரித்துத் தர மாட்டேன் எனக் கூறினால் நாங்கள் சட்டப்படி என்ன செய்யலாம்?

1956 க்குப் பின் இறந்தவர்களின் சொத்துக்களில் பெண்களுக்குச் சம பங்கு உண்டு என கூறி உள்ளீர்கள். இது முஸ்லிம் பெண்களுக்கும் பொருந்துமா?

என் அம்மாவின் அம்மாவும் உயிருடன் இருக்கின்றார். சொத்தில் அவருக்கும் பங்கு உண்டா? சொத்து எந்த விகிதத்தில் பிரிக்கப்பட வேண்டும்?

வீட்டு வரி என் மாமா தன் பெயரில் கட்டி வருகிறார். இது அவருக்கு எந்த விதத்திலாவது சாதகமாகுமா? தங்களின் விரிவான பதிலை எதிர்பார்க்கிறேன்.

1956 க்குப் பின் பெண்களுக்குச் சொத்தில் சமவுரிமை என்பது இந்து வாரிசுரிமைச் சட்டத்தில்தான். முஸ்லிம்களுக்குப் பொருந்தாது. தவிரவும் உங்கள் தாயாரே தன்னுடைய சகோதரனுக்கு மனமுவந்து எழுதிக் கொடுத்த பிறகு என்ன செய்வது? அவரே தார்மீக அடிப்படையில் தந்தால்தான் உண்டு.

ஜி. ஜோஸ்பின், சென்னை — 41.

ஒரு கிறிஸ்துவப் பெண் திருமணமாகி

ஒன்பது வருடத்தில் நோய்வாய்ப்பட்டு இறந்து விடுகிறாள். அவளுக்குக் குழந்தைகள் இல்லை. அவளது கணவரும் மறுமணம் செய்து கொண்டார். இப்போது அவளது நகைகள், சீர்கள் (பெற்றோர் செய்து போட்டது) கணவரைச் சேருமா? அல்லது பெற்றோரைச் சேருமா? அல்லது இருவருக்குமே சம பங்கா? விளக்கம் தாருங்கள்.

கிறிஸ்துவ வாரிசுரிமைச் சட்டப்படி மணமான பெண்ணின் சீதனங்கள் அவளுடைய கணவருக்கும் குழந்தைகளுக்குமே சேரும். அதிலும் திருமணம் முடிந்து ஒன்பது வருடங்கள் கழித்து அந்தப் பெண் இறந்துள்ளதால் பெற்றோர்களுக்கு அதில் எந்த உரிமையும் வராது.

..........

நாங்கள் சேலம் மாவட்டத்தில் ஆட்டையாம்பட்டி கிராமத்தில் வசித்து வருகிறோம். கணவன் — மனைவி இருவரும் இடைநிலை ஆசிரியர்கள். எங்களுக்கு ரூ. 25,000 பெறுமானமுள்ள வீடு உள்ளது. மற்றபடி சொத்து என்று சொல்லக் கூடிய அளவிற்கு வேறு எதுவும் இல்லை. எங்கள் ஆறு வயது மகன் போன வருடம் இறந்து விட்டான். காரணம் 'சிரோஸிஸ் லிவர்' என்று கூறிவிட்டார்கள். உறவு முறையில் திருமணம் செய்தால் இம்மாதிரி நோய் உண்டாகும் என்று டாக்டர்கள் கூறி விட்டார்கள். என் கணவர் என்னிடமிருந்த இருபது பவுன் நகையையும் விற்று விசைத்தறி போட்டார். நாங்கள் மகளுக்காக ஆஸ்பத்திரியில் இருந்ததால் அதைச் சரிவர கவனிக்க முடியாமல் அதில் வேலை செய்பவர்கள் எங்களை ஏமாற்றி விட்டார்கள். குழந்தையின் செலவிற்கு ரூபாய் முப்பதாயிரம் கடன் வாங்கி அதாவது 100 க்கு 4 ரூபாய் வட்டிவிதம் வர்ங்கிச் செலவு செய்து விட்டோம்.

என் கணவருடைய சகோதரியுடன் கூட்டாக (ரூ. 15,000) போட்டுக் கோழிப் பண்ணை வைத்தார். அதையும் அவர் அக்கா எல்லாம் வாய்க் கணக்குத்தானே, நீ உண்மை சொல்லுகிறாயோ, பொய் பேசுகிறாயோ யார் கண்டது? என்று நஷ்டத்தை ஏற்க மறுத்து விட்டார். எனவே எல்லாவற்றிலும் நஷ்டம், துரதிர்ஷ்டம். எங்களிடம் மிஞ்சி இருப்பது வீடும், எங்கள் உத்தியோகமும்தான். இந்த வருமானத்தைக் கொண்டு எங்களால் கடன் கட்ட முடியவில்லை. வட்டி கட்டவே சரியாக உள்ளது. இந்த நிலையில் என்ன செய்வது என்றே தெரியவில்லை. இதற்கு ஒரு வழி சொல்லுங்கள்.

நீங்கள் இருவருமே மற்றவர்களுக்குப் பாடம் சொல்லித் தரும் ஆசிரியர்கள். நீங்களே மனத்தைத் தளர விடலாமா? உங்களுக்கு மகனும் இருக்கிறான். அவன் எதிர் காலத்தைக் கருதியாவது வாழ்க்கையில் தென்பு கொள்ளுங்கள். அரசாங்கக் கடன் போன்றவற்றை வாங்கிக் கடனை அடைக்க முயலுங்கள்.

— டி. ஆர். ரமேஷ்.

2



1



1 ஒவ்வோர் ஆண்டும் திருவையாற்றில் ஜனவரி மாதம் இசை வித்வான்களின் இசைக் கச்சேரிகள் நடக்கும். இதை எதற்கு நடத்துகிறார்கள்? திருவையாற்றில் கச்சேரிகள் எந்த இடத்தில் நடக்கின்றன?

2 தமிழக முதல்வர், தமிழக கவர்னர் ஆகிய இருவரும் எந்த நாட்டுப் பிரத



3

# சொல்லுங்கள் பார்க்கலாம்

4



மரை இங்கு வரவேற்கிறார்கள்?

3 யார் இந்தப் பெண்மணி? அமைச்சர் கே. ஏ. கிருஷ்ணசாமியிடமிருந்து எதற்காகப் பரிசு பெறுகிறார்?

4 சிறந்த சமூக சேவகி இவர். இவருக்கு அண்மையில் பத்மஸ்ரீ பட்டத்தைக் கொடுத்து மத்திய அரசு கௌரவித்தது. தமிழகத்தைச் சேர்ந்த இவரின் பெயரென்ன?

5 மத்திய அமைச்சர்கள் அஜீத் பாஞ்சா, ப. சிதம்பரம், எம். அருணாசலம், தமிழக அமைச்சர் வி. வி. சுவாமிநாதன், நடிகை ரேகா ஆகியோர் இருக்கும் இந்தப் படம் உங்களுக்கு எதை ஞாபகப்படுத்துகிறது? பக்கத்திலிருக்கும் வரைபடத்திற்கும் சம்பந்தமுண்டு.

6 டைரக்டர் சத்யஜித் ரே குத்து விளக்கு ஏற்ற நடிகை ஜெயப்ரதாவும், மத்திய அமைச்சர் வஸந்த் சாத்தேயும் அருகில் இருப்பதைக் காண்கிறீர்கள். இது என்ன விழா?

7 சென்ற ஆண்டு இவர் இயக்கிய திரைப் படத்திற்கு மூன்று விருதுகள் அகில இந்திய அளவில் கிடைத்தன. இவ்வாண்டு இவருக்கு பத்மஸ்ரீ விருது கிடைத்துள்ளது. இவரை யாரென்று தெரிகிறதா?

8 பாகிஸ்தான் இந்திய எல்லையில் பதற்ற நிலை இருந்தது தெரிந்த விஷயம். இந்தியாவிலும் பாகிஸ்தானும் பரஸ்பரம் ராணுவத் தாக்குதலில் ஈடுபடுவதில்லை என" எல்லையில் நிறுத்தப்பட்டுள்ள படைகளை வாபஸ் பெறுவது குறித்து டில்லியில் ஐந்து நாட்களாக நடந்த பேச்சுக்களில் உடன்பாட்டிற்கு வந்தன. இந்த உடன்பாட்டில் கையெழுத்து இட்டவர்கள் யார்?

9. துப்பாக்கிகளை ஏந்தி நிற்கும் இந்தப் பெண்மணிகளை யாரென்று தெரிகிறதா?

**விடைகள் :**

1 சத்குரு தியாகராஜர் நினைவாக இது நடத்தப்படுகின்றது. தியாகராஜர் சமாதியில் அஞ்சலி செலுத்தும் விதமாகக் கச்சேரிகள் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும்.

2 டென்மார்க் பிரதமர் சென்னைக்கு விஜயம் செய்த போது வரவேற்ற காட்சி. டென்மார்க் பிரதமர் பெயர் பால் ஷுல்டர்.

3 85 — 86 ஆம் ஆண்டில் வெளிநாட்டிற்குச் சிறந்த தோல் பொருட்களை ஏற்றுமதி செய்ததற்காக, மத்திய கிழக்கு ஷிப்பிங் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் திருமதி ரீடாசிங் பரிசு பெறுகிறார்.

4 ஜெயா அருணாசலம்.

5 சென்னை — கொடைக்கானல் தொலைக்காட்சி நிலையங்கள் இடையே நுண்ணலை இணைப்பு விழாவை இது ஞாபகப்படுத்துகின்றது. தென் மாவட்டங்களுக்குத் தொலைக்காட்சி (சென்னை நிலைய நிகழ்ச்சிகள்) நிகழ்ச்சிகள் தெரியும் என்பதை வரைபடம் காட்டுகிறது.

6 11 வது தேசிய திரைப்பட விழா டெல்லியில் நடைபெற்றது. இந்த விழா துவக்க நிகழ்ச்சியைத்தான் படத்தில் காண்கிறீர்கள்.

7 கே. பாலசந்தர்.

8 இந்த உடன்பாட்டில் இந்தியாவின் சார்பில் வெளி விவகாரச் செயலர் கான்சால்வஸ்ஸும், பாகிஸ்தான் சார்பில் அந்நாட்டு வெளி விவகாரச் செயலர் அப்துல் சத்தாரும் கையெழுத்திட்டார்கள்.

9 77 இளம் பெண்கள் முதன் முதலாக மத்திய ரிசர்வ் போலீஸ் ஆகியிருக்கிறார்கள். மத்திய ரிசர்வ் போலீஸ் பட்டாலியனில் பெண்ணைச் சேர்த்துக் கொள்ளலாம் என்று 1986 ஆம் ஆண்டு இந்திய அரசு முடிவு செய்தது குறிப்பிடத்தக்கது.

தொகுப்பு: **தாம்பிரவருணி**

# டாக்டர் பதில்கள்

சாந்தா, — கிருஷ்ணகிரி.

எனக்குத் திருமணமாகி ஒன்றரை வருடம் ஆகிறது. நான் மிகவும் குள்ளம். கறுப்பு. என்னுடைய முகத்தில் அதிகமான பருக்கள் வருகின்றன. குமாரான நிறம் உடைய நான் மிகவும் கறுப்பாகி உள்ளேன். மூக்கின் மேலும் தாடையின் மேலும் கறுப்பாகப் பட்டையாக உள்ளது. என்ன மருந்து போடலாம்?

முகப்பருக்கள் என்பது தோலிலுள்ள எண்ணெய்ச் சுரப்பிகள் தோலின் மேல் பாகத்தில் திறக்கும் இடங்கள் அடைபடுவதால் ஏற்படுகின்றன. உணவு, ஹார்மோன்கள், உணர்ச்சி வசப்படுதல் இவற்றாலும் முகப்பருக்கள் ஏற்படும். சாக்லேட், முந்திரி, பாதாம் பருப்பு போன்றவைகளைத் தவிர்க்க வேண்டும். தழும்புகளைக் குறைப்பதும் மேலும் பருக்கள் வராமல் தடுப்பதும்தான் தகுந்த சிகிச்சை.

உணவுக் கட்டுப்பாடு, உணர்ச்சிக் கட்டுப்பாடு, நெகோ (Neko) போன்ற சோப்பால் முகம் கழுவுதல் இவை பயன்தரும். பருக்களின் முனையில் சீழ் இருந்தால் டாக்டர் ஆலோசனையின் பேரில் tetracyclin மாத்திரையை தினம்மூன்று வேளைகள் உட்கொள்ளவும்.

உடல் கருமை நிறத்திற்கு மலப்பரிசோதனை செய்து, அதில் அமீபாக் கிருமிகள் இருந்தால் தகுந்த சிகிச்சை செய்து கொள்வதால் பலன் கிடைக்கும்.

இந்த வயதுக்கு மேல் உடல் உயரத்தை அதிகப்படுத்துவது இயலாது.

டி. என். லக்ஷ்மி, சென்னை.

எனக்கு வயது நாற்பத்தெட்டு. சென்ற வருடம் முழுவதும் முதுகுவலி, இடுப்பு வலி ஆகிய தொல்லைகள் இருந்தன. தற்போது மாதவிலக்கு நின்று ஒரு வருடம் ஆகிறது. இப்பொழுது என்னவென்றால், உடல்நிலை தினமும் ஒவ்வொரு விதமாக உள்ளது. அதாவது, ஒருநாள் அதிகப் பசி. மறுநாள் பசியே இருப்பதில்லை, புளி ஏப்பம், அஜீரணம், ஒருநாள் வயிற்றுப் போக்கு, சில நாட்கள் மலச்சிக்கல். பொதுவாக என் உடல்நிலை ஒரே சீராக இல்லை.

டாக்டரிடம் போகாமல் இத்தகைய கோளாறுகளை நீக்க என்ன வழி?

மாதவிடாய் நிற்கும் போது உண்டாகும் தொல்லைகளே இவைகள். மாதவிடாய் நின்று ஓரிரு ஆண்டுகள் வரை இவை நீடிக்கலாம்.

டாக்டரிடம் காட்டி அனீமியா, ரத்தக் கொதிப்பு, டயபெடீஸ், கருப்பை நிலை இவைகளுக்குப் பரிசோதனை செய்து மருந்துகள் எடுத்துக் கொள்ளலாம்.

ஆக்னஸ், திருநெல்வேலி.

என்னுடைய மார்பகங்கள் மிகவும் பெரிதாக இருக்கின்றன. அதனை மிகவும் சிறியதாக்க வழி கூறுங்கள். எனக்கு வயது பத்தொன்பது. சக மாணவிகள் மிகவும் கேலி பண்ணுகிறார்கள். இதனால் சங்கடமாகவும், வெட்கமாகவும் இருக்கிறது.

நீங்கள் ஒரு கைனகாலஜிஸ்டிடம் (திருநெல்வேலி மெடிகல் காலேஜில்) முதலில் மார்பில் ஏதாவது கட்டிகள் (lumps) உள்ளதா என்று நன்கு பரிசோதனை செய்து கொள்வது நல்லது. தகுந்த சிகிச்சையை அவர்களே கூறுவார்கள்.

தமிழ்ச்செல்வி — மன்னை.

டாக்டர் எனக்கு மணமாகி ஒன்றரை வருடங்கள் ஆகின்றன. இன்னும் குழந்தை பிறக்கவில்லை. இரத்தப் பரிசோதனை, கர்ப்பப்பை சோதனை இரண்டும் செய்ததில் கோளாறு எதுவும் இல்லை என்று தெளிவாகியுள்ளது. என் கணவர் எந்தவித டெஸ்டும் செய்து கொள்ளவில்லை. நான் மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்று கூறுங்கள்?

நீங்கள் D & C and Tube-testing இவற்றை ஒரு மகப்பேறு மருத்துவரிடம் செய்து கொள்வது நலம். இது செய்வதனால் ஃபெலோபியன் குழாய்களில் அடைப்பு ஏதாவது இருந்தால் தெரிந்துவிடும். D & C செய்யும்போது endometric scraping எடுப்பதால் கர்ப்பப்பையின் உட்பாகத்தின் கோளாறு தெரிந்துவிடும். உங்கள் கணவருக்கும் விந்துப் பரிசோதனை (Semen test) செய்து அதற்குத் தகுந்த சிகிச்சையை மேற்கொள்ளலாம். ஒரு healthy sperm இருந்தால் கூட கர்ப்பம் தரிக்க வாய்ப்பு உள்ளது.

